# திருவானைக்கா
# அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ்




ஆசிரியர்

**திருவாவடுதுறை ஆதீனம்**
**மகாவித்துவான் தி. மீ. சு. பிள்ளையவர்கள்**

உரையாசிரியர்

**குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப்புலவர். தமிழாகரர்.**
**வித்துவான். க. கதிரேசன் எம். ஏ; பிஎட்**
**பூவாளூர். 621 712**
**அலைபேசி 098651 93754**

# திருவானைக்கா
# அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ்


ஆசிரியர்

**திருவாவடுதுறை ஆதீனம்**
**மகாவித்துவான் தி. மீ. சு. பிள்ளையவர்கள்**

உரையாசிரியர்

**குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப்புலவர். தமிழாகரர்.**
**வித்துவான். க. கதிரேசன் எம். ஏ; பிஎட்**
**பூவாளூர். 621 712**
**அலைபேசி 098651 93754**

# தோரண வாயில்

காவிரி கொள்ளிடம் இரண்டின் இடையில் அமைந்த ஆற்றிடைக்குறையில் - அரங்கத்தில் - திருச்சிராப்பள்ளியை ஒட்டி அமைந்தவை திருவானைக்காவும் திருவரங்கமும் ஆகும். இவற்றுள் சைவத்தலமாகவும் , சத்தி தலமாகவும் விளங்குவது திருவானைக்கா. மற்றது வைணவத்தலமாக விளங்கும் திருவரங்கம் - ஸ்ரீரங்கம்.

திருவானைக்காவில் எழுந்தருளி அருள்பாலிக்கும் அருள்தரு அகிலாண்டநாயகியம்மை; இத்திருக்கோவிலில் எழுந்தருளியுள்ள சிவபரம்பொருளை - செழுநீர்த்திரள் என்று அப்பரடிகளால் போற்றப்பெறும் அருள்தரு வெண்ணாவலீசரை - செம்புநாதப் பெருமானை நாடோறும் உச்சிகாலத்தில் வழிபடுவது தனிச்சிறப்புடையது.

ஐம்பூதத்தலங்களுள் இது நீர்த்தலமாகும்.

இத்தலத்தை நாடிவந்து வழிபட்டுப் பெறுதற்கரிய பேறு பெற்ற தேவர்களும் முனிவர்களும் மிகப்பலர். தவநிலை சிறந்த யானையும் சிலந்தியும் குறிப்பிடத்தக்க சிறப்பினவாகும். நீர்வளமும் நிலவளமும் மிக்க காவாக - சோலையாக விளங்கியதாலும்; இப்பெருமானை யானை வழிபட்டுப் பேறுபெற்றதாலும் இவ்வூர் திரு ஆனைக் கா என்றுபுகழ்பெற்றது.

இத்திருக்கோயில் ஐந்து திருச்சுற்றுகளையுடையது. ஐந்தாவது திருச்சுற்றுமதில் கட்டுமானத்தில் சிவபிரானே சித்தராகவந்து கட்டுமானப்பணியாளர்களுக்குக் கூலியாக வழங்கிய திருநீறே, அவரவர் பணிகட்குத்தக்க பொற்காசுகளாக மாறியது என்பது புராணச் செய்தி. இதனை வலியுறுத்தும் வகையில் இந்த ஐந்தாம் திருச்சுற்றுமதில் திருநீற்றான் மதில்என்று வழங்கப்பெறுகிறது.

இத்திருக்கோயிலின் ஐந்துதிருச்சுற்று விழா - பஞ்சப்பிரகார விழா - புகழ்பெற்றது.

ஆண்டுதோறும் நிகழும் அறுபத்து மூவர்விழாவன்று நாயன்மார் அறுபத்து மூவரும் ஒருசேர எழுந்தருள்வது காண்போரை மெய்சிலிர்க்க வைக்கும் விழாவாகும்.

திருவரங்கத்துக் காளமேகம் ஆகிய மடைப்பள்ளியாளர், அருள்தரு அகிலாண்ட நாயகியம்மையின் அருளால் ஆசுகவியானது இத்தலத்திலேயே ஆகும். தமிழ் இலக்கியவரலாற்றில் குறிப்பிடத்தக்க சிறப்பிடம் பெற்றவர் காளமேகப் புலவர். ஒருசமயம் இரட்டைப் புலவர்கள் ஆரூர் அப்பனை - அருள்தரு திருமூலட்டானரை வழிபடச்சென்றபோது முடவர்; வழக்கப்படிப் பாதிப்படல் பாடும்பொருட்டு;

" நாண்என்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்
பாணந்தான் "

என்றுதொடங்கியவர் தமக்குரிய எஞ்சிய இருசீர்களையும் முன்போல் செறிவாகப் பாட இயலாமையால் இவ்வெண்பாவின் அருமை பெருமை கருதிய அறிஞர்கள் அங்கு இவ்வெண்பாவை இதன் குறையான நிலையிலேயே சுவரில் தீட்டிப்போற்றினர். காலப்போக்கில் அருள்தரு திருமூலட்டானரை வழிபட வந்த காளமேகப்புலவர் இவ்வெண்பாவின் எடுப்பு தொடுப்பு ஆகியவற்றின் தனிச்சிறப்புக்கருதி,

" மண்தின்ற பாணமே - தாணுவே
சீராரூர் மேவும் சிவனேநீ எப்படியோ
நேரார் புரம் எரித்த நேர். "

என்று பாடி, வெண்பாவை நிறைவு செய்து இறைவனை வழிபட்டுப் புறப்பட்டார். இரட்டையர் பாடலையொட்டிச் சிறப்பானமுறையில் காளமேகத்தின் பாடற்பகுதி இருந்ததால் அறிஞர்கள் முன்பு எழுதிய குறைப்பாடலின்கீழ் இதனை எழுதிவைத்து மகிழ்ந்தனர்.

சிலகாலம் கழிந்தபின் புற்றிடங்கொண்ட பெருமானை வழிபடவந்த இரட்டையர்,தமது பாடற்பகுதி மிகச்சிறப்பானமுறையில் நிறைவுசெய்யப்பட்டிருப்பதைக் கண்டு, நிறைவுசெய்தவர் காளமேகப்புலவர் என்பதைக்கேட்டறிந்து அவரைக் காணவிரும்பி, அவர்சென்ற ஊர்கட்கெல்லாம் சென்றும் காணவியலாது மிகமிக வருந்திய நிலை பின்னாளில் காளமேகம் விண்ணாடுஅடைந்ததால் அவர் திருமேனியைச் சுடுகாட்டுத்தீயிடையே கண்டு புலம்பிய வெண்பா வருமாறு :

"ஆசு கவியால் அகில உலகெங்கும்
வீசு புகழ்காள மேகமே - பூசுரா!
விண்கொண்ட செந்தழலில் வேகுதே ஐயய்யோ
மண்தின்ற பாணம்என்ற வாய் "

என்று போற்றிப்பாடி வருந்தி நொந்தனர் என்பது தனிப்பாடல் திரட்டின் மூலம் கிடைக்கும் செய்தியாகும்.

ஆசுகவிக்கு அருள்புரிந்த அம்மை அகிலாண்டநாயகியை மகாவித்துவான் தி. மீ. சு பிள்ளையவர்கள் திருச்சிராப்பள்ளியில் இருந்தகாலமெல்லாம் கனிந்துகனிந்து உருகிஉருகி வழிபட்டவர்கள். இவர், இவ்வம்மையை அகிலாண்டநாயகி மாலை என்ற அருந்தமிழ் நூலினால் மட்டுமன்றி, பிள்ளைத்தமிழாலும் போற்றிப்; பரவியுள்ளார். முன்பு அகிலாண்டநாயகி மாலையின் தேனுண்டு அதில் திளைத்த நாம் இங்கு அருள்தரு அவ்வம்மையைமகாவித்துவான் தி. மீ. சு. அவர்களின் பிள்ளைத்தமிழில் போற்றி மகிழ்வோம்.

பிள்ளையவர்களின் மாணாக்கராகிய தமிழ்த்தாத்தா உ. வே. சா அவர்கள் 1910 இல், திருவாவடுதுறைஆதீனக் குருமகாசந்நிதானம் ஸ்ரீமத் அம்பலவாண தேசிகரவர்கள் விருப்பத்தின்படி, பிள்ளையவர்களின் நூல்களை ஒரேதொகுதியாக வெளியிட்டார். சந்திபிரிக்காத மூலபாடமாக வெளியிட்ட அந்தப்பிரபந்தத்திரட்டே, இவ்வுரையின் மூலபாடமாகும். மூலபாடச் செய்யுள்களைச் சந்திபிரித்து, குறிப்புரை, பொழிப்புரை, இன்றியமையா விளக்கம், இலக்கணக்குறிப்பு ஆகியவற்றுடன் எழுத அருள்புரிந்த திருவருளையும் குருவருளையும் வணங்கி மகிழ்கிறேன்.

பணிவன்புடன்

**குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப்புலவர்**
**வித்துவான் க. கதிரேசன் எம். ஏ; பிஎட்.**

.

# திருவானைக்கா

# அருள்தரு அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ்

### பாயிரம்
### விநாயகர் வணக்கம்

சீருலவு வனசமகள் புரையும்மட வார்கள்இகல் தீர்ந்தோம் எனக்களிப்பச்
செறிஉடுக் கணம்உருவில் புத்தேள் திகைப்பஇது தீங்கவளம் என்று ததிதோய்
காருலவு மாகநடு வண்பொலியும் ஆம்பலம் காதன்மதி மீப்பனைஎழில்
காட்டும்கை நீட்டும்ஒரு கோட்(டு)இரு பதத்திரி கடாக்குஞ் சரத்தை நினைவாம்
கூருலவு கவர்இலை அயிற்படை சுமந்தஎம் கோமான் உடற்கண்வாமம்
கொண்டகொண் டல்குழல் கொவ்வைவாய் வெண்நகைக் கொம்மைமுலை அம்மையைப்பூந்
தாருலவு பொங்கரில் செங்கதிர் மயங்கும்ஒரு சம்புவனம் அமர்தேவியைச்
சகலஅண் டமும்அளிக் கும்பிராட் டியைஉரைசெய் தண்டமிழ் வளம்பெருகவே

**கூட்டுமுறை** : சீருலவு வனசமகள் புரையும் மடவார்கள் உருவில்இகல் தீர்ந்தோம் எனக்களிப்ப, செறி உடுக்கணம் புத்தேள் திகைப்ப; காருலவு மாகநடுவண் பொலியும் ததிதோய் ஆம்பலம்காதன் மதி இது தீங்கவளமென்று மீப் பனைஎழில்காட்டும் ............................ ..........குஞ்சரத்தை நினைவாம்.

**குறிப்புரை** : சீர் உலவு= சிறப்புப்பரவிய - சிறப்புமிக்க. வனசமகள்= தாமரைமலரில் இருக்கும் திருமகள். மடவார்கள்= மகளிர். உருவில்இகல்= தம் முகத்துக்கு ஒப்புமை என்ற பகைமை. உடுக்கணம்= விண்மீன் கூட்டம். புத்தேள்= தெய்வம் - சந்திரன். ததிதோய்= பருவம் நிறைந்த- முழுமையான.. மாகம்நடு= வானத்தின் நடுவில். ஆம்பல் அம்காதன் மதி= ஆம்பல்மலரை மலரச்செய்யும் நிலவு. தீங்கவளம்= இனிய ஒருவாய் உணவு. மீ= மேல். பனை எழில்காட்டும் கை= பனைமரம் போன்ற அழகிய துதிக்கை இருபதத்துஇரி= இரண்டு கால்களுடன் உலவும். கடாம் குஞ்சரம்= மதயானை - விநாயகர். கூர் உலவு கவர்= கூர்மையுடன் பிளவுபட்ட. அயிற்படை= சூலம். எம்கோமான்= எம்தலைவன் - சிவபிரான். வாமம்= இடது பாதி. அம்மையை= தாயை. பூந்தார் உலவு= அழகிய பூங்கொத்துகள் மிக்க. பொங்கரில் செங்கதிர் மயங்கும்= சோலையைக்கடக்க இயலாமல் செஞ்ஞாயிறு தடுமாறும். சம்புவனம்= நாவல்மரக் காடு - திருவானைக்கா. தேவி= அருள்தரு அகிலாண்ட நாயகியம்மை. அளிக்கும்= காக்கும். உரைசெய்= போற்றும்.

**பொழிப்புரை** : கூரிய பிளவுபட்ட அலகுடைய சூலப்படை ஏந்திய எமது தலைவனின் - சிவபிரானின் உடம்பினது இடது பாதியில் இடம்கொண்டவள் ஆகிய, கார்மேகம் போன்ற கூந்தலும், கொவ்வைக்கனி ஒத்த இதழ்களும், வெண்மையான பற்களும், பருத்த முலைகளும் உடைய எமது தாயை; அழகிய பூங்கொத்துகள் மிக்க உயரமான சோலை தடுப்பதன் காரணமாக மேற்கில் செல்லத்தடுமாறும் ஒப்பற்ற நாவற்காட்டில் - சம்புவனத்தில் - எழுந்தருளுளியுள்ள தலைவியை, அண்டங்கள் அனைத்தையும் காக்கும் தலைவியாகிய அருள்தரு அகிலாண்ட நாயகியைப் போற்றும் தண்டமிழ்நூல் வளத்தில் பெருக;

சிறப்பு மிக்க தாமரையில் வாழும் திருமகள்போன்ற மகளிர் தம்முகத்துக்கு எதிரியாக உவமைகாட்டப்பெறும் நிலவின் பகைமை ஒழிந்தோம் என்று களிப்புக்கொள்ளவும், கூட்டமாய்க்கூடிய விண்மீன் கூட்டத்தில் அழகுடன் விளங்கும் தெய்வம் ஆகிய சந்திரன் திகைப்பவும், மேகம் தவழும் வானத்தின் நடுவில் பொலிவதும், ஆம்பல் மலர்மேல் காதலால் அதனை மலர்த்துவதும் ஆகிய முழுமதியை, இது இனிய நமதுஒருவாய் உணவு என்று அதன்மேல் தனது பனைமரம்போன்ற அழகிய துதிக்கையை நீட்டுகிற ஒற்றைக்கொம்புடனும், இரு கால்களுடனும் உலவும் மதயானையாகிய விநாயகரை நினைத்து வணங்குவோம்.

**விளக்கம்** : மகளிரின் அழகிய முகத்துக்கு உவமையாகக் காட்டப்பெறுவது நிலவு. பொருளாகிய முகத்தினும் உவமை சிறந்ததாதல் வேண்டும் என்பார் தொல்காப்பியர். " உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை " என்பது தொல்காப்பியநூற்பா எண் 1224. தம்முகத்துக்கு உவமையாக அமைந்ததால் மகளிர், தமக்கு எதிரியாக - பகையாகக் கருதிய நிலவை ஒற்றக்கொம்பன் - விநாயகர், கவளமாகக் கருதிவிழுங்கக்கைநீட்டியதால் பகை ஒழிந்தது என்று மகளிர் களித்தனர். நிலவின் வருகையால் ஆம்பல்மலர் மலர்வது கருதி, நிலவை ஆம்பலின் காதலன் என்றார். நாவற்காட்டு - சம்புவனம் நாவல்

மரங்கள் மிகஉயரமாக வளர்ந்து சூரியனின் போக்கைத் தடுத்ததால் மேற்செல்ல வழிதேடி சூரியன்மயங்கினான் என்றார்.

இச்செய்யுள் முத்தொள்ளாயிரத்தில் வரும்

" வீறுசால் மன்னர் விரிதாம வெண்குடையைப்
பாற எறிந்த பரிச்சயத்தால் - தேறாது
செங்கண்மாக் கோதை சினவெங் களியானை
திங்கள்மேல் நீட்டும்தன் கை "

என்ற பாடலை ஒருபுடை நினைவூட்டுகிறது.

**இலக்கணக்குறிப்பு** : " பூந்தார் உலவு பொங்கரில் செங்கதிர் மயங்கும் ஒருசம்புவனம் " - என்றது தற்குறிப்பேற்றவணி.

**பரசிவ வணக்கம்**

தெள்அமு(து) உடல்கூன் மதிக்குழவி கொட்டவெந் தீயநஞ்(சு) அரவுகொட்டச்
சேர்ந்(து)அசைக் கும்சடை முடித்(து)அண்டம் இடியச் சினந்(து)ஒலிக் கும்துடித்துப்
பள்ளவட வைக்கனல் தூங்குநிரி யாணப் பருங்கறை அடித்(து)உரித்து
பாய்உழைக் கைத்துமுத் தலைசேர் படைத்துவெண் பலிகொள் இருநான்கு
கள்அவிழ் இதழிப்பூந் தொடைத்துநுதல் நாறுசெங் கட்டுமண் தொட்டகருமாக்
காண அரி தாகும்இரு தாட்(டு)எது அதைப்பணிபு கைகுவிப் பேம்ஆறுகால்
புள்அமர் மலர்த்தெரிய லார்தவள மாடம்மீப் போய்மதியை வான்யாற்றுவெண்
பூங்குமுத மலர்எனக் கைநீட்டு காவைஅம் பூந்தோகை யைப்பாடவே.

**குறிப்புரை** : கூன் உடல் மதிக்குழவி தெள் அமுது கொட்ட= வளைந்த உடம்புடைய மூன்றாம் பிறை தெளிந்த அமுதைச் சொரிய. அரவு வெந் தீய நஞ்சு கொட்ட. சேர்ந்து அசைக்கும்= ஒருசேரக் கட்டிய. சடை முடித்து= சடையினைக் கட்டி. இடிய= இடியுமாறு. ஒலிக்கும்= பிளிரும். துடிக்கும்= துள்ளிவரும். பள்ளவடவைக்கனல்= மிகத்தங்கிய வடவைக்கனல்= ஊழித்தீ. தூங்கு= தங்கிய. நிரியாணப் பரும் கறை= கடைக்கண் உள்ள யானை. அடித்து உரித்து= கொன்று தோலைஉரித்து. பாய் உழைக்கைத்து= பாயும்மான் பிடித்த கையில் . முத்தலை= சூலம். வெண்பலி= வெண்மையான திருநீறு. இருநான்கு= எண்தோள். கள் அவிழ் இதழிப்பூந்தொடைத்து= தேன் சுரக்கும்கொன்றைமலர் மாலைஉடையது. நாறு= ஒளிரும். செங்கட்டு= தீவடிவான சிவந்த கண்களையுடையது. பணிபு= வணங்கி. ஆறுகால் புள்= வண்டினம். தெரியலார் மலர்சூடிய மகளிர். தவள மாடம் மீப்போய்= ஒளியுடைய மாடியின் மேல்ஏறி. மதியை = முழுநிலவை. வான்யாற்று வெண்குமுதமலர் எனக் கைநீட்டு. வான்யாறு= வானதியில் - வானுலகக் கங்கையில். வெண்பூங் குமுத மலர்= பூத்த வெள்ளாம்பல் மலர். கைநீட்டும்= பறிக்கமுயலும். காவை= திருஆனைக்கா. பூந்தோகையை= அழகிய மயில்போன்ற அருள்தரு அகிலாண்ட நாயகியம்மையை..

**பொழிப்புரை** : ஆறுகால் வண்டுகள் மொய்க்கும் மலர்மாலை சூடிய மகளிர், ஒளியுடைய மாடியின்மேல் ஏறி, வானத்து நிலவை வான்நதியாகிய கங்கையில் பூத்தவெண்மையான அழகிய மலரென்று பறிக்கக் கை நீட்டும் திருவானைக்காவில் எழுந்தருளியுள்ள அழகிய மென்மையான மயில்ஒத்த அருள்தரு அகிலாண்ட நாயகியைப் போற்றிப்பாட ;

அமுதம் சொரியும் வளைந்த உடம்புடைய மூன்றாம்பிறையையும், கொடிய தீய நஞ்சு உமிழும் பாம்பினையும் ஒருசேரக் கட்டிய சடையினை முடித்து, அண்டம் இடிபடச் சினந்துமுழங்கி வரும் வடவைக்கனல் மிகத்தங்கிய கடைக்கண் கொண்ட யானையைக் கொன்று அதன்தோலை உரித்ததும், பாய்கிற மான் ஏந்தியதும் , முத்தலைச் சூலம்பிடித்ததும் ஆகியகையுடையதும், வெண்மையான திருநீறு பூசிய எட்டுத்தோள்களில் தேன் சொரியும் கொன்றைமாலை தரித்ததும், நெற்றியில் ஒளிரும் கண்ணுடையதும், திருவடிகாணப் பூமியைத்தோண்டிச்சென்ற கரியபன்றியாகிய திருமாலால் காணவியலாத திருவடிகளைப் பெற்றதும் எதுவோ அதை - அப்பரமசிவத்தைப் வணங்கிக் கைகுவிப்போம்.

**இலக்கணக்குறிப்பு** : உரித்து, கைத்து, படைத்து, தொடைத்து, செங்கட்டு - இவற்றின் ஈற்றில் வரும் து, டு ஆகியன முப்பால் ஒருமைத் தன்மை வினைமுற்று, குறிப்புவினை முற்றுவிகுதிகள் ஆகும். ( நன். சூ. 331 ) பாய் உழை - வினைத்தொகை.



**பராசத்தி வணக்கம்**

(வேறு )

வெள்ளநெடும் சடைமுடித்தார் உடலப்பாதி வியந்துகவர்ந்(து) உலகம்எலாம் அளித்(து)அன் பானோர்
உள்ளம்முழு வதும்கவர்ந்து கொள்ளாநிற்கும் ஒருத்திபொற்றாள் அருத்திகொண்(டு) இருத்தி நிற்பாம்
அள்ளல்எழும் முள்ளரைப்பூங் கமலக்காட்டில் அளிகள்இழிந்(து) உழு(து)உழக்க வழிதேன் ஆறு
தெள்அமுதக் கடல்மடுக்கும் காவைமேவும் சிவஞானப் பிராட்டிதமிழ் செழிக்க என்றே.

**குறிப்புரை** : வியந்து= மதித்து. அளித்து= காத்து. கொள்ளாநிற்கும்= கொண்டுவாழ்கிற. ஒருத்தி= ஒப்பற்ற பராசத்தி. அருத்தி= ஆசை. அள்ளல்= சேறு. அரை முள்= இடையில் - தண்டில் முள்ளுடைய. அளிகள்= வண்டினம். இழிந்துவந்து= பறந்துவந்து அமர்ந்து, உழக்க= மிதிக்க. மடுக்கும்= நிறைக்கும்.

**பொழிப்புரை** : சேற்றில் முளைக்கும் தண்டில் முட்கள்பெற்ற தாமரைக்காட்டிற்கு வண்டினம் பறந்துவந்து அமர்ந்து, உழுது கால்களால் மிதிக்கப் பெருகும் தேனாறு, தெளிந்த அமுதக் கடலாக நிறைக்கின்ற திருவானைகாவில் எழுந்தருளியுள்ள சிவஞானமே தன்வடிவாக்கொண்ட அருள்தரு அகிலாண்டநாயகியை போற்றும் பிள்ளைத்தமிழ் செழிக்கும்பொருட்டு;

கங்கை வெள்ளத்தைத் தன் சடையில் தாங்கிய சிவபிரான் உடலின் இடதுபாதியைக்கவர்ந்துகொண்டு, அனைத்து உலகையும் காத்து, அடியவர்களின் மனம்முழுவதையும் கவர்ந்துகொண்டுவாழ்கின்ற ஒப்பற்ற பராசத்தியின் மிகச்சிறந்ததிருவடிகளை ஆசையுடன் மனத்தில் இருத்துவோம்.

**இலக்கணக்குறிப்பு** : கொள் + ஆநிற்கும் = ஆநிற்கும் - நிகழ்கால இடைநிலை.

( 4 ) **விநாயகர் வணக்கம்**

கோமேவு மதில்ஒருமூன்(று) எரிக்குஞான்(று)எம்
குனிமதிசெஞ் சடைச்செருகும் பெருமான் அன்பர்
நாமேவு தமிழ்க்(கு)ஒருபூங் கொடிபால் தூது
நடந்தநா யகன்விநா யகனென்(று) ஏத்தி
மாமேவு கதிர்கால்தேர் நடத்துமாறு
வரும்அடிகள் திருவடிகள் வணக்கம் செய்வாம்
பூமேவு திருக்காவை மேவு ஞானப்
பூங்கோதை பாடல்வளம் பொலிய என்றே.

**கூட்டுமுறை** : பூமேவு திருக்காவை ........பொலிய என்றே, அன்பர் நாமேவு தமிழ்க்கு ..........நாயகன், கோமேவு .........பெருமான், மாமேவு .........வரும் அடிகள் விநாயகனென்று ஏத்தி, திருவடிகள் வணக்கம் செய்வாம்.

**குறிப்புரை** : பூமேவு= பொலிவுபொருந்திய. திருக்கா= திருவானைகா. அன்பர்= சுந்தரர். பூங்கொடி= பரவையார். நாயகன்= தலைவன் - சிவபிரான். கோமேவு மதில்= பொன், செம்பு, இரும்பினால் ஆன தலைமை சான்ற முக்கோட்டை. குனிமதி செஞ்சடை செருகும் பெருமான்= வளைந்த மூன்றாம் பிறையைச் சடையில் வைத்த சிவபிரான். மாமேவு= பெருமை பொருந்திய. கதிர் கால் தேர்= சூரிய சந்திரரைச் சக்கரங்களாகக் கொண்ட பூமியாகியதேர். நடத்துமாறு வரும்= செலுத்தும்பொருட்டு அருளிய. அடிகள்= விநாயகர்.

**பொழிப்புரை** : பொலிவுபொருந்திய திருவானைக்காவில் எழுந்தருளியுள்ள ஞானப்பூங்கோதையாகிய அருள்தரு அகிலாண்டநாயகியைப் போற்றும் பிள்ளைத்தமிழில் வளம் பொலியும்பொருட்டு; சுந்தரர் பாடும் தமிழ்ப்பாடலுக்காக ஒப்பற்ற பரவை நாச்சியாரிடம் தூதுசென்ற தலைவனாகிய, தலைமை சான்ற முப்புரங்களை எரிக்கப்புறப்பட்டவனாம் வளைந்த மூன்றாம்பிறையினைச் சடையில் தரித்த சிவபிரான், தனது பெருமைபொருந்திய ஞாயிறு திங்கள் ஆகியவற்றைச் சக்கரங்களாகக் கொண்டதேரினைச் செலுத்தும் பொருட்டு அருளிய விநாயகனைப் போற்றி அவன் திருவடிகளை வணங்குவோம்.

**விளக்கம்** : தன்னை நினைத்தபின் சிவபிரான் தேரேறி முப்புரஎரிக்குப் புறப்படாததால் விநாயகர் அத்தேரின் அச்சினை முறித்ததாகவும் அவர்தன்னை நினைத்தபின் தேர்க்காலினைச் சீர்செய்ததாகவும் புராணம் கூறுகிறது. இதனை உட்கொண்டதே இச்செய்யுளின் மூன்றாம் அடி. " முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம் அச்சது பொடிசெய்த அடிதீரா " ( கைத்தலம் நிறைகனி. திருப்புகழ் )

( 5 ) **சுப்பிரமணியர் வணக்கம்**

**வேறு**

இரசத விலங்கல்மிசை ஒழு(கு)அருவி புரையஈ
ரிருமருப்(பு) ஆம்பல்மாறா(து)
இழிமுக் கடாம்பொழிய மென்சினைப் பைந்தரு
இளங்காடு நறவுபொழிய
சுரபிபல் வளன்பொழிய ஏமஉல(கு) ஆளும்ஒரு
தோன்றல்மனை யாட்டிகண்டம்
தூழுமங் கலநாண் அறா(து)உறை கழித்துவேல்
தொட்டவனை அஞ்சலிப்பாம்
உரகம்வல் விலங்குதுடி நவ்விமுதல் அமலர்மேல்
உரறிவரு காலையில்தன்
ஒளிர்அவ யவங்களில்ஒவ் வொன்றுகண்(டு) ஒவ்வொன்(று)
ஒதுங்கிஅவர் கைஅடையஅப்
பரமரிடம் அகலா(து) இருந்ததுணை யைப்பைம்
பசுந்தோகை யைக்காவைவாழ்
பச்சைப்ப சுங்கிளியை வாழ்த்தும்என் நாவுரைசெய்
பாடலில் வளம்பெருகவே

**குறிப்புரை** : இரசதவிலங்கல்= பொன்மலை - மேருமலை. புரைய= போல. ஈர் இருமருப்பு= நான்குதந்தம். ஆம்பல்= (இந்திரனின்) யானையாகிய ஐராவதம். இழிமுக்கடாம்= இறங்கும் மும்மதம். பைந்தரு= கற்பகமரம். நறவு= தேன். சுரபி= காமதேனு. ஏமஉலகு= பொன் உலகு - தேவருலகம். தோன்றல்= இந்திரன். மனையாட்டி= மனைவி - இந்திராணி. உறை கழித்து= இருப்பிடத்திலிருந்து எடுத்து. தொட்டவனை= வீசிய முருகனை. உரகம்= பாம்பு. வல்விலங்கு= கொடியபுலி. நவ்வி= மான். துடி= உடுக்கை. அமலர்=இயல்பாகவே மலமில்லாத சிவபிரான். உறரிவருகாலை= மிகச்சினந்து வரும்போது. கண்டு= அமைய.. துணையை= ஐந்தொழிலுக்குத்துணையான அம்மையை.

**பொழிப்புரை** : பாம்பு, கொடிய புலி, உடுக்கை, மான்முதலியன, இயல்பாகவே மலமில்லாத சிவபிரான்மேல் மிகச்சினந்துவந்தபோது, தனது ஒளிபொருந்திய உறுப்புகளில் ஒவ்வொன்று அமையவும், ஒவ்வொன்று அவர் கையினை அடையவும்; , அந்த மேலான சிவபிரானை அகலாது இருந்து ஐந்தொழிலுக்குத் துணையானவளை, அழகிய பசியமயிலாக இருப்பவளை, திருவானைகாவில் எழுந்தருளியுள்ள மிகப்பசிய கிளியை - அருள்தரு அகிலாண்ட நாயகியை வாழ்த்தும் என்நாகூறும் பாடலில் வளம்பெருகும் பொருட்டு ;

பொன்மலையாகிய மேருமலையில் இருந்து இறங்கும் அருவியைப்போல, நான்கு தந்தங்களுடைய அயிராவதயானை குறைவில்லாத மும்மதம் பொழிய, மென்மையான கிளைகளுடைய பசியகற்பகமரத்து இளங்காடு தேனினைப்பொழிய, காமதேனு பலவளங்களை மிகுதியாக வழங்க உள்ள பொன்னுலகாகிய தேவருலகாளும் தேவேந்திரனின் மனைவி இந்திராணியின் கழுத்தில் அணிந்த மங்கலநாண் அறாதுதங்க, ( தேவேந்திரன் உயிருடன் வாழ ) வேலினை அதன் இடத்திலிருந்து எடுத்துஎறிந்த முருகப்பெருமானை வணங்குவோம்

( 6 ) **நந்திதேவர் வணக்கம்**

புள்ஏறு நேமியம் படையுடைக் குரிசிலும் பூந்தவிசுஉ கந்துளோனும்
பொதுளும் சினைத்தரு நிழல்கோனும் அமரரும் புகல்தவரும் எம்கோன்அவைக்
குள்ஏறு மாறுதவ னச்சிறிய வாய்மொழி உரைத்(து)அடரும் வேளைஅவர்வாள்
ஓங்குமணி முடிசிதற வேத்திரப் படைஎடுத்(து) ஓச்சுவா னைத்துதிசெய்வாம்
முள்ஏறு தாள்பா சடைக்கமல வாவியின் முழங்கியவ ரால்வெடிகொள
மோட்(டு)எருமை பாயும்ஒலி கேட்(டு)உளம் நடுங்கிஅலை முந்நீர் மடுத்துமடவார்
கள்ஏறு பைந்தொடைகொள் ஐம்பால் கடுக்கக் கறுத்தமுகில் வரையின்ஏறும்
காவைப் பிராட்டிக்(கு) உரைக்கும்எம் சிறியபுன் கவிஅவள் செவிக்(கு)ஏறவே.

**குறிப்புரை** : புள்= கருடன். நேமி= சக்கரப்படை. குரிசில்= திருமால். பூந்தவிசு= தாமரை இருக்கை. உகந்துளோன்= விரும்பிவாழும் நான்முகன். பொதுளும்= தழைத்த. சினைத் தரு= கிளைகளுடைய கற்பகமரம். கோன்= தேவேந்திரன். புகல் தவர்= புகழத்தக்க தவத்தோர். ஏறுமாறு= செல்ல. தவனம்=

விருப்புடன். தவனம் ஏறுமாறு என்று மாற்றிக்கூட்டுக. அடரும் வேளை= நெருக்கி நிற்கும் பொழுது. வாள் ஓங்கு= ஒளிமிக்க. வேத்திரம்= பிரம்பு. ஓச்சுவானை= ஓங்கும் நந்திதேவரை. தாள்முள் ஏறு= தண்டில் முட்கள் பொருந்திய. பாசடை= பசிய இலை. முழங்கிய= எங்கும் திரிந்த. வெடி= அச்சம். மோட்டு எருமை= உயர்ந்த எருமைமாடு. அலைமுந்நீர்= அலைகளுடைய கடல். மடுத்து= பருகி. கள் ஏறு பைந்தொடை= தேன்மிக்க வளமான மாலை. ஐம்பால்= ஐவகையாக முடிக்கப் பெறும் கூந்தல். கடுக்க= ஒப்ப. முகில் வரையின் வரையின் ஏறும்= மேகம் மலையில் ஏறிப் படரும். முகில், உளம்நடுங்கி அலைநீர் மடுத்து ..........வரையின் ஏறும் என்று கூட்டுக.

**பொழிப்புரை** : தண்டில் முட்கள்பொருந்தியதும், பசிய இலைகளுடையதும் ஆகிய தாமரைமலர்கள் மலர்ந்த குளத்தில் எங்கும் திரிந்த வாளைமீன் பாய்ந்த ஒலிகேட்டு, உயர்வுபொருந்திய எருமைமாடு அஞ்சிப்பாய, அதனால்மனம் நடுங்கிச் சோலையில் உள்ள மேகம் அலைகளுடைய கடல்நீர்பருகி, தேன்மிக்க வளமான மாலை சூடிய மகளிரின் ஐந்துவகையாக முடிக்கப்பெறும் கூந்தல் போல் கருமைநிறம்கொண்டு மலைக்கண் ஏறிப்படரும். இத்தகு திருவானைகாவில் எழுந்தருளியுள்ள அருள்தரு அகிலாண்டநாயகியைப் போற்றியுரைக்கும் எனது சிறிய அற்பமான பாடல்கள் அவளது செவிஏறும்பொருட்டு;

கருடனில் ஏறிவரும் சக்கரப்படையுடைய திருமாலும், தாமரை இருக்கையை விரும்பும் நான்முகனும், தழைத்த கிளைகளுடைய கற்பகநிழலில் வாழும் இந்திரனும், தேவர்களும், புகழத்தக்க தவத்தோரும் விருப்புடன் உள்ளே செல்ல நெருக்கியடித்து நிற்கும்போது, சிலசொல்சொல்லி, அவர்களின் ஒளிமிக்க கிரீடமணிகள் சிதறுமாறு அடிக்கத்தனது பிரம்பினை ஓங்கும் நந்திதேவரை வணங்குவோம்.

**விளக்கம்** : மீன்பாய் ஒலியால் எருமை அஞ்சிப்பாய, அதனால் சோலையிலுள்ள மேகம் அஞ்சி, அஞ்சியவன் தன்அச்சம்தீர நீர்பருகி அச்சந்தீர்தல்போல் கடல்நீர் பருகிக் கறுத்து மலைமேல் ஏறிப்படர்ந்தது என்றார். இங்கு இவை ஒன்றுக்கொன்று முறையே காரணமாகவும் காரியமாகவும் அமைந்த அழகு நோக்கத்தக்கது.

ஐம்பால்= ஐவகையாகப்பிரித்து முடிக்கப்பெறுவது - கூந்தல். கொண்டை, குழல், பனிச்சை, சுருள், முடி என்று ஐவகையாக முடிக்கப்பெறும் கூந்தல்.

**இலக்கணக்குறிப்பு** : முந்நீர், ஐம்பால் - அன்மொழித்தொகைகள்.

( 7 ) **திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்**

தீஏறு கைத்தலத்(து) ஐயர்அரு ளால்பொருவில் சிரபுர மறைச்செல்வர்இல்
சிவபாத இருதயர்தம் மதலையாய் ஞானம் தெவிட்டஉண்(டு) ஆண்பனைஎலாம்
காய்ஏற அரவின்வாய் முள்எயிற்(று) அழிகொடுங் கடுஏற வீந்தஒருவன்
கடத்தில்உயிர் ஏறவளவன் திருமகட்(கு)உள் களிப்(பு)ஏற மதுரைநகர்வாய்ப்
பாய்ஏறும் இடையுடை முடைப்பறி தலைச்சமணர் பதறவிடும் ஏடுகனலில்
பைம்பசப்(பு) ஏறஒரு குடிஞைஎதிர் ஏறஅப் பதகர்வலி யக்கழுவினில்
போய்ஏற இனியபதி கம்பாடும் ஐயன்அடி போற்றுவாம் வெண்ணாவல்எம்
புண்ணியன் இடப்பாகம் நண்ணிய பிராட்டியைப் புகழும்எம் கவிதழையவே.

**குறிப்புரை** : ஐயர்= தலைவன் - சிவபிரான். பொருவில்= ஒப்பற்ற. சிரபுரம்= சீர்காழி. இல்= வீட்டில். மதலை= மகன். தெவிட்ட= தேக்கிட. காய்ஏற= காய்க்க. முள்எயிற்று= கூரியபல். அழி கொடும் கடு= கொல்லும் கொடிய நஞ்சு. வீந்த ஒருவன்= இறந்த ஒருவன். கடம்= உடம்பு. உள்களிப்பு ஏற= முயலகன் நோய் தீர்ந்து மனம்மிகக்களிக்க. பாய் ஏறும் இடை= இடையில் பாயினைக்கட்டிய. முடை= கெட்ட நாற்றம். பறிதலை= மயிர் பறித்த தலை. பசப்பு= பசுமை. குடிஞை= ஆறு. பதகர்= பாதகர். ஐயன்= தலைவராகிய திருஞானசம்பந்தர். வெண்ணாவல் புண்ணியன்= வெண்ணாவல் நிழலில் எழுந்தருளிய திருவானைக்கா இறை.

**பொழிப்புரை** : திருவானைக்காவில் வெண்ணாவல் மரநிழலில் எழுந்தருளிய புண்ணியனாகிய இறைவனது இடப்பாகத்தில் பொருந்திய அருள்தரு அகிலாண்ட நாயகியைப் புகழும் எனது கவிதை தழைக்கும்பொருட்டு;

கையில் தீஏந்திய சிவபிரான் அருளால் சீர்காழி மறைவல்லார் வீட்டில் சிவபாதஇருதயர்க்கு ஒப்பற்ற மகனாய்ப் பிறந்து, சிவஞானத்தைத் தேக்கிடுமாறு பருகி, ஆண்பனைகள் பெண்பனைகளாகிக் காய்க்கவும்; பாம்பின் கூரியபல் தீண்டக் கொல்லும் கொடிய நஞ்சுஏற இறந்த ஒருவன்உடம்பு உயிர்பெறவும், பொன்னி

வளவன் மகள் முயலகன்நோய் தீர்ந்து மிகக்களிக்கவும், மதுரைநகரில் தமதுஇடுப்பில் பாயினைக்கட்டிக் கொண்டவர்களும், உடம்பில் கெட்டநாற்றம் வீசவாழ்கிறவர்களும், தலைமுடியினைப் பறித்துக் கொள்கிறவர்களும் ஆகியசமணர் பதற்றமுற, கனலில் இட்ட தனதுஓலை வேகாது பசுமையுடன் விளங்கவும் ஆற்றில் இட்ட ஒருஏடு ஆற்றை எதிர்த்துச்சென்று கரையேறவும் அந்தப்பாதகராகிய சமணர் உடன்படிக்கையின்வண்ணம் தாமே கழுவில் ஏறவும் இனிய பதிககங்கள் பாடிய தலைவராகிய திருஞானசம்பந்தரின் திருவடிகளை வணங்குவோம்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் சொல்பொருள் பின்வருநிலை அணியுடையது.

( 8 ) **திருநாவுக்கரசுநாயனார் வணக்கம்**

அருங்கலை விளங்குதிரு வாமூரில் ஓங்குவே ளாண்குலப் புகழனாருக்(கு)
அணிதிலக வதியார் உதித்தபின் உதித்(து)அறமில் அமணர்இடும் அலைஎறிபெரும்
கருங்கடல் கடந்(து)உலகம் முழுதும்ஒரு கழலால் கடக்கும்ஓர் இலச்சினையுடன்
கவர்இலைவை வேல்இலச் சினையும்இரு தோள்கண் கலந்(து)இடப் பெற்(று)எனயும்ஆள்
இருங்கருணை யார்வீழி மிழலையில் பொற்பீடம் எறிகா(சு) எடுத்ததிருவாக்(கு)
என்கோன்அ டித்தலம்வ முத்துவேன் கோட்(டு)எயிலில் இட்டகொடி முட்டநெடுவான்
வரும்கலை மதிக்குடல்கி ழித்துஇழியும் அமுதம்மணி மறுகுபெரு கிக்கிடங்கர்
வாய்மடுக் கும்காவை அம்மைக்(கு) உரைக்கும்என் வாய்த்தமிழ் வளம்பெருகவே.

**குறிப்புரை** : அறம் இல்= அறநெறியில் வாழாத. கருங்கடல்= கொடியகடல். ஒருகழல்= ஒப்பற்ற வீரக்கழல் அணிந்த திருவடி. கவர் இலை வை வேல்= மூன்றாகப் பிளவுபட்ட அலகுடைய கூரிய சூலம். இருங்கருணையார்= பெரிய கருணையுடைய வீழிநாதர். பீடம் எறி பொற்காசு= பீடத்தில் வைத்த பொற்காசு. எம்கோன்= எம்தலைவனாகிய திருநாவுக்கரசர். எயிலில் கோட்டு= கோட்டைமதிலின் உச்சியில். நெடுவான் முட்ட. கலைமதி= முழுநிலா. மணிமறுகு= அழகிய வீதி. கிடங்கர் வாய்மடுக்கும்= அகழியை நிரப்பும்.

**பொழிப்புரை** : மதிலின் உச்சியில் கட்டிய கொடி உயரத்தில் உள்ள வானினைமோத, அதனால் அங்கு ஊர்ந்துவரும் முழுநிலவின் வயிறு கிழிபட அதன்வழியே இறங்கும் நிலவின் அமுதம் அழகிய வீதியில் பெருகி அகழியை நிரப்பும் திருவானைக்கா அருள்தரு அகிலாண்ட நாயகியைப்போற்றும் என்வாய் பாடும்தமிழ் வளம்பெருகும்பொருட்டு;

அரியகலைகள் விளங்கும் திருவாமூரில் சிறந்த வேளாளர் குலத்தில் புகழனாருக்கு, அழகிய திலகவதியார் பிறந்தபிறகு பிறந்து, அறநெறியில் வாழாத சமணர் அலைவீசும் பெரிய கொடிய கடலில் கல்லொடு பிணித்து இட்டபோது அந்தக்கொடிய கடலினைக்கடந்தும், உலகம் முழுவதையும் - பிறப்பினை-கடக்கும் ஒப்பற்ற வீரக்கழல் அணிந்த திருவடிஇலச்சினையுடன், மூன்றாகப் பிளவுபட்ட அலகுடைய கூரிய சூலஇலச்சினையையும் இருதோள்களிலும் கலந்துபெற்று, அற்பமான என்னையும் ஆள்கின்ற பெருங்கருணையுடைய திருவீழிமிழலை வீழிநாதர் தனது பீடத்தில் வைத்த பொற்காசு பெற்றுப் பஞ்சம் போக்கிய எம்தலைவனாகியதிருநாவுக்கரசரின் திருவடிகளை வணங்குவோம்.

( 9 ) **சுந்தரமூர்த்திநாயனார் வணக்கம்**

மங்கலம் பொலிநாவ லூர்மறைச் சடையனார் மகவாய் உதித்(து)எம் இறைவன்
மணம்விலக்(கு) ஆவணம் காட்டிட அருள்துறையுள் வந்(து)அருட் டுறையவளாய்க்
கொங்கலர் குழல்பரவை குயம் அணைத்(து) இனியதமிழ் கூறிஉடல் கொண்டுமுதலை
கொண்டபொருள் மீட்டுக் கடாத்திரி நடாத்தும்எம் கோமானை அஞ்சலிப்பாம்
செங்கமல அங்கையில் இலங்கிழைகொள் மங்கையர் திரட்சிஅம் மனைஎடுத்துச்
செறிசுடர்கொள் நவமணி குயிற்றுமணி மாடமேல் சென்றிருந்(து) ஓச்சஅமரர்
தங்கள்அர(சு) ஊரும்முத் தானமலை கவளம்இது தான்என நெடுங்கைநீட்டும்
தண்காவை அம்பிகைக்(கு) அடியேம் உரைக்கும்ஒண் தமிழ்வளம் மிகப்பெருகவே.

**குறிப்புரை** : மணம் விலக்கு= திருமணத்தை விலக்கும். ஆவணம்= ஓலை. அருள்துறையவளாய்= அருள்துறைப்பெண்ணாகிய. கொங்குஅலர்= மணக்கும் மலர். குயம்அணைத்து= முலைபொருந்தி - மணந்து. முதலை கொண்ட பொருள் உடல் மீட்டு= முதலை விழுங்கிய பொருளாகிய சிறுவனது உடலினை மீட்டு. கடாத்திரி நடாத்தும்= வெள்ளானைமேல் கயிலக்குச் சென்ற. இலங்குஇழை கொள்மங்கையர் செங்கமல

அங்கையில். குயிற்று= பதித்த. ஓச்ச= எறிய. அமரர்தங்கள் அரசு= தேவேந்திரன். ஊரும்= ஏறிவரும். முத்தானம்மலை= மும்மதமுடைய ஐராவதயானை. கவளம்= சோற்று உருண்டை. நெடுங்கை= துதிக்கை.

**பொழிப்புரை :** ஒளிரும் அணிகள் அணிந்த மகளிர், தமது தாமரைமலரொத்த அழகிய கையால் அம்மனைக்காயினை விளையாட எடுத்துக்கொண்டு, மிக்க ஒளிவீசும் நவமணிகள் பதித்த அழகிய மாடத்திற்குப்போய் அங்கிருந்து அம்மனையை மேலே எறிய, தேவேந்திரனின் மும்மதத்து ஐராவதயானை அதுதனக்குரிய உணவுக் கவளம் என்று பிடிக்கத் துதிக்கை நீட்டும் சிறப்புடைய தண்ணிய திருவானைக்காவில் எழுந்தருளியுள்ள அருள்தரு அகிலாண்டநாயகியை அடிவனாகிய நான்போற்றும் ஒளிபொருந்திய பிள்ளைத்தமிழில் வளம்மிகப்பெருகும்பொருட்டு;

மங்கலம் பொலியும் திருநாவலூர் மறையவரான சடையனாருக்கு மகனாகத்தோன்றி, எம் இறைவனாகிய சிவபிரான் திருமணத்தை விலக்க, ஓலை காட்டிட அருள்துறையுள் வந்தும், அந்த அருள்துறையின் பெண்ணாகிய, தனது கூந்தலில் மணக்கும்மலர் சூடியபரவையாரை மணந்து ,” உரைப்பார் உரை “ என்ற பதிகம்பாடி முதலைவிழுங்கிய பொருளாகிய சிறுவனை மீட்டுத்தந்து, மதயானையாகிய வெள்ளானைமேல் ஏறிக்கயிலை சென்ற தலைவனாகிய சுந்தரரை வணங்குவோம்.

( 10 ) மாணிக்கவாசக சுவாமிகள் வணக்கம்

கடிமதில் வளைத்தகூ டல்தேன் பிலிற்றும்ஒண் கண்ணிநிம் பற்(கு)இருமையும்
காட்டிவெம் புத்தர்களை ஓட்டிஎம் கோன்செவி களிக்க வாக்(கு) அமுதம்ஊட்டி
முடிவில்பர மானந்த வெள்ளத் திரைக்கடலுள் மூழ்கித் திளைத்திருந்த
முதல்வர்நம் திருவாத வூரடிகள் அடிகளை முடிக்(கு)அணிய(து) ஆக்கிநிற்பாம்
துடிஇடை நயம்கண்டு ஒதுங்கிமா சுணம்மண் சுமக்கமுதி ராஇளமுலைத்
துணைகண்(டு) உடல்சிலம்(பு) உடல்வளைய நெய்த்துநெறி சுரிகுழல் கண்டுததிபோய்ப்
படியும்முகில் அலறிவரை முக(டு)ஏற விழிகண்டு படைஉறை புகுந்(து)அடங்கப்
பனிமலர்ச் சோலைதிகழ் காவைவரும் இமயநன் பாவைசொல் தமிழ்தழையவே.

**குறிப்புரை :** கடி= காவல். கூடல்= மதுரை. கண்ணி நிம்பன்= வேப்பம்பூமாலை அணிந்த பாண்டியன். இருமை= பெருமைபொருந்திய சிவலோகம். வெம்= கொடிய. எம்கோன்= எம்தலைவனாகிய சிவபிரான். வாக்கு அமுதம்= சொல்லமுதம் - அமுதப்பாடல். முடிக்கு அணியது ஆக்கி= தலையில் சூடி. துடிஇடை நயம்= உடுக்கைபோன்ற இடைக்கணுள்ள அல்குல் அழகு. மாசுணம்= ஆதிசேடன். மண்சுமக்க= பூமியைத்தாங்க. துணை= இரண்டு. உடல் சிலம்பு உடல்வளைய= மாறுபட்ட மேருமலை (வில்லாகி ) வளைய. நெய்த்து= கொழுத்து - நீண்டு. நெறி சுரி= வளைந்த சுருண்ட. ததி= கடல். அலறி= கூப்பாடுபோட்டு - இடித்து. வரைமுகடு= மலைஉச்சி. படை= வேற்படை. உறை= இருப்பிடம்.

**பொழிப்புரை :** துடிஒத்த இடைக்கண் அமைந்த அல்குலின் அழகினைக்கண்டுஆதிசேடன் ஒதுங்கி பூமியைத் தலையில் சுமக்கவும்; இளமைத்தன்மையில் என்றென்றும் முதிராத இரண்டு இளமுலைகண்டு மாறுபட்ட பொன்மலை சிவபிரானுக்கு வில்லாகி உடல் வளையவும், நீண்டு வளைந்து சுருண்ட கூந்தலைக்கண்டு கடலில்படியும் மேகம் அலறி - இடித்து மலைஉச்சிக்கு ஏறவும், விழியைக்கண்டு வேற்படை தனது இருப்பிடம் அடையவும் திருவானைக்காவில் எழுந்தருளியுள்ள அருள்தரு அகிலாண்ட நாயகியாகிய இமவான் மகளைப் போற்றும் பிள்ளைத்தமிழ் தழைக்கும்பொருட்டு;

காவலின்காரணமாகச் சூழ்ந்த மதிலுடைய மதுரையை ஆண்ட தேன்துளிக்கும் ஒளிபொருந்திய வேப்பம்பூ மாலையணிந்த வரகுணபாண்டியனுக்குப் பெருமைபொருந்திய சிவலோகத்தையும் காட்டி, கொடிய புத்தர்களை வாதில் வென்று துரத்தி, எம்தலைவனாகிய சிவபிரானின் செவிகளிப்புறச் சொல்அமுதமாகிய திருவாசகம் திருக்கோவையார் ஆகியவற்றைஅளித்து, எல்லையில்லாத மேலான பேரின்பக் கடலில் மூழ்கித்திளைத்திருந்த முதல்வராகிய நமது திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகரின் திருவடிகளைத் தலையில் சூடிப்போற்றுவோம்.

**இலக்கணக்குறிப்பு :** இடை - இடவாகுபெயர்.

( 11 ) **சண்டீசநாயனார் வணக்கம்**

வாரிசூழ் உலகுபுக ழும்திருச் சேய்ஞலூர் மறைவாணர் குலம்விளங்க
வரும்எச்ச தத்தர்மரு மானாய் உதித்(து)அரிய மறைநான்கும் ஓர்ந்துதெளிவாய்ச்
சீரிலகு சைவநெறி ஒழுகுஞான்(று) ஒருஞான்று செம்கோக்கு ழாம்அருத்தும்

தேந்தளவன் ஒருசுரபி மீப்பரும் தண்டால் சினந்(து)ஓச்சல் கண்டுதானே
ஊரில்அமர் ஆஇனம் ஒருங்கஒரு கோல்எடுத்(து) ஓம்பிவயி றாரஊட்டி
ஒழுகுதீம் பால்கொண்டு வாலுகத் தால்எந்தை உருவுகண்(டு) ஆட்டிஒளிர்பைந்
தார்இயைய விட்(டு)அஞ் சலித்துவரு நாளில்அத் தாதைதாள் அறஎறிந்தோன்
தாள(து)ஆ டுதிப்பம்உயர் தண்காவை அம்பிகை தமிழ்க்குவளன் மிகவளரவே.

**குறிப்புரை** : வாரி= கடல். மருமான்= மணம் - புகழ்தரும் மகன். ஞான்று= நாள். ஒருஞான்று= ஒருநாள். செம்கோக் குழாம்= சிறந்த பசுக்கூட்டம். தேர்தளவன்= மேய்க்கும் இடையன்.ஒருங்க=ம் ஒருசேர. வாலுகம்= மணல். எந்தை உருவு= எமது தந்தையாகிய சிவபிரான் உருவம். ஆட்டி= பாலால் திருமஞ்சனம் செய்து. பைந்தார்= பசிய மாலை. தாதை= தந்தை. தாள்= முயற்சி. ஆடு திட்பம்= வெற்றியின் உறுதி

**பொழிப்புரை** : கடல்சூழ்ந்த உலகம் புகழும் சேய்ஞலூர் வேதியர் குலம் சிறந்துவிளங்க வாழ்ந்த எச்சதத்தனின் புகழ்தரு மகனாகப் பிறந்து, சிறந்தநான்மறைகளையும் ஆராய்ந்த தெளிவுடன் சிறப்புவாய்ந்த சைவநெறியில் வாழும் நாளில் ஒருநாள் சிறந்தபசுக்கூட்டம் மேய்க்கும் ஆயன், ஒருபசுவை நீண்டபருத்த கோலால் சினத்துடன் அடித்ததைகண்டு, ஊரில் வாழும் பசுக்களைஎல்லாம் ஒருசேரத்தானே ஒரு கோலுடன் மேய்த்துக்காத்து வயிறார மேயவிட்டு, அவைசொரியும் இனியபாலினைத் தான்மணலால் சமைத்த சிவலிங்கத்திற்குத் திருமுழுக்காட்டி பசிய மாலைசூட்டி வணங்கிவரும்நாளில் , பால்குடத்தைக் காலால் எற்றிக் கவிழ்த்த தந்தையின் காலினை வெட்டிய முயற்சியில் வெற்றி பெற்ற விசாரசருமராகிய சண்டீசரின் திருவடிகளை வணங்குவோம்.

( 12 ) **திருத்தொண்டர்கள் வணக்கம்**

காயம்மனம் வாக்(கு)ஒன்ற மும்மலம் ஒரீச்சைவ காவியம் கற்றறிந்தும்
கனசரியை கிரியை ஓதிஞா னம்தேர்ந்(து) உகந்(து)அவ் வழிபயின்றும்
தீயபிணி யாம்பந்த பாசமூ லம்கெடச் சிதறிஎனை ஆண்டமுக்கண்
செஞ்சடா டவிஅண்ணல் திருவடியின் மருவிய திருட்தொண்ட ரைப்பரவுவாம்
தோயம்நிறை பண்ணையின் நறாக்கமல மலரைச் சுரும்(பு)அலறி முரலப்பசும்
சூட்(டு)எகினம் ஏங்கவளை கோட்(டு)எருமை மேய்ந்துநெல் சூல்பயிரை வாய்குதட்டிச்
சேயகுமு தத்தடம் பாய அத்தடவாளை சேண்முகில் கீண்டுபாயும்
தென்காவை மேவும்பி ராட்டிக்(கு) உரைக்கும்எம் தமிழ்தழையவே.

**குறிப்புரை** : மனம் வாக்கு காயம். ஒரீ= நீங்கி. தேர்ந்து ஓதி= ஆராய்ந்து கற்று. பயின்று= வாழ்ந்து. மூலம்= ஆணவம். சிதறி= சிதறச்செய்து. சடை அடவி= சடைக்காடு. அண்ணல்= தலைமைசான்ற சிவபிரான். திருவடியின் மருவிய= வீடுபேறு பெற்ற. தோயம்= தண்ணீர். பண்ணை= நன்செய். நறா= தேன். அலரி= மலர்த்தி. சூட்டு எகினம்= கொண்டையுடைய அன்னம். ஏங்க= இருக்க இடமின்ற வருந்த. சூல்= கரு. தடவாளை= குளத்து வாளைமீன். சேண்முகில் கீண்டு= வானில் தொலைவில் உள்ள மேகத்தைப் பிளந்து.

**பொழிப்புரை** : நீர் நிறைந்த நன்செய்யில் உள்ள தேன்பொருந்திய தாமரைமலரை வண்டுகள்மலர்த்தி அதில் முரல, அதனால் வளமான கொண்டையுடைய அன்னப்பறவை இருக்க இடமின்றி வருந்த, வளைந்த கொம்புடைய எருமை, கருக்கொண்ட நெற்பயிரை மேய்ந்து அசைபோட்டுக்கொண்டு செங்குமுதமலர் மலர்ந்த குளத்தில்பாய, அதனால் வெருவிய பருத்த வாளைமீன் துள்ளி, வானில் நெடும்தொலைவில் உள்ள மேகத்தைக் கிழித்துப்பாயும் அழகிய திருவானைக்கா அருள்தரு அகிலாண்டநாயகியைப் போற்றும் எமது பிள்ளைத்தமிழ் தழைக்கும்பொருட்டு;

மனம் சொல் உடம்ப - செயல் ஆகியன ஒன்றுபடச் சைவகாவியங்கள் ஆராய்ந்து கற்றறிந்து அதன்படி வாழ்ந்ததால், தீய கொடிய நோயாகிய மலங்களுக்கு மூலமாகிய ஆணவம் சிதறிக்கெடுமாறு என்னை ஆட்கொண்டவனும், செம்மையான சடைக்காடு உடையவனும் தலைமை சான்றவனும் ஆகிய சிவபிரானின் திருவடியாகிய வீடுபேறடைந்த திருத்தொண்டர்களைப் போற்றுவாம்.

**விளக்கம்** : திருவடிதான் வீடுபேறு -

" திருவடி யேசிவம் ஆவது தேரில்
திருவடி யேசிவ லோகம் சிந்திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே " ( திருமந்திரம். 138 )

## அவையடக்கம்

பொங்கும்அலை நீர்பருகும் ஒருமுனிவன் அமர்நறும் பொதியத்(து) இருந்(து)எழுந்து
புன்னைவீ யின்தா(து) அளைந்தஇள மென்சிறு புதுத்தென்றல் வந்(து)அரும்ப
எங்கும்ஒளிர் செந்தழல் அரும்புதே மாஅடர் எழில்காவை அம்பதியின் மே(வு)
எம்பிராட் டிக்குயான் உரைசெய்பிள் ளைக்கவிஇ(து) என்போல் இருக்கும்எனில்
தங்குமூ தறிவுடைய சான்றோர் உறும்தெய்வ சைவநெறி ஒழுகுவோரின்
சங்கத்து மெய்ப்பொருள் உணர்த்துநூல் புகலுவது தான்கேட்(டு) எழுந்துதீம்பால்
செங்குமுத வாய்ஒழுக மந்தமந் தச்சென்று தேருமந்தக் கழகம்உற்(று)ஓர்
சிறுமடல்கை பற்றிஒரு சிறுகுழவி குழறும்சி றப்பினுக்(கு) ஒக்குமன்றே.

**குறிப்புரை** : பொங்கும் அலைநீர்= கடல்நீர். முனிவன்= அகத்தியர். புன்னை வீயின் அமர் நறும்தாது. வீ= மலர். அமர்= பொருந்திய. நறும்தாது அளைந்த= மணக்கும் பூந்தாதினைத் துழாவிய. அரும்ப= தோன்ற. செந்தழல் அரும்பு தேமா= செந்தழல் போல் தளிர் அரும்பும் மாமரம். அடர்= செறிந்த. இது= பிள்ளையின் பாடல்போல். எனில்= என்றால். உறும்= மிக்க. சங்கம்= கூட்டம். எழுந்து= தோன்றி. மந்த மந்த= மெள்ள மெள்ள. சிறுமடல்= சிறிய ஓலை. குழற்றும்= பிதற்றும்.

**பொழிப்புரை** : அலைபொங்கும் கடல்நீரினைப் பருகிய அகத்தியமுனிவர் வாழும் பொதியமலையில் இருந்து புறப்பட்டுப் புன்னை மலரில் பொருந்திய நறுமணம்மிக்க பூந்தாதினைத் துழாவிய இனிய சிறிய மென்மையான புதுத்தென்றல் வந்ததால் எங்கும் தோன்றிய ஒளிபொருந்திய செந்தழல்போல் தளிரரும்பிய தேமாமரங்கள் செறிந்த திருவானைகாவில் எழுந்தருளியுள்ள எம்தலைவிக்கு, நான் சொல்லும் பிள்ளைகவி, எதுபோல் இருக்கும் என்றால் அது; மிகுந்த தெய்விகம் பொருந்திய சைவநெறியில் வாழ்கிறவர் கூட்டத்தில், முதிர்ந்த அறிவுஉடைய சான்றோர், மெய்ப்பொருளை உணர்த்தும் நூற்கருத்தை கூறுவது கேட்டு, தமது செங்குமுதமலர் போன்ற வாயிலிருந்து இனிய பாலொழுகச் சிறியகுழந்தை புறப்பட்டுச்சென்று அந்தக் கூட்டத்தை அடைந்து ஒரு சிறியஓலையைஏந்தி மெள்ளமெள்ளப் பிதற்றும் சிறப்புப்போன்றதாகும்.

தென்றல்பற்றிக்கூறும் " இன் மென் சிறு புதுத்தென்றல் " என்ற தொடர் மிக்க நயமுடையதாகும்

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

## காப்புப் பருவம்

*****************************

### திருமால்

பூமேவு வெண்ணாவல் நீழல்அமர் முக்கண் புராதனர்க்(கு இன்ப வெள்ளம்
பொங்கித் ததும்பிமீ திட்டுவழி தரஅவர் புரத்(து)ஒரு புறத்(து)அ மர்ந்து
மாமேவும்அண் டம்புரக்குமட மானைஎழில் வாய்த்தசெந் தேனை ஒளிர்செவ்
வாய்அனத் தைக்கரும் குயிலைப் பசும்தோகை மயிலைப் பரிந்து காக்க
தேமேவு துளபப் பெருங்கா(டு) அளிக்கும்இருள் சீத்துச் திசாதி சைதொறும்
சேயொளி பரப்பும் கவுத்துவத்(து) ஒருமார்(பு) திருமார்பு முலைபொ ருந்தக்
கோமேவு மகவான் முதல்புலவர் மார்(பு)அவர் குலக்கொடிகள் முலைபொ ருந்தக்
கொழுவும்முழுத் திண்கிரியை ஓராழி இடையிட்ட கூராழி அங்கை முகிலே.

**குறிப்புரை** : பூமேவு= பொலிவு பொருந்திய. புராதனர்= அநாதியானவர். மீதிட்டு= மேலோங்கி. புரம்= உடம்பு. ஒருபுறம்= ஒருபக்கம் - இடப்பால். மாமேவும்= பெருமைபொருந்திய. மடமான்= என்றும் இளைய உமையவளை. தே= தேன். சீத்து= நீக்கி. திசாதிதிசை= திசைகளில் எல்லாம். சேயொளி= செந்நிற ஒளி. திருமார்பு= திருமகளின் மார்பு. கோ= தலைமை. மகவான்= தேவேந்திரன். புலவர்= தேவர்கள். கொழுவும்= மிகப்பெரிய. திண்கிரி= வலிய மலை. ஓர் ஆழி= ஒப்பற்ற பாற்கடல். கூர் ஆழி= கூரிய சக்கரஆயுதம். முகிலே= மேக வண்ணனே - திருமாலே.

**பொழிப்புரை** : தேன்பொருந்திய மாலையாக அணிந்த துளசி மாலை பரப்பிய இருளை நீக்கி எல்லாத்திசைகளிலும் செம்மையான ஒளிபரப்பும் கவுத்துவ மணிஅணிந்த ஒப்பற்ற மார்பில் திருமகளின் மார்பு முலைகள் இரண்டும் பொருந்தவும், தலைமை சான்ற தேவேந்திரன் முதலிய தேவர்களின் மார்புகளில் அவர்களின் மனைவிமார் முலைகள் பொருந்தவும் - இன்புறவும் மிகப்பெரிய முழுமையான

வலிய மலையினை ஒப்பற்ற பாற்கடலில் அமுதம் பெற இட்ட கூர்மையான சக்கரப்படைஏந்திய திருமாலே !

பொலிவுபொருந்திய வெண்ணாவல் மரத்தடியில் எழுந்தருளியுள்ள முக்கண்களுடைய அநாதியான சிவபிரானுக்கு இன்பவெள்ளம் பொங்கித்ததும்பி மேலேறி வழியுமாறு அவரது உடம்பின் இடப்பாதியில் அமர்ந்துகொண்டு, பெருமைபொருந்திய அண்டத்தைக்காக்கும் என்றும் இளமானும், அழகிய செந்தேனும், ஒளிரும் சிவந்த இதழ்களுடைய அன்னமும், கரிய குயிலும், பசியதோகை யுடைய மயிலும்ஆகிய அருள்தரு அகிவாண்டநாயகியைப் பரிவுடன் காப்பாயாக.

( 2 ) **சபாநாயகர்**

மதிநதி தும்பை வாச இதழிக ரந்தை நாகம்
வனைசடை முன்கு லாவு புண்டரக் கீற்றினர்
வழுதிமுன் நந்து வாய நரிபல கொண்டு தாவும்
வலிஅயம் என்று கூறி அங்குறத் தோற்றினர்
மகரம் அலம்பு நீரில் அமரர்கள் அஞ்சி வாடி
மறுகுற வந்த காரி கண்டமட்(டு) ஏற்றினர்
மறையினொ(டு) அங்கம் ஆறும் வலவர்க லங்கு றா(து)ஓர்
வடநிழல் இன்பு றாஅ மர்ந்(து) உறத்தேற்றினர்
கொதிகொள் சுரம்தண் மேவ நிழல்விரி பந்தர் ஊடு
குளிர்புனல் கொண்டு சாலின் மொண்(டு)எடுத்(து) ஊற்றினர்
குலமலை நின்றுதாழ நலம்மலை(வு) இன்றி மேவு
கொடுமுடி தங்கு மேரு விண்டெடுத்(து) ஆற்றினர்
குவிகையு டன்க ணீர்கொ(டு) உருகுவர் துன்ப மான
குவிதல்கொள் பஞ்சை வாரும் விஞ்(சு)அருள் காற்றினர்
குடபுல அந்தி மானும் உடல்நிற நம்பர் ஈ(று)இல்
குணம்மலி சம்பு நாதர் மென்கழல் போற்றுதும்
அதிகர சங்கள் மீறி அருமைஇ(து) என்று பேசும்
அமுதைஇ கந்து பேசி டும்கு யில்பேட்டினை
அனுதின மும்ப ராவி வழிபடும் அன்ப ரான
அடியவர் கண்கள் ஆர நின்றமெய்க் காட்சியை
அவிர்கதிர் குன்ற வீசு மணிகள்சு மந்த வாச
மலர்தரு கொம்பை ஏ(டு)அ விழ்ந்துமிக்(கு) ஊற்றெழும்
மருநற(வு) உண்(டு)இ ராகம் மிடறுதி றந்து பாடி
அளிகள்இ ருந்து வாழ்சு கந்தநல் தூள்பொதி
வதியும்அ லங்கள் மேவும் அளகஅ ரம்பை மாதர்
வனசம்இ ருந்த மாதர் கும்பிடத் தோற்றிய
மயிலைவ ளம்கு லாவு மணியைவி ளங்கு சோதி
வடிவைந றும்ப டீர குங்குமச் சேற்றளை
வனமுலை கொண்(டு)உ லாவு கொடியைஇ ருண்ட சோலை
மதுமடை விண்டு பாயும் அம்புயப் பூச்செறி
மடுவைஅ லம்பி வாளை கமுகைஅ டர்ந்து பாய
மலிவளம் ஒன்று காவை மங்கையைக் காக்கவே.

**குறிப்புரை : அடி 1.** மதி= பிறை. நதி= கங்கை. இதழி= கொன்றைமலர். கரந்தை= நாறும் கரந்தை. வனைசடை= அலங்கரிக்கும் சடைமுடி. குலாவு= விளங்கும். புண்டரகீற்று= திருநீற்று முக்கோடு. வழுதி= பாண்டியன். நந்து வாய= நத்தைமுதலியன தின்னும். வலிஅயம்= வலிமைவாய்ந்த குதிரை. அங்கு உற= அது அங்குவர. மகரம் அலம்பு நீர்= மீன்கள் கலக்கும்பாற்கடல். மறுகுற= மயங்க - வருந்த. காரி= கருநஞ்சு. வலவர்= வல்ல முனிவர் நால்வர். வடநிழல்= கல்லாலமரம். இன்புறா= இன்பத்துடன் இருக்க.

**அடி 2.** கொதி கொள் சுரம்= நிலம் கொதிக்கும் பாலை நிலம். பந்தர்= பந்தல். சால்=தண்ணீர் முகக்கும் பெரிய குவளை. குலமலை= ஒத்தநிலையில் எண்ணப்பெறும் எட்டுமலைகள். தாழ=

தலைகுனிய. நலம் மலைவின்றி= நலம் கெடாமல். கொடுமுடி தங்கு= உயரமான உச்சியுடைய. விண்டு எடுத்து ஆற்றினர்= மலையை ( வில்லாக ) எடுத்துப்புறப்பட்டவர். குவிகை= கூப்பிய கை. துன்பமான= துன்பங்கள். குவிதல்= பெருகுதல். பஞ்சு= துன்பப்பஞ்சு. அருள்விஞ்சு= அருள் மிக்க. குடபுல அந்தி= மேற்றிசையில் காணும் அந்தி நேரம் - செவ்வானம். நம்பர்= சிவபிரான். ஈறில் குணம்= எல்லையில்லா நற்பண்புகள். சம்புநாதர்= வெண்ணாவலீசர்.

**அடி 3.** அதிக ரசம்= மிக்கசுவை. இகந்து= பழித்து. குயில்பேடு= பெண்குயில். பராவி= போற்றி. கண்கள் ஆர= கண்டு அனுபவிக்க. மெய்க்காட்சி= ஞானத்திருவுரு. குன்ற= ஒளிகுறைய. வாசம் மலர்தரு கொம்பு= மணக்கும் மலர்களுடைய கொம்பு போன்றவள். ஏடு= இதழ். மரு நறவு= மணக்கும் தேன் கந்தநல் தூள்= மணக்கும் மகரந்தப் பொடி.

**அடி 4.** வதியும் அலங்கல்= உள்ள மாலை. அளக அரம்பைமாதர்= கூந்தலுடைய தேவருலக அரம்பையர். வனசம் இருந்த மாதர்= தாமரை மலரிலிருக்கும் கலைமகள் திருமகள். நறும்குங்குமப் படீரம்= மணக்கும் செஞ்சந்தனம். வனம்= அழகு. சோலைமது மடைவிண்டு பாயும்= சோலை மலர்த்தேன் மடைஉடைத்துப் பாயும். மடு= ஆழமான நீர்நிலை. வாளை கமுகை அலம்பி அடர்ந்து= = வாளைமீன் பாக்குமரம் அதிருமாறு மோதி. மங்கை= அருள்தரு அகிலாண்ட நாயகி.

**பொழிப்புரை : அடி 3.** மிக்கசுவை மிகுந்து அருமையான பொருள்இது என்று புகழும் அமுதத்தையும் பழிக்குமாறு பேசும் பெண்குயிலை; நாள்தோறும் போற்றி வழிபடும் அன்பர்களாகிய அடியவர் கண்ணாரக் கண்டு களிப்பத்தோன்றிய ஞானத்தின் திருவுருவை; ஒளிரும் ஞாயிறும் தன்ஒளியில் குறையுமாறு ஒளிவீசும் நவமணிமாலையுடன் மணக்கும் மலர்மாலைகளுடைய கொம்பினை; இதழ்விரிந்த மலரில் மிக்க ஊற்றாகத் தோன்றும் மணம்மிக்க தேனைப் பருகி இனிய பண்ணினைப்பாடி மணம்மிக்க மகரந்தப் பொடியின் பொதியில் வண்டுகள் மொய்த்துத்

**அடி 4.** தங்கும் மாலைகள் சூடிய கூந்தலுடைய தேவமாதரும், செந்தாமரை வெண்டாமரை மலர்களில் இருக்கும் திருமகளும் கலைமகளும் வணங்குமாறு தோன்றும் மயிலினை; வளம்பொருந்திய மாணிக்கமணியை; ஒளிரும் சோதிவடிவை; மணக்கும் செஞ்சந்தனச் சேறுபூசிய அழகிய முலைகளுடன் உலாவும் கொடியை; சோலையில் பெருகிய தேன், மடையை உடைத்துப்பாயும் தாமரைமலர்கள் செறிந்த ஆழமான நீர்நிலையை; வாளைமீன் பாக்குமரம் அதிருமாறு பாய்கிற வளம்பொருந்தியதிருவானைக்காவில் எழுந்தருளியுள்ள அருள்தரு அகிலாண்டநாயகியைக் காக்க;

**அடி 1.** மூன்றாம்பிறை, கங்கை, மணக்கும் கொன்றைமலர், மணக்கும் கரந்தை, நாகம் ஆகியன அலங்கரிக்கும் சடைமுடியின் முன் விளங்கும் திருநீற்று முக்கோடு உடையவரும்; அரிமர்த்தன பாண்டியன் முன்னே, நத்தைகளைத் தின்னும் நரிகளைக் கொண்டுபோய்த் தாவிச்செல்லும் குதிரைகள் என்று கூறித்தோன்றியவரும்; மகரமீன்கள் கலக்குகின்ற திருப்பாற்கடலில் தேவர்கள் அஞ்சி வாடிமயங்கத் தோன்றிய கருநிற நஞ்சினைக் கழுத்தில் நிறுத்தியவரும்; நான்மறை ஆறங்கம் வல்ல நான்குமுனிவர்கள் மனம்கலங்காதபடி ஒரு கல்லாலமரத்தடியில் அமர்ந்து அவர்கள் இன்புற வாய்திறந்து சொல்லாமல் மெய்ப்பொருளைச் செய்கையால் காட்டித் தெளிவுபடுத்தியவரும்;

**அடி 2.** நிலம்கொதிக்கும் சுரத்தில் குளிர்ச்சிபொருந்துமாறு விரிந்த நிழலுடைய தண்ணீர்ப்பந்தல் அமைத்துக் குளிர்ந்த நீரினைப் பெரியபாத்திரத்தால் மொண்டு ஊற்றியவரும்: ஒத்தநிலையில் எண்ணப்பெறும் எட்டுமலைகளும் தம்நலத்தில் கெடாமல் தலைகுனிய, உயரமான சிகரமுடைய மேருமலையை வில்லாக ஏந்தியவரும். கூப்பியகையுடன் பக்தியால் கண்ணீர் சிந்தி மனம் உருகுகிறவர்பால் ஒருசேரக் குவிந்ததுன்பமாகிய பஞ்சினை ஒருசேர வாரியெடுத்து எறியும் அருளாகிய காற்றினைஉடையவரும்; மேற்றிசையில் தோன்றும் அந்தி வானம்போன்ற திருமேனியுடையவரும்; எல்லைஇல்லாத நற்குணம்மலிந்தவரும் ஆகிய அருள்தரு வெண்ணாவல் ஈசரின் மென்மையானதும் வீரக்கழல் அணிந்ததுமாகிய திருவடிகளைப் போற்றுவோம்.

**( 3 )** **விநாயகக்கடவுள் ( வேறு )**

சீர்பூத்த அன்பர்இடும் வெள்அரிக் குவையைத் திரட்டிச்ச டைக்கண் வாரித்
தின்றுகரு மாசுணம் எனக்கூன்நன் மதிமுகில் செறியப்பு ழைக்கை நீட்டிக்
தார்பூத்த அச்சடைக் கமலம்மொண்(டு) உண்டுகண் தழல்கண்டும் வெருவாதுதன்
தந்தைஎன எந்தையிடம் உலவும்தி ருக்குஞ் சரக்கன் றினைப்ப ணிகுவாம்

நீர்பூத்த முள்அரைப் பாசடைப் பூங்கமலம் நிறைநறை இழிந்து பாய
நெட்டிதழ் அவிழ்க்கும்ஒரு வட்டமலர் மாளிகையுள் நீங்கா(து)இ ருந்து வாழும்
தேர்பூத்த அல்குல் மடவார்இரு வரும்தனைச் சிந்திப்பர் கண்பொ ருந்தத்
திருக்கண்க டைப்பார்வை செய்யும்நன் காவைஅமர் தேவியைக் காக்க என்றே.

**குறிப்புரை** : வெள் அரிக் குவை= வெண்மையன அரிசிக்குவியல். திரட்டிவாரித் தின்று. முகில் சடைக்கண்= கார்மேகம்போல் அடர்ந்த மயிர்க்கண். கருமாசுணம்= பெருமை பொருந்திய பாம்பு. கூன் நன்மதி செறிய= வளைந்த அழகிய பிறை பொருந்த. தார்பூத்த= மாலையால் பொலிவுபெற்ற. கமலம்= தண்ணீர். கண்தழல்= நுதற்கண் நெருப்பு. எந்தையிடம்= எமது தந்தையாகிய சிவபிரானிடம். திருக் குஞ்சரக் கன்று= தெய்வத்தன்மை பொருந்திய யானைக்கன்றாகிய விநாயகர். நீர் பூத்த= நீரில் மலர்ந்த. அரை= இடுப்பு - தண்டு. பாசடை= பசிய இலை. நறை= தேன். நெட்டிதழ் அவிழ்க்கும் ஒரு வட்டமலர்= நீண்ட இதழ்களை விரிக்கும் தாமரை மலர். தேர் பூத்த[= தேர்த் தட்டுப்போல் அகன்ற. இருவரும்= திருமகளும் கலைமகளும். சிந்திப்பர் கண்பொருந்த= நினைப்பவரைப் பார்த்து.

**பொழிப்புரை** : தண்டில்முட்களுடன் நீரில் மலர்ந்த பசிய இலைகளுடையதும் மிக்க தேனுடையதுமாகிய தாமரைமலரில் இருந்து வழிந்த தேன்பா, அதனால் செழித்த நீண்ட இதழ்களுடைய தாமரை மலர்களில் வாழும் தேர்த்தட்டுப் போன்ற அகன்ற அல்குலுடைய கலைமகள் திருமகள் இருவரும் தன்னைச் சிந்திக்க, அவர்களைக் கடைக்கண்ணால் பார்த்து அருள்புரியும் திருவானைக்கா அருள்தரு அகிலாண்ட நாயகியைக் காத்தருள் என்று;

சிறந்த அன்பர்கள் இடும்வெண்மையான அரிசிக்குவியலைத் திரட்டித்தின்று, தனது துளையுடைய துதிக்கையை நீட்டி மாலையணிந்த தனது கார்மேகம் போல் அடர்ந்து நீண்ட சடையில் உள்ள கங்கைநீரை மொண்டு பருகி, பெருமைபொருந்திய பாம்புபோன்று வளைந்த பிறை தன்தலையில்பொருந்த, தந்தையாகிய சிவபிரானது நுதற்கண்ணின் மிக்க நெருப்பைக்கண்டும் அஞ்சாமல் இவர் நமது தந்தை என்று அவருடன் உலவும் அழகிய விநாயகரை வணங்குவோம்.

**விளக்கம்** : அரிசிக்குவியலை வாரித்தின்றதால் நீர்பருகியது கூறினார். சடையில் கங்கை, தலையில் பிறை கூறியதன்மூலம் சிவபிரானுடன் ஒப்புமை கூறினார். யானை நெருப்புக்கு அஞ்சும் இயல்புடையது ஆயினும் தன்தந்தையிடத்தது அது என்பதால் அஞ்சவில்லை என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : சிந்திப்பர் - வினையாலணையும் பெயர்.

( 4 ) **முருகக்கடவுள் ( வேறு )**

கறைவாய் கண்டத்(து) எம்பெருமான் கரகம் கணங்கள் கரந்துசடைக்
காட்டுள் நுழைய மால்கரச்சங் கத்து ளவன்பாய் புகுந்(து)ஒளிக்கச்
சிறைவாய் மஞ்ஞைப் பரிநடத்தித் தேம்பாய் தருவி னிற்பிறந்த
தெய்வக் களிற்றை மணம்செய்த செவ்வேள் மலர்த்தாள் தலைக்கொள்வாம்.
தறைவாய் மணிமுத்(து) அலைகொழிக்கும் சலதி மடுத்த சூல்மேகம்
தவழ்ந்து திரிவ(து) ஏய்ப்பமத சலம்மூன் றுடைமா திரம்பயிலும்
நறைவாய் வனத்துள் உயர்ந்(து)எழும்வெண் ணாவல் மருங்கு முளைத்ததுகிர்
நாகத்(து) ஒருபால் படர்ந்தபச்சை நறும்பூங் கொடியைப் புரக்கஎன்றே.

**குறிப்புரை** : கறைவாய்= நஞ்சுக்கறை உள்ள. கரகம்= கங்கை நீர். கணங்கள்= பாம்பு, நிலவு கொன்றை முதலியன. கரம் சங்கம் துளவன் மால்= கையில் சங்கேந்தியவனும் துளசிமாலை அணிந்தவனும் ஆகிய திருமால். பாய்= பாற்கடல் அலையில். சிறைவாய்= இறகுடைய - தோகையுடைய. மஞ்ஞைப் பரி= மயிலாகிய குதிரை தரு= கற்பக மரமுடைய தேவலோகம். தலைக்கொள்வாம்= தலையில் சூடுவோம். தறை= நிலம். சலதி= கடல். ஏய்ப்ப= போல. சலம் மூன்று= கன்னமதம் கபோதமதம் பீஜமதம் ஆகிய மூன்று நீர். .நறைவாய்= தேனுடன். மாதிரம் பயிலும்= வானளாவிய. துகிர் நாகம்= பவளமலை - சிவபிரான். ஒருபால்= ஒருபக்கம் - இடப்பக்கம். பச்சை நறும்பூங்கொடி= பசிய நன்மைதரும் கொடி- அருள்தரு அம்மை.

**பொழிப்புரை** : நிலத்தில் மணிகளையும் முத்துகளையும் அலைகளால் ஒதுக்கும் கடலினைப் பருகிச் சூல்கொண்ட மேகம் தவழ்ந்து திரிவதுபோல் மும்மதநீர்மிக்க யானைகள்திரியும் வானளாவ உயர்ந்த மரங்களுடைய வனத்தில் தோன்றிய வெண்ணாவலின் பக்கத்தில் மிகஉயர்ந்த பவளம்போல் சிவந்த

மலையின் ஒருபக்கம் - செம்மேனிச் சிவபிரானின் இடப்பால் = உயிர்களுக்கு நன்மைதரப் படர்ந்த பசியபூங்கொடியாக விளங்கும் அருள்தரு அகிலாண்டநாயகியைக் காக்கும்பொருட்டு;

நஞ்சுக்கறை உள்ள கழுத்தினைப் பெற்ற சிவபிரானின் சடைக்காட்டில் கங்கைநீர், பிறை, பாம்பு, கொன்றை முதலியன நுழைந்துகொண்டு ஒளிந்துகொள்ளவும், கையில் சங்கேந்தியவனும் துளசிமாலை அணிந்தவனும் ஆகிய திருமால் பாற்கடலில் ஒளிந்துகொள்ளவும் ஆண்ட சூரனை; தோகையுடைய மயிலாகிய குதிரையை நடத்தி வென்று, தேன்பாயும் கற்பகமரமுடைய தேவருலகில் பிறந்த தெய்வயானை அம்மையை மணந்துகொண்ட முருகப்பெருமானின் தாமரைத்திருவடிகளைத் தலையில் சூடி வணங்குவோம்.

( 5 ) **நான்முகன் ( வேறு )**

ஒலிகெழும் அலைஅலை பருமுத் தாக்குடம்
உறழ்வரி வளைவயி(று) உமிழ்பொற் பாற்கடல்
உவகையொ(டு) எழுமொரு மதியைப் போற்கயல்
உண்கண்மடு நடுஎழு பசுமைச்சூட்(டு) அன்னம்
வலிஅயம் எனநனி கடவிச் சீர்ச்சித
மலர்மிசை வதியும்ஒர் எகினப் பேட்டினை
மறைஉறை கடைஅடை எனவைத்(து) ஆற்றிய
மலர்தரு மலர்மகன் உலகைப் பூத்தவன்
புலிஅதள் இடைஇடை சுலவக் கூக்குரல்
புரிபரி புரம்அடி அலறப் பாப்(பு)அணி
பொலிதர முழவொடு புவியுள் போற்றிடு
பொதுவினில் நடம்இடு மழுவைத் தூக்கிய
மலிசடை யவர்மகிழ் துணையைத் தீத்தொழில்
வலியஎன் முடிமிசைஅடியைச் சூட்டிய
மணியைமென் மலர்விரி கொடியைப் பூத்தொளிர்
மதகரி வனம்வரு மயிலைக் காக்கவே.

**குறிப்புரை** : அலை அலை= அலைகளுடைய கடல். குடம் உறழ் வரிவளை= குடம்போல் பருத்துக் கோடுகளுடைய சங்கு. வயிறு உமிழ்= பெற்ற. பொன்பாற்கடல்= அழகிய பாற்கடல். மதி= முழுநிலவு. மடுக்கண் நடுஎழு கயல் உண் பசுமைச்சூட்டு அன்னம்= ஆழமன நீர்நிலையின் நடுவில் உள்ளதும் கெண்டை மீனினை உண்பதும் ஆகிய வளமான கொண்டையுடைய அன்னப்பறவை. அயம்= குதிரை. கடவி= செலுத்தி. சீர் சித மலர்= சிறந்த வெண்டாமரை மலர். எகினப்பேடு= பெண்அன்னப்பறவை ஒத்த கலைமகள்.. மறைகடை அடை உறை= வேதத்தின்கண் அடைந்து வாழும். வைத்து= கொண்டு. மலர்தரும்= தாமரையில் உள்ள. உலகைப் பூத்தவன் மலர்மகன்= உலகைப் படைத்தவனாகிய நான்முகன்.

புலிஅதள்= புலித்தோல். சுலவ= சுழல. கூக்குரல்= பேரொலி. பரிபுரம்= கால்சிலம்பு. பாப்பு அணி= பாம்பு ஆகிய அணிகலன். புவியுள் போற்றிடு= உலகவரால் போற்றப்பெறும். பொது= அம்பலம். மழு= மழுப்படை. மலி= மிக்க. மகிழ்துணை= மகிழக் காரணமான துணைவி. தீத்தொழில்= தீய நினைவுகள். பூத்து ஒளிர் மென்மலர்விரி கொடி. மதகரிவனம்= மதம்மிக்க யானைகளுடைய திருஆனைக்கா. மயில்= மயில் போன்ற அருள்தரு அகிலாண்டநாயகி அம்மை.

**பொழிப்புரை** : இடையில் உடுத்த புலித்தோலாடை இடையிடையே சுழலவும்,கால்களில் அணிந்த கால்சிலம்பு ;பேரொலி எழுப்பவும், பாம்பு அணிகலன்கள் பொலிவுடன் விளங்கவும், முழவுகள் முழங்கவும், உலகவர் போற்றும் அம்பலத்தில் நடனமாடுகிறவரும், மழுப்படை ஏந்தியவரும் ஆகிய மிக்கசடையுடைய சிவபிரான் மகிழும் துணைவியை; தீய நினைவுகள் ஒழிய என்தலையில் தன்திருவடிகளைச் சூட்டிய மாணிக்க மணியை; ஒளிபொருந்திய மென்மையான மலர்கள் பூத்த கொடியை; மதம்மிக்க யானைகளுடைய திருவானைக்காவில் எழுந்தருளிய மயில்போன்ற அருள்தரு அகிலாண்டநாயகியை;

பேரொலி மிக்க அலைகளுடைய கடலில் பெரிய முத்துகளுடைய குடம்போல்பருத்ததும் வளைந்த கோடுகளுடையதும் ஆகிய சங்குகள் ஈன்ற அழகிய பாற்கடலில் மகிழ்வுடன் எழுமொரு முழுநிலாப்போல் விளங்குவதும்; ஆழமான நீர்நிலயின் நடுவில் உள்ள கெண்டைமீனினை உண்ணும் வளமான கொண்டைபெற்றதும் ஆகிய பெண்அன்னத்தைத் தனக்கு வலிமைவாய்ந்த குதிரையாகச் செலுத்தி; சிறந்த

வெண்டாமரை மலரில் வாழும் ஒரு பெண்அன்னமாகிய கலைமகளை வேத்தின்கண் நடுவில் வைத்துக் கொண்டு, உலகைப் படைத்தவனாகிய தாமரைமலரில் வாழும் நான்முகன் காப்பானாக.

( 6 ) **இந்திரன் ( வேறு )**

மோகத்தை யாம்கொண்டபோதெலாம் மிக்(கு)இன்பம் முனியா(து) அளித்திடுசசி
மொய்குழல் நுசுப்புமுலை சொல்பகை இவைஎன முராரி மகிழ்(வு)எய்தஏறி
மேகத்தை ஓட்டித் திசாதிசை திரிந்(து)அலைய மின்னைத் துரத்திஓங்கும்
வெற்பைத் துணித்தமுறை வாய்ப்(பு)எய்து தருநிழல் மேவும்ஒரு கடவுள்காக்க
நாகத்தை வாங்கிய பிரான்இ யற்பகையை நண்ணியதும் மதில்இலங்கை
நாதன்மனை விக்(கு)இன்பம் நல்கியதும் ஒருபூவணத்(து)அ டைந்ததும்இராவில்
பூகத்தைகந் தரமாது பால்தூது போனதும் ஓர்ந்(து)இடை விடாப்
புந்திச்சி றைப்படுத்(து) ஒளிர்காவை மேவும் புண்ணியப் பூங்கொடியையே.

**குறிப்புரை** : மோகம்= ஆசை. சசி= இந்திராணி. மொய்= அடர்ந்த. நுசுப்பு= இடுப்பு. பகை இவை= பகையானவை இவைகளாகும், முராரி= இந்திரன். மேகத்தை மேல்ஏறி= மேகத்தை ஊர்தியாக்கி அதன்மேலேறி.. ஓட்டி= செலுத்தி.. திசாதிசை= திசைகளில் எல்லாம். அலைய= திரிய. மின்னைத் துரத்தி= மின்னலை ஓட்டி. ஓங்கும் நாகம்= உயரமான மலை. வெற்பைத்துணித்த முறை= மலைகளின் சிறகுகளை வெட்டிய முறைமை. தருநிழல் மேவும்= கற்பகமரத்தின் கீழ்வாழும். நாகத்தை= மேருமலையை. வாங்கிய= வில்லாக வளைத்த.. பிரான்= சிவபிரான். இயற்பகையை நண்ணியதும்= இயற்பகை நாயனாரை அடைந்து அவர்மனைவியைக் கேட்டதும். இலங்கை நாதன்= இராவணன். மனைவி மண்டோதரி. பூவணத்து அடைந்ததும்= திருப்பூவணத்துப் பொன்னனயாள் வீட்டுக்குச் சென்றதும். பூகத்தைக் கந்தரம் மாது= பாக்கு மரம்போன்ற வழுவழுப்பான கழுத்துடைய பரவையார். புந்திச்சிறைப் படுத்து= மனத்தில் அழுந்தப்பதித்து.

**பொழிப்புரை** : மேருமலையை வில்லாக வளைத்த சிவபிரான், இயற்பகை நாயனாரின் மனைவியைக் கேட்டு அவர்வீட்டினை அடந்ததும், மதில் சூழ்ந்த இலங்கைமன்னன் இராவணனின்மனைவி அவனுடன் இன்புற்று வாழச்செய்ததும், பூவணத்துப் பொன்னனையாள் வீட்டிற்குச் சென்றதும், கமுகு மரம் போன்ற வழுவழுப்பான கழுத்துடைய பரவையார் வீட்டிற்கு இரவில் தூது சென்றதும் ஆகியவற்றை இடைவிடாது எண்ணி மனத்தில் அழுந்தப்பதித்துக்கொண்டு, ஒளிபொருந்திய திருவானைக்காவில் எழுந்தருளியுள்ள புண்ணியமே வடிவான பூங்கொடிபோன்ற அருள்தரு அகிலாண்ட நாயகியை;

ஆசைகொண்டபோதெல்லாம் மிகுந்த இன்பத்தைச் சினமின்றி அளித்த இந்திராணியின் அடர்ந்த கூந்தல், இடுப்பு, முலை இவைகளுக்குப் பகையாகச்சொல்லப்பெறுவனவற்றை எண்ணி, இந்திரன் தனது ஊர்தியாகிய மேகத்தின் மேலேறிச் செலுத்தி, மின்னலுடைய மேகத்தைக்கடந்த உயர்ந்த மலைகளின் சிறகுகளை வெட்டி அவளுடன் இன்புறும் வாய்ப்பினை அடைந்தவனாய், கற்பகமரத்தின்கீழ் வாழும் தேவேந்திரன் ஆகிய கடவுள் காப்பானாக.

**விளக்கம்** : இந்திராணியின் கூந்தல்,இடுப்பு, முலை ஆகியவற்றுக்குப்பகை; கார்மேகம், மின்னல், மலை என்பதால் அவற்றை வென்று அவளுடன் இன்புற்றான் என்றார்.

( 7 ) **திருமகள்**

முத்தநகை விதுமுகப் பொதுவியர் கடப்பான் முழுக்கவன் தாழ்வ லித்து
மூடும்க வாடம் தடிந்துமனை புக்(கு)உண முனிந்தவர் பிணித்(து)அ டிக்கும்
மத்(து)அடிபொறுத்துவரு துணைமுகிலை உண்டுகண் வளர்ந்(து)உறைதி என்று தன்னை
வயி(று)உளைந்(து) ஈன்றஒரு பாற்கடல் குடியாக்கு மடமானை அஞ்ச லிப்பாம்
கொத்(து)அவிர மத்தம்அணி வெண்பொன் பிறங்கல் குலாவும் பெருங்க ளிற்றைக்
கூடிப் பயந்தஒரு கோட்(டு)அடல் மழக்கன்று கூடிவிளை யாட நாடி
அத்தஉல கக்களிறு பாறவீ(று) ஏறமத அத்தியார் அணிய மேவும்
அமையம் பிறங்கவளர் இமயம் பிறந்தபிடி யைக்காத்(து) அளிக்க என்றே.

**குறிப்புரை** : முத்தநகை= முத்துப்போன்றபற்கள். விதுமுகம்= நிலாப்போன்ற முகம். பொதுவியர் கடப்பான்= உடல்முழுதும் வியர்ப்பதைத் தடுக்க. வன்தாழ் முழுக்க வலித்து= வலிய தாழ்ப்பாளை

முழுவதும் இழுத்து. ,மூடும் கவாடம்= மூடிய கதவு. உண= வெண்ணையை உண்ண. துணைமுகில்= கணவனாகிய மேகம் - திருமால் .உண்டு கண்வளர்ந்து= உண்டும் உறங்கியும். குடியாக்கும்= குடிமகன் ஆக்கும். மடமான்= இளமைபொருந்திய மானாகிய திருமகள். கொத்து அவிர= கொத்தாக ஒளிரும். மத்தம் அணி= ஊமத்தம் பூச்சூடிய. வெண்பொன் பிறங்கல்= வெள்ளி மலை கயிலைமலை. பெருங்களிற்றை= உலகிற்பெரிய ஆண்யானையை - சிவபிரானை. ஒருகோட்டு அடல் மழகளிறு= ஒற்றைக்கொம்புடைய ஆற்றல்வாய்ந்த இளயானை - விநாயகர். உலக அத்தக் களிறு= உலக மலைகளில் வாழும்ஆண்யானைகள். பாற= சிதறி ஓட. வீறு= ஆற்றல். மத அத்தியார்= மதம்மிக்க விநாயகர். அணிய மேவும்= நெருங்கிஇருக்கும் சமயம். பிறங்க= சிறந்து விளங்க. வளர்இமயம்= களிப்புறும் இமயமலை. பிடி= பெண்யானையாகிய அம்மை.

**பொழிப்புரை :** கொத்தாக ஒளிரும் உன்மத்தமலர்சூடி, வெள்ளிமலையாகிய கயிலைமலையில் விளங்கும் உலகப்பெரிய ஆண்மகனாகிய சிவபிரானைக் கூடிப்பெற்ற ஒற்றைகொம்புடைய ஆற்றல் வாய்ந்த இளயானையாகிய விநாயகருடன் சேர்ந்து விளையாட விரும்பி, உலக மலைகளில் வாழும் மதயானைகள் சிதறி ஓட விளங்கும் ஆற்றல்மிக்க மதயானையாகிய சிவபிரானுடன் இருக்கும் நேரம் விளங்குமாறு நன்மைமிகு இமயமலையில் பிறந்த பெண்யானையாகிய அருள்தரு அகிலாண்டநாயகியைக் காக்கும்பொருட்டு;

முத்துப்போன்ற பற்களுடைய முகத்திலும் பொதுவாக உடம்பிலும் தோன்றிய வியர்வையைத் தடுக்க, வலிமையான தாழ்ப்பாளை முழுவதும் இழுத்து மூடிய கதவைத் திறந்து வீட்டினுள் புகுந்து வெண்ணைஉண்ண, அதுகண்டவர் சினந்து கயிற்றால் கட்டியடித்த மத்தின் அடியைப் பொறுத்துக்கொண்ட கணவனாகிய மேகம்போன்ற திருமாலை உண்டும் உறங்கியும்வாழ்க என்று, தன்னை வயிறு நொந்து ஈன்ற பாற்கடலின் குடிமகனாக்கும் இளமான்போன்ற திருமகளை வணங்குவோம்.

( 8 ) **கலைமகள்**

வாவிஅம் போருக மலர்த்தவி(சு) உறும்கடவுள் வாக்கினும்என் நோக்கினுநறா
வழியும் சிதத்தகட்(டு) ஏ(டு)அவிழ்க் கும்கமல மனையிலும் குடிகொண்டபொற்
தூவியம் தோல்தாள் கருங்கடல் கொழித்த செந்துகிர் அனைய வாய்ப்பசும்பொன்
சூட்(டு)எகினம் ஏறும்வெண் பேட்(டு)எகின மலர்மென் துணைத்தாள் துதித்துநிற்பாம்
காவியை முனிந்துசண் பகமீக் குதித்(து)ஒளிர் கனங்குழையை மோதிடும்கண்
கள்பிலிற் றும்தெரியல் சூழ்ந்(து)அளி கள்முரல கனம்கதற வாட்டும் ஐம்பால்
தேவியைச் சகலஉல கும்புரக் கும்பெருஞ் செல்வியைக் கருணைபூத்த
திருவைத் தடம்பணைத் தென்காவை அம்மையைத் தினமும் புரக்கஎன்றே

**குறிப்புரை :** வாவி= குளம். அம்போருக மலர்த்தவிசு= தாமரை மலராகிய இருக்கை. கடவுள்= நான்முகன். வாக்கு= நாக்கு. நோக்கு= கண். சிதம்= வெண்மை. பொன்அம்தூவி= ஒளியுடைய அழகிய சிறகு. தோல்தாள் = அழகியகால். கருங்கடல்= பெருமைபொருந்திய கடல். துகிர்= பவளம். பசும்பொன் சூட்டு= சிறந்த அழகிய கொண்டை பெற்ற. பேட்டு எகினம்= பெண் அன்னப்பறவை. - கலைமகள். காவி= கருங்குவளைபோன்றதன் இருப்பிடம். சண்பகம் மீ= சண்பகமலர் போன்ற மூக்கின்மேல். கனம்குழை= காதில் அணிந்த கனமான காதணி. கள்பிலிற்றும்= தேன்சொரியும். தெரியல்= மாலை. கனம் கதற= மேகம் அலற. ஐம்பால்= ஐந்துவகையாக முடிக்கப்பெறும் கூந்தல். தடம்பணை= பெருமைபொருந்திய வயல் - நன்செய்.

**பொழிப்புரை :** கருங்குவளை மலர்போன்ற தன்இருப்பிடத்தைச் சினந்து, சண்பகமலர் போன்ற மூக்கின்மேல் குதித்து, கனத்த காதணியை மோதும் கண்களைப்பெற்றவளும், சூடிய தேன்சொரியும் மாலையைச் சூழ்ந்து வண்டுகள் முரலும் கூந்தலுடையவளும் ஆகிய, அனைத்து உலகையும் காக்கும் பெருந்தலைவியை, கருணைபூத்த தெய்வத்தை, நன்செய்நிலமுடைய அழகிய திருவானைக்கா அம்மையை நாடோறும் காக்கும்பொருட்டு;

குளத்தில் பூக்கும் தாமரை இருக்கையில் அமரும் நான்முகனின் நாவிலும், என்கண்களிலும், தேன் வழியும் வெண்மையான தகடுபோன்ற இதழ்மலரும் வெண்டாமரை மலரிலும் குடிகொண்டவளும்;ஒளிரும் அழகிய சிறகு, பெருமைபொருந்திய கடல்ஒதுக்கிய செம்மையான பவளம்போன்ற அழகிய கால் மற்றும் அலகு, சிறந்த அழகிய கொண்டை ஆகியன பெற்ற அன்னப்பறவைமேல் ஏறும் வெண்மையான பெண் அன்னமாகிய கலைமகளின் மலர்போன்ற மென்மையான இரு திருவடிகளையும்வணங்குவோம்.

( 9 ) **காளி**

விரிவுற்ற பைஅரா நண்உலகு மண்உலகும் விண்உலகு நன்கு காக்க
வெற்றிகொ(டு) எடுத்தெனக் கைத்தலையின் முத்தலைய வேல் பரித்(து)நீங்(கு)
அருவில் பொலப்பெய ரனைத்தெறப் பொற்றரி அகட்டைக்கிழித்(து) எழும்பே
ராளரி திகைக்க ஒரு கோளரி உகைத்துவரும் யாளிப்பி ணாஅளிக்க
செருவற்(று) ஒடுங்கிக் கரும்சுரும்(பு) இரட்டவில் தண்டன் இறவெண்
திரிபுண் டரத்தநுதல் வெம்புலிங் கம்கொட்டு செம்புலிங் கப்பெருமானை
மருவிப்பன் மான்கண்மதர் நோக்கமறி யச்சூழ மற்றும்ஒரு மான்வயிற்று
வந்தகுற மான்முறை பொருந்தமுக் கடமான் வனத்துவரு மடமானையே.

**குறிப்புரை** : விரிவுற்ற பை அரா= அகலமான படமுடைய பாம்பு - ஆதிசேடன். நண்= (தலையில்) பொருந்திய. வெற்றிகொடு= வெற்றியுடன். கைத்தலை= கையில் . வேல்பரித்து= சூலம் தாங்கி. பொலப்பெயரன்= மிகிடாசுரன். தெற= கொல்ல. பொற்று அரி= இரணியன். அகட்டைக்கிழித்து= வயிற்றைக்கிழித்து. பேர் ஆள் அரி= பெரிய நரசிங்கம். கோளரி= சிங்கம். யாளிப்பிணா= பெண்யாளி - காளிதேவி. செறுவற்று ஒடுங்கி= போரின்றி நீறாகி. கரும்சுரும்பு= கரிய வண்டுகள். இரட்ட= ஒலிக்க. வில்தண்டன்= வில்லேந்திய மன்மதன். இற= நீறாக. வில்தண்டன் கரும்சுரும்பு இரட்ட செறுவற்று ஒடுங்கி இற என்று கூட்டுக. வெம்புலிங்கம்= வெப்பம் மிக்க நெருப்பு. மருவி= தழுவி. குறமான்= வள்ளிநாயகி. முறை பொருந்த= மாமியென்னும் உறவு பொருந்த. முக்கடமான் வனம்= மும்மதமுடைய யானையாகிய விலங்குகள் வாழும் ஆனைகா.

**பொழிப்புரை** : போரின்றிக் கரும்பு வில்லில் கரிய வண்டுகள் ஒலிக்க நீறாகுமாறு மன்மதனை எரித்த வெண்மையான திருநீற்றால் முக்கோடுகள் கொண்ட நெற்றியில் நெருப்பு உமிழும் கண்ணுடைய அருள்தரு செம்புலிங்கப் பெருமானைத் தழுவி; பலமான்களும் மதர்த்த பார்வையை அறியும்பொருட்டுத் தன்னைச் சூழ, தான்ஒருமானாகிய வள்ளிநாயகிக்கு மாமி முறையாகி, ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள அருள்தரு அகிலாண்ட நாயகியை;

அகலமான படமுடைய ஆதிசேடன் தலையில் பொருந்திய நிலவுலகையும், தேவருலகையும் நன்கு காக்கும்பொருட்டு வெற்றியுடன் கையில் தூக்கியதுபோல் முத்தலைச் சூலம் ஏந்தி, செருக்குடன் நீங்காமல் நின்ற மகிடாசுரனைக் கொல்ல; இரணியனின் வயிற்றைக்கிழித்து நின்ற நரசிங்கமும் திகைக்குமாறு, ஒப்பற்ற தன்சிங்கத்தைச் செலுத்தி வரும் பெண்யாளியாகிய காளி - துர்க்கை காப்பாளாக.

( 10 ) **சத்தமாதர்கள் ( வேறு )**

அனமிசை ஏறி உலாவல் தொடுத்தவள் அடுபுலி கீறிய தோல்வைத்(து) உடுத்தவள்
அசுரகு லாதிபர் சாயப்ப டுத்தவள் அலைகடல் நீர்அழ லாகக் கடுத்தவள்
இனம்அடர் பாரைஓர் கோடிட்(டு) எடுத்தவள் இறையொடு மாமலை ஏகல்தடுத்தவள்
எரிகவர் வேல்கொடு காவற்(கு) அடுத்தவள் எனும்ஒரு மாதர்கள் தாளைத்து திக்குதும்
கனமலி வாய்வரல் போலச்சி னத்தெழு கடம்இழி தோல்வர ஓதைப் பரிப்படை
கடல்அலை போல்வர மேருக் கிரிபுரை கதிர்விடு தேர்வர வீரப் புயப்படை
வனம்வர வானவர் பாறக் கறுத்(து)எதிர் வருமொரு தாருகன் ஓடத்து ரத்திய
மதலைஉ லாவுக வானுத் தமப்பொழில் வளம்மலி காவைநன் மாதைப்பு ரக்கவே.

**குறிப்புரை** : அனம்= அன்னம். அடு= கொல்லும். குலாதிபர்= குலத்தலைவர்கள். சாயப்படுத்தவள்= கொன்றவள். கடுத்தவள்= சினந்தவள். பாரை= உலகை கோடு= கொம்பு. கவர்வேல்= முத்தலைசூலம். கனம்மலிவாய் வரல்= மேகக்கூட்டம் திரண்டுவருதல். கடம் இழி தோல்= மதம்பெருகும் யானைப்படை. ஓதை= ஆரவாரம். பரிப்படை= குதிரைப்படை. புரை= ஒத்த. கதிர்விடு= கூரிய படைகளை ஏவும், புயப்படை வனம்= காலாட்படைக்காடு. பாற= சிதறி ஓட. கறுத்து= மிகச்சினந்து. தாருகன்= தாருகாசுரன். மதலை= மகன் - முருகன். கவான்= கிளை.

**பொழிப்புரை** : மேகக்கூட்டம் திரண்டுவருவதுபோல் சினந்து வந்த மதநீர் பொழியும் யானைப்படை, கடல் அலைபோல்ஆரவாரத்துடன் வந்த குதிரைப்படை, கூரிய படைகலன்களை ஏவும் மேருமலைபோல் வந்த தேர்ப்படை, வீரம்மிக்க தோளாற்றல் மிக்க காலாட்படைக்காடு ஆகியன வர, அதனால் தேவர்கள் சிதறிஓட, சினத்துடன் எதிர்த்துவந்த தாருகாசுரன் ஓடுமாறு துரத்திய மகனாகிய முருகன் உலாவும்

கிளைகள் செழித்த சிறந்த சோலைவளம் மிக்க திருவானைக்காவில் எழுந்தருளியுள்ள அருள்தரு அகிலாண்ட நாயகியைக் காக்குமாறு

அன்னத்தை ஊர்தியாகக் கொண்டு உலாவுகிற கலைமகள், கொல்லும் புலியைக் கிழித்து எடுத்த தோலாடை உடுத்த துர்க்கை, அசுரர்குலத் தலைவர்களைக் கொன்ற கௌமாரி, அலைகிற கடல்நீர் நெருப்பாகச் சினந்த மகேஸ்வரி, செறிந்த பூமியை ஒருசேரத்தன் ஒப்பற்ற கொம்பினால் எடுத்த வராகி, இந்திரன் செல்வதைத் தடுத்த இந்திராணி , கொடிய சூலத்தால் காக்கும் சாமுண்டி ஆகிய ஏழுமாதர்களை வணங்குவோம்.

( 11 ) **முப்பத்து மூவர் ( வேறு )**

வேலையின் உதித்தவிடம் வைத்தகிரி பத்தன்எளி(து)
அற்புக்க ளிப்பொடு காணஎதிர் நிற்பவும்
மே(வு)இரத முக்கனிச ருக்கரைமு தற்சுவைகள்
கைப்பத்த மிழ்ப்பாடல் நாநனிகொ ழிப்பவும்
வீறுசி வத்தலந டக்கநடை கற்றிலன்எ
னப்பெற்ற நல்தாதை தோளிடைச் சுமப்பவும்
வீழிமிழ லைப்பதிஎன் அப்பன்மணி அப்புபடி
வைத்திட்ட பொற்காசு நாடொறும் எடுப்பவும்
மாலைமதி வைத்தகுடி லப்பரன் எனச்சிவிகை
பெற்றுத்தொ னிக்காள மோடுகுந டத்தவும்
மாமறைவ னக்கதவம் மெய்ப்புகழர் எச்சம்முன்
அடைப்பச் சிறப்(பு)ஊறு வாய்அமுது கொட்டவும்
வார்இலைகள் மொய்த்தபுரு டப்பனையில் அப்பொழுது
கொத்துக்கு லைக்காய் குலாவஅருள் வைப்பவும்
மாதர சிக்கும்ஓர்கு லச்சிறைத னக்கும்உள்
உவப்பப்பொ நித்(து)ஓலை காணுபுவி யப்பவும்
காலைவரு செங்கதிர்க டுப்பஒர் கடத்(து)உறுவெள்
எற்புக்கு ணத்தொடு மா(து)உரு எடுப்பவும்
காண்இ(து)எ னக்கொள்மட னில்செறுநர் வைத்ததம
வெப்பத்த ழல்சீறி மாறன்உடல் தைப்பவும்
காய்சினஅ ழற்குள்மடல் பச்சென எடுத்துவரை
கொட்டப்பெ ருக்(கு)ஏறு நீர்எதிர் செலுத்தவும்
காருடல் உடைப்பறித் தலைச்சமணர் முற்றநெடு
விட்(டு)ஒட்ட முட்டாரும் மீஇவர வைப்பவும்
சோலைபுடை சுற்றுமது ரைப்பதி முதற்பதிமு
ழக்கத்த ழைத்(து)ஓகை நீறுகை குழைப்பவும்
தோம்இல்புக லிக்குரிசி லுக்(கு)அமு(து) அளித்தகு
யிலைப்பொன் தகட்டுடு மாமணி குயிற்றிடும்
சூழ்எயில் மதக்கரிவ னத்(து)அமர் அனத்தைஇரு
செப்புத்த னப்பார மாமயிலை நித்தலும்
சூரியர்ம ருத்துவர்உ ருத்திரர்வ சுக்கள்எனும்
முப்பத்து முக்கோடி தேவர்கள் புரக்கவே.

**குறிப்புரை : அடி.** 1 . வேலை= பாற்கடல். வைத்த= கழுத்தில் வைத்த. கிரிபதத்ன்= கயிலைமலை அன்பன் - சிவபிரான், அற்பு= அன்பு. இரதம்மேவு= சுவைபொருந்திய. வீ(று)உறு= சிறப்பு மிக்க. தாதை= தந்தை. பரிக்கவும்= தூக்கிக்கொண்டு செல்லவும். என் அப்பன்= என் அப்பன் ஆகிய சிவபிரான். அப்பு= நாடோறும். மணி படி= அழகிய பீடத்தின் படியில்.

**குறிப்புரை : அடி** - 2 . குடிலம்= சடை. என= போல. சிவிகை= பல்லக்கு. காளத்தொனி= எக்காள முழக்கம். கு= உலகம். மாமறைவனம்= சிறந்த திருமறைக்காடு - வேதாரண்யம். மெய்ப்புகழர் எச்சம்= ஞானப் புகழ்வாய்ந்த அப்பரடிகள் திறந்தபின் அத்திருக்கதவம் மூடுதலாகிய செயலை. திருப்பாடல்=

தெய்விகப்பாடல். வார் இலைகள்= நீண்ட ஓலைகள். புருடப்பனை= ஆண்பனை. மாதரசி= மங்கையர்க்கரசியார், ஓலை காணுபு பொறித்து= ஓலையில் காண எழுதியதை.

**குறிப்புரை : அடி - 3** கடம்= குடம். வெள் எற்பு= வெண்மையான எலும்பு. மாது= பூம்பாவை. குணத்தொடு எடுப்பவும்= முன்னைப்பண்புகளுடன் தோன்றவும். காண்= இதனைக்காணுங்கள். மடனில்= மதுரைத் திருமடத்தில். வெப்பத்தழல்= வெப்பம்மிக்க நெருப்பு. தம சீறி= தீவைத்த அவர்களையே சினந்து. மாறன் உடல் தைப்பவும்= பாண்டியன் உடம்பில் வெப்புநோயாக ஏறவும். காய்சின அழற்குள்= எரிக்கும் கொடிய நெருப்பில். மடல் பச்சென எடுத்து= ஓலையை அதன் பசுமை மாறாமல் எடுத்தும். வரைகொட்ப= எல்லைகடந்து. ஏறுநீர்= மிகுந்துவரும் நீர். எதிர் செலுத்தவும்= தண்ணீரை எதிர்த்துச் செல்லுமாறு செய்யவும். கார்= அழுக்கு. உடலின் உடை தலைபறி சமணர்= உடம்பில் உடுத்த உடையையும் தலைமயிரையும் பறிதெறிந்த சமணர். ( சமணர்; பலர் நீராடாத திகம்பரர், தலைமயிர் பறித்துக் கொண்ட தலையினர் ). முட்ட ஒட்டார்= பெரும்பகைவர். நெடுவிட்டு = நீண்ட கழுமரம் ஏறுதலைக் கைவிட்டு. மீ இவர= நெடுந்தொலைவு ஓட.

**குறிப்புரை : அடி . 4 .** புடை= பக்கங்களில். பதிமுழுக்க= ஊர்கள் அனைத்தும். ஓகை= களிப்பு. கை நீறு குழைப்பவும்= கைகளில் திருநீறு குழைத்துத் தரிக்கவும். தோம்= குற்றம். புகலிக்குரிசில்= சீகாழித் திரு ஞான சம்பந்தர். அமுது= திருமுலைப்பால். மதகரிவனம்= திருவானைக்கா. செப்பு= புகழப்பெறும். சூரியர்= தாக்கு, சக்கரன், அரியமன், மித்திரன், வருணன், அம்சுமான், இரண்யன், பகன், திவச்சுவான், பூடன், சவித்ரு, துவட்டன் என்ற பன்னிருவர். மருத்துவர்= நாசத்யன், தரைன் என்ற இருவர். உருத்திரர்= மாதவன், சிதன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசையன். வீமதேவன், பவோற்பவன், காபாலி, சௌமியன் என்ற பதினொருவர். வசுக்கள்= பானலன், அணிலன், ஆபச்சையன், சோமன், தரன், துருவன் பிரத்தியூசன், பிரபாசன் என்ற எண்மர். ( முப்பத்து முக்கோடி= முப்பத்து மூவகையினர்.)

**பொழிப்புரை : அடி . 1 .** திருப்பாற்கடலில் தோன்றிய நஞ்சினைக் கழுத்தில் வைத்தவனும், கயிலைமலை அன்பனுமாகிய சிவபிரான் எதிரேநின்று காட்சிகொடுக்க, சர்க்கரையுடன் சேர்த்த முக்கனிச் சுவையும் கசப்பு என்னுமாறு தமிழ்ப்பாக்களைத் திருஞானசம்பந்தர் பாடவும்; சிறப்புப் பொருந்திய சிவத்தலங்களுக்கு நடந்துசெல்லும் அளவு நடை கற்கவில்லை என்பதால் தந்தை சிவபாத இருதயர் தன்தோளில் தூக்கிக்கொண்டு செல்லவும்; திருவீழிமிழலைப்பதியில் என்அப்பனாகிய சிவபிரான் நாடோறும் தனது அழகிய பீடத்தில் பஞ்சம்போக்க வைத்த பொற்காசினை எடுத்துக் கொள்ளுமாறு செய்ததும்;

**பொழிப்புரை : அடி 2 .** சடையில் பிறை சூடிய சிவபிரானைப் போன்று பல்லக்குப் பெற்று, எக்காளம் முழங்க உலகில் செல்லவும்; வேதங்கள் திருமறைக்காட்டுத் திருக்கோயிலின் கதவுகளைச் சாத்திவிட்டுச் செல்ல, அதனை அப்பரடிகள் திறக்கப்பாடித்திறந்தபின், மூடுமாறு செய்யும் எஞ்சிய செயலைப் பாடலாகிய அமுதினைக்கொட்டிச் செய்ததும்; நீண்டஓலைகள்செறிந்த ஆண்பனைகள் அப்போதே காய்கள்கொத்துடன் கூடிய குலைகளாகக் காய்க்குமாறு அருளியதும்; மாதரசியாகிய மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் இருவரும் மனம் மகிழ்ந்து அனுப்பிய ஓலைகண்டு வியப்பவும்;

**பொழிப்புரை : அடி . 3 .** காலை ஞாயிறுபோல் ஒளிரும் ஒரு பொற்குடத்தில் இருந்த மிகவெண்மை நிறத்துஎலும்புகளுக்கு உரியவளை முன்புபோல் நற்குணங்களுடன் கூடிய பூம்பாவை ஆக்கியதும்; மதுரையில் அடியவருடன் தங்கியிருந்த மடத்திற்கு " இதோ பாருங்கள் " என்று சமணர் கொடியதீயிட, சினந்து அத்தீயைக் கூன்பாண்டியன் மேல் பையவே செல்லுமாறு பணித்து, அது அவனைக்கொடியவெப்பு நோயாக பற்றச்செய்ததும்; மிக்ககொடிய நெருப்பில் " போகமார்த்த " என்ற திருநள்ளாற்றுப் பதிகம் எழுதியிட அது கருகாமல் பசுமையுடன் இருக்கச்செய்ததும்; " வாழ்க அந்தணர் " பதிகம் எழுதிய ஓலை வைகையில் வந்த எல்லையற்ற வெள்ளத்தில் எதிர்த்துச்சென்று திருவேடகத்தில் கரைஏறச் செய்ததும்; அழுக்குப்படிந்த உடலில் தலைமயிர் பறித்த சமணர்கள் அனைவரும் நீண்ட கழுமரம் ஏறாது கொடிய பகைவர்போல நெடுந்தொலைவு ஓடச் செய்ததும்;

**பொழிப்புரை : அடி. 4 .** சுற்றிலும் சோலைசூழ்ந்த மதுரைநகரம் முதல் அனைத்து ஊர்களிலும் மக்கள் மனம் தழைத்து மகிழ்வுடன் திருநீறு குழைத்துத் தரிக்கவும் ஆகிய இவைசெய்த குற்றமில்லாத சீர்காழித் திருஞானசம்பந்தருக்குத் திருமுலைப்பால் அளித்த குயிலும், சிறந்த மணிகள்பதித்த பொன்தகட்டினால் போர்த்தப்பெற்ற மதில்சூழ்ந்த திருஆனைக்கா அன்னமும்; புகழப்பெறும் கனத்த இருமுலைகளுடைய அழகிய அன்னமும் ஆகிய அருள்தரு அகிலாண்ட நாயகியம்மையை, சூரியர், மருத்துவர், உருத்திரர், வசு ஆகிய முப்பத்து மூவகைத் தேவர்கள் காப்பாராக. ( முப்பத்து முக்கோடிதேவர் பற்றிய விளக்கத்தை முன்னுள்ள குறிப்புரையில் காண்க )

**காப்புப்பருவம் முற்றிற்று.**

## செங்கீரைப் பருவம்

********************************

( 1 ) பங்கயம் அலர்த்திவரு செங்கதிர் நிகர்த்தவுடல் பனிமதி நிறம்கொளாது
படர்அரி மதர்த்தகண் குழியாது நாடிகள் பசந்துநா றாது நுனைவாய்
கொங்கைகள் கறாதுமண் சுவைநாப் பெறா(து)அகடு குழையா(து) இனம்பல்
குறிபடா(து) அருமையொ(டு) உயர்த்(து)இமய மாதேவி குளிர்புனல்பொன் வளைகுளிறிடும்
அங்கையில் எடுத்(து)ஆட்டி நீ(று)இட்டு மண்காப்(பு) அணிந்(து)ஒழுகு திருமுலைப்பால்
ஆர்வமொ(டு) அருத்தஉண்(டு) அயல்தவழ்ந்(து) ஏறிமலை அரையன் புயத்தவன்பொன்
செங்கைவிரல் சிரம்மீது பற்றிநின்(று) ஆடுமயில் செங்கீரை ஆடிஅருளே
தென்காவை அம்பதி செழிக்கவரும் என்அம்மை செங்கீரை ஆடிஅருளே.

**குறிப்புரை** : பங்கயம்= தாமரைமலர். நிகர்த்த= ஒத்த. பனிமதி நிறம்= மூடுபனிமூடியது போன்று ஒளி. அரி= செவ்வரி. மதர்த்த= களிப்புடைய. பசந்து= நிறம்மாறி. கொங்கைகள் நுனை= முலைக்காம்பு. கறாது= கருநிறம் பெறாது. மண்சுவை நாப்பெறாது= தரையில் முகம்கவிழ்த்தலால் வாயில் மண் அப்பாது. அகடு= வயிறு. இனம்= கூட்டமான. பற்குறி= பல்குத்தியதால் ஆனபுண். உயர்த்து= தலையினை உயர்த்தி. இமயமாதேவ= பார்வதி தேவி. வளை குளிரிடும் அங்கையில் குளிர்புனல் எடுத்து. குளிரிடும்= ஒலிக்கும். ஆட்டி= நீராட்டி. நீறு இட்டு= திருநீறு பூசி. மண்காப்பு அணிந்து= மண்ணினைதொட்டு அதைக்காக்கும் பொருளாக இட்டு - திருஷ்டிப் பொட்டிட்டு. அயல்= அருகில். மலை அரையன்= இமவான். பொன் செங்கைவிரல் பற்றி புயத்த ஏறி சிரம்மீது பற்றி நின்று. பொன்= அழகிய. புயத்த ஏறி= தோள்களில் ஏறி.

**பொழிப்புரை** : இமயப்பெருந்தேவியாகிய பார்வதி, வளையல்கள் ஒலிக்கும் தனது உள்ளங்கையால் குளிர்ந்த தண்ணீரை எடுத்து நீராட்டி, துவட்டியபின் திருநீறுஇட்டு, திருஷ்டிகழிக்க மண்ணினைத் தொட்டுக் காவற்பொட்டு இட்டு, வெளிப்படும் தனது முலைப்பாலினை ஆர்வமுடன் ஊட்டப்பருகியபின், அருகில் தவழ்ந்துபோய், இமவானின் அழகிய செங்கை விரல்களைப்பற்றிக்கொண்டு ஏறிப்புயத்தில் நின்று, அவன் தலையைப் பற்றிக்கொண்டு ஆடும் மயில் போன்றவளே !

தாமரை மலர்களை மலரச்செய்து கிழக்கில் எழும் செஞ்ஞாயிறு போன்றஉன் செந்நிறஉடம்பு, மூடுபனிமூடிய குளிர்ந்த நிலவுபோல் ஒளிகுன்றாமல் செவ்வரி படர்ந்த களிப்புடைய கண்கள் களைப்பால் உட்குழியாமல், நாடிகள் தம்நிறம் மாறாமல், முலைகளின் காம்புகள் தரையில்மோதி இரத்தம்கட்டிக் கருநிறம் பெறாமல், வயிறு உட்குழியாமல், கூட்டமாக நிறைந்த பற்கள் குத்திப்புண்படுத்தாமல் இருக்க; அழகுடன்உன் தலையை நிமிர்த்திக்கொண்டு செங்கீரை ஆடியருள்க ! அழகிய திருவானைக்கா, உன்அருளால்செழிக்க வந்த என்தாயே ! செங்கீரை ஆடிஅருள்க.

**விளக்கம்** : " பங்கயம் அலர்த்தி .......... இனம் பல்குறிபடாது " என்பதுமுடிய உள்ள பகுதியில்; இருமுழந்தாள் இருகை ஊன்றி, ஒருமுழங்கால் எடுத்துவைக்க முயலும்போது தடுமாறிஆடும்ஆட்டம் செங்கீரை ஆடுதல் என்பதையும்; அப்போது குழந்தைக்கு நேரலாம் என்ற துன்பவாய்ப்புகளையும் அவ்வாய்ப்புகள் நிகழாதிருத்தல் வேண்டும் என்பதையும் உணர்த்தினார்.

**இலக்கணகுறிப்பு** : காவை - மரூமொழி.

( 2 ) கார்ஆடு மாடம்மலி கூடலில் பொன்மாலை கட்(டு)அவிழ்ந்(து) இழிந்த வண்மடிக்
கட்(டு)அவிழ்தல் கண்டுவந்(து) அம்மைவா என்(று)இரு கரத்துவிரல் நீட்டும்நிம்பத்
தார்ஆடு மார்பன்இரு குழைஇருகை பற்றிஅத்தட மார்புதாழ்ந்(து) ஒளிரும்வெண்
தண்தரள மாலையின் இருந்துமற் றொருமாலை தாள்உதைந்(து) ஊசலாட
வார்ஆடும் இருமுலை சுமந்தமட வார்தொடர வளரும்மும் முலைசுமந்து
வான்நாடு முதல்பல நாட்டும்க யல்கட்டி வடகயிலை சென்று பொதுவில்
சீர்ஆடும் எந்தையொடு போராடும் ஒருபூவை செங்கீரை ஆடிஅருளே
தென்காவை அம்பதி செழிக்கவரும் என்அம்மை செங்கீரை ஆடிஅருளே.

**குறிப்புரை** : கார் ஆடு= மேகம் தவழும். பொன்மாலை= பொன்னாலான மேகலை. இழிந்த= கீழ் இறங்கிய. மடிக்கட்டு= ஆடையின்கட்டு.. நிம்பத்தார்= வேப்பம்பூமாலை. குழை= மனம் நெகிழ்ந்த. தட=

அகன்ற. தரளமாலை= முத்துமாலை. தாள்உதைந்து= காலால்அழுத்தப்பட்டு. மடவார்= படைப்பெண்கள். கயல்கட்டி= வென்று மீன்கொடி பறக்கச்செய்து. பூவை= கிளியே.

**பொழிப்புரை** : மேகம் தவழும் மாளிகைகள் நிறைந்த மதுரையில், இடையில்கட்டிய மேகலையின் இறுக்கமான கட்டிலிருந்து ஆடையின்கட்டு நழுவுவதைக்கண்டு , தாயே இங்கேவா என்றுமனம் நெகிழ்ந்து தன்இருகைகளையும் நீட்டிய வேப்பம்பூ மாலையணிந்த பாண்டியமன்னனின் விரல்களைப்பற்றிக்கொண்டு ஏற, அவனது அகன்றமார்பில் ஆடும் கொத்தான முத்துமாலையிலிருந்து ஒரு மாலை காலால் அழுத்தப்பட்டு ஊசலாடத் தாழ்ந்து ஏறி பின்னர், குலுங்கும்இருமுலைகளையும் கச்சினால் கட்டிய மகளிர்படை தன்னைத்தொடர, தான் தனது மூன்றுமுலையுடன் தேவருலகம்முதல் பலநாடுகளையும் தன்கயற்கொடி பறக்க வென்று, வடதிசையில் கயிலைசென்று, அனைவர்க்கும் சிறப்புகள்பொருந்தப், பொன்னம்பலத்தில் - பொதுப்படக்கூத்தாடும் எமது தந்தையாகிய சிவபிரானுடன் போராடும் ஒப்பற்ற கிளியே ! செங்கீரை ஆடிஅருள்க.! திருவானைக்கா ஆகிய அழகிய தலம் அருளால் செழிக்கவாழும் எனது தாயே! செங்கீரை ஆடிஅருள்க.

( 3 ) கல்திணி தடம்புயக் கார்உடல் திமிலர்மீன் கையுறை அளிப்ப வாங்கிக்
காவல்புரி நெய்தல்அம் கண்ணியன் அளாவிக் கடல்துகிர் படர்ந்த மனையின்
பொன்திகழ் முலைச்சிலை சுமந்(து)இடை நுடங்கவாள் பொருவுதம்கண் பகையெனாப்
புலால்மீன் உணக்குத் தணந்துமுக மன்பல புகன்றுமகிழ் குரவை குழற்றிச்
சுற்றிஎம் பெருமான் குடம்பைதோள் சூட்டச் சுறாவி லைப்பைம் பொற்கலன்
சூட்டிஅலை முடியமுள் மடல்தாழை அம்போது சுரிகுழற்(கு) உறமு டித்துச்
சிற்றிடை அளத்தியர்கள் கொண்டாடு ஒருமங்கை செங்கீரை ஆடி அருளே
தென்காவை அம்பதி செழிக்கவரும் என்அம்மை செங்கீரை ஆடி அருளே.

**குறிப்புரை** : கல்திணி= பாறைபோல் வலிமையான. திமிலர்= நெய்தல் நிலமக்கள். கையுறை= காணிக்கை. நெய்தல் அம்கண்ணியன்= அழகிய நெய்தல்மலர் மாலையணிந்த தலைவன். கடல் துகிர் அளாவிப் படர்ந்த= கடலின் பவளம் சேர்ந்து படர்ந்த - கட்டிய. மனையில்= வீட்டில். பொன்= பொற்சுணங்கு. சிலைசுமந்து= வில்போன்ற புருவத்தின் கீழ். தம்மனையின் வாள்பொருவு கண்= தமது மனைவியின் வாள்போன்ற கண். எனா= என்று. மீன்புலால் உணக்கு= மீனாகிய புலாலினைக் காயவைத்தல். தணந்து= கைவிட்டு. எம்பெருமான் தோள், சுறாவிலைப்பொன்கலன்சூட்ட, முகமன் பலபுகன்று குரவைகுழற்றிச் சுற்றி சூட்டி என்று கூட்டுக. எம்பெருமான்= எம் தலைவனாகிய சிவபிரான். தோள் சூட்ட= தோளில் அணிவிக்க. குடம்பை= சுறாவின் உடம்பை. விலைப்பொன்கலன்= விற்றுகிடைத்த பொன்னாலான அணிகலன், சூட்டமுகமன் புகன்று= சூட்டும்பொருட்டுப் போற்றுதல் கூறி. குரவை குழற்றி= குரவைஒலி எழுப்பி. சுற்றி= சுற்றிவந்து. சூட்டி= அணிவித்து. அலை முடிய= கடல் அலைகளின் விளிம்பு. தாழைஅம்போது= தாழையின் அழகியமலரினை. சுரி= சுருண்ட. உற முடித்து= பொருத்தமாகச் சூட்டி. அளத்தியர்= உப்பு அமைப்போரின் பெண்டிர்.

**பொழிப்புரை** : பாறைபோல் வலிமையான தோள்களும், கரிய நிறமுடைய உடம்பும் பெற்ற நெய்தல் நிலமக்கள், மீனினைக் காணிக்கையாகத் தர, வாங்கிய அப்பகுதியைக் காக்கும் தலைவனாகிய நெய்தல் மலர்மாலையணிந்தவன், கடலின்பவளம் சேர்த்துக் கட்டிய வீட்டில் உள்ளவளும் பொற்சுணங்கு விளங்கும் முலைகளும், முலைகளின் பாரத்தால் ஒசியும்இடையும், வில்போன்ற நெற்றியின்கீழ் அமைந்தவாள்போல் விளங்கும் கண்களும் கொண்ட தன்மனைவியிடம்தர, அவர்கள் தமது நீண்டகண்களுக்கு வாளைமீன் பகைஎன்பதால், அதன் உடம்பினைக் காயவைத்தலைக் கைவிட்டு, அதனை விற்றுப்பெற்ற பொன்னாலான அழகிய அணிகளை எம்தலைவனாகிய சிவபிரானுக்குச் சூட்டும்பொருட்டுப் பெருமானைப் போற்றிமகிழ்ந்து குரவைஒலி எழுப்பிச் சுற்றிவந்து சூட்டி; கடல் அலைகளின் விளிம்பில் வளர்ந்த முட்களுடன் கூடிய தாழையின் அழகிய மலரினை அம்மையின் சுருண்ட கூந்தலுக்குத் தக்கவாறு சூட்டி; அவ்வளத்தியர் கொண்டாடும் ஒப்பற்றவளே ! செங்கீரை ஆடியருள்க. திருவானைகா ஆகிய அழகியதலம்அருளால்செழிக்க வாழும் என் தாயே ! செங்கீரை ஆடியருள்க.

( 4 ) அஞ்சிஅய ரும்கமலம் இன்றுஅடல் உடைத்தாய் அடர்ந்த(து)என நாணி உடல்கூன்
ஆகிய மதிக்கொழு நனைக்கண்டு அரற்றிடும் அரக்காம்பல் மான மணிவாய்
வெஞ்சினம் சிறி(து)எழலி னாற்சின்மொழி கழறஅவண் விர(வு)அரவு துவளல் ஏய்ப்ப

மின்இடை தளாடமந் தாகினி எனும்பெயரள் வெந்நிட தவழ்ந்து மாலை
மஞ்சின்ஒளி பாய்புய வரைக்கண் தவழ்ந்தும்அகன் மார்பவெண் பொடிக ரைத்தும்
வண்கைவாழ் கழிதலை புகுந்துமறு கச்சடை வனம்சேப்ப எந்தை முடிமேல்
செஞ்சிலம்(பு) ஒலிடும் அடிக்கமலம் நீட்டினவள் செங்கீரை ஆடி அருளே
தென்காவை அம்பதி செழிக்கவரும் என்அம்மை செங்கீரை ஆடி அருளே.

. **குறிப்புரை :** அஞ்சி அயரும்= நிலவின் ஒளிக்கு அஞ்சி வாய்மூடும். கமலம்= தாமரை. (செங்கீரைப்பருவ அன்னையின் திருவடி). அடல்உடைத்தாய்= வீரமுடன். அடர்ந்தது= மோதியது. என= என்றுஎண்ணி. உடல் கூன் ஆகிய மதிக்கொழுநன்= உடம்பு வளைந்தபிறையாகிய கணவன். அரக்காம்பல் மான மணிவாய்= செவ்வாம்பல் மலர் போன்ற அழகியவாய். எழலினால்= எழுந்ததால். சின்மொழி கழற= சிலசொற்கள் கூற. அவண் விரவு= அங்குள்ள. துள்ளல் ஏய்ப்ப= துள்ளுவது போல. தளாட= தள்ளாட. மந்தாகினி=கங்கை. வெந்நிட= புறங்காட்டிஓட. மாலைமஞ்சு= மாலைகாலத்துச் செம்மேகம். புயவரை= தோள் ஆகிய மலை. மார்ப= மார்பில் பூசிய. வெண்பொடி= திருவெண்ணீறு. வண்கைவாழ்= வளமான அருள்வழங்கும் கையில் இருக்கும். கழி= கொம்பு - மான். தலைபுகுந்து மறுக= வானில் புகுந்து மனம்வருந்த. செஞ்சடை வனம்= செம்மையான சடைக்காடு. சேப்ப= சிவப்ப. எந்தைமுடிமேல்= எம்தந்தையாம் சிவபிரான் தலையில். ஒலிடும்= ஒலிக்கும்.

**பொழிப்புரை :** நிலவின் ஒளிக்கு அஞ்சி வாய்மூடும் - குவியும் தாமரைமலர். இப்போது தன்னை வீரமுடன் மோதியது என்று எண்ணி, உடல்வளைந்த நிலவாகிய கணவன் நிலைகண்டு, வருந்தும் செவ்வாம்பல் மலர்போன்ற உனது சின்னஞ்சிறிய அழகிய வாயில் கங்கையை நோக்கிச் சினஒலியுடன் சிலசொற்கள் வெளிப்பட்டது. அதனால், அங்குள்ள அரவு துள்ளுவது போல், மின்னும் இடையுடைய கங்கைஎன்ற பெயருடையவள் புறங்காட்டி ஓடி, பேரொளி பாயும் மாலைக்காலத்துச் செம்மேகம்போல் செக்கச்சிவந்த மலைபோன்ற தோள்களாகிய மலையில் பாய்ந்து, அகன்ற மார்பில் பூசிய திருவெண்ணீற்றினைக் கரைக்க; வளமான அருள்வழங்கும் கையில்இருக்கும் கொம்புடையமான், பெருமானின் சடையில் புகுந்து மனம் வருந்தவும், சடையின் நிறம் செந்நிறமடையவும், எமது தந்தையாம் சிவபிரானின் தலையில், சிலம்பொலிக்கும் தனது திருவடித்தாமரைகளை நீட்டியவளே! செங்கீரை ஆடிஅருள்க; திருவானைக்கா ஆகிய அழகியதலம் அருளால்செழிக்க வாழும் என்தாயே! செங்கீரையாடி அருள்க.

**விளக்கம் :** செங்கீரைப்பருவத்து அம்மை, சினந்து சிலகூறியதன் விளைவுகள் கூறினார்.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுளில் இரண்டு உவமையணிகள் உள.

( 5 ) நந்தாத செல்வச் சிலம்பரசன் மனையாட்டி நகில்ஒழுகு பால்உண்டுபுன்
நகைநாற அவள்வாய் உமிழ்ந்தும் துகிர்ப்பாவை நயமொழி மொழிந்(து)எடுத்து
வந்(து)ஆவல் பூண்(டு)அணி அணிந்தும் தருப்பாவை வல்இடையின் மெல்லிடைத்தான்
வனையும்மென் சிறுசீரை சுற்றியும் சுடர்ஆடி மன்னுநிழ லைக்கூவியும்
சந்(து)ஆர் திருத்தாதை அகன்மார்(பு) உழக்கித் தவழ்ந்தும்விளை யாட்(டு)அயர்தல்போல்
தண்காந்தள் அம்கைகள் நிலத்(து)உற நிமிர்ந்துமந் தாகினிப் புனல்அலம்பும்
செந்தா மரைச்சரண் கோட்டிப்பி ராட்டிநீ செங்கீரை ஆடிஅருளே
தென்காவை அம்பதி செழிக்கவரும் என்அம்மை செங்கீரை ஆடிஅருளே.

**குறிப்புரை :** நந்தாத செல்வம்= குறைவில்லாத செல்வம். சிலம்பரசன்= இமயமலை அரசன் ஆகிய இமவான். நாற= வெளிப்பட. துகிர்ப்பாவை நயம் மொழிந்து எடுத்துவந்து ஆவல்பூண்டு அவள்வாய் உமிழ்ந்தும் என்று கூட்டுக. துகிர்ப்பாவை= பவளப்பதுமை. அவள்வாய்= துகிர்பாவையின் வாயில். அணிஅணிந்து= அணிகலன் பூட்டி. தருப்பாவை = மரத்தாலான பதுமை - மரப்பாச்சி. மெல்வல்இடை= மெலிந்த வலிமையான இடுப்பு. வனையும்= அலங்கரிக்கும். சிறுசீரை= சிற்றாடை. சுடர்ஆடி= ஒளிபொருந்திய கண்ணாடி. மன்னு= பெருமைபொருந்திய. கூவியும்= அழைத்தும். சந்து= சந்தனம்.

உழக்கி= மிதித்து. தண் காந்தள்= தண்ணிய காந்தள்மலர். உற= பொருந்த - வைத்து. நிமிர்ந்து= தலை நிமிர்ந்து. மந்தாகினி= கங்கை. அலம்பும்= கழுவும். கோட்டி= வளைத்து.

**பொழிப்புரை :** இமயமலையின் குறைவில்லாத செல்வமுடைய அரசனாகிய இமவானின் மனைவி மேனையின் முலைக்கண் ஒழுகும் பாலினையுண்டு, புன்னகை வெளிப்பட, பவளத்தால் ஆனபதுமைக்கு இன்சொல் கூறி எடுத்துவந்து ஆவலுடன் அப்பவளப்பாவையின் வாயில் உமிழ்ந்தும் அணிகலன் பூட்டியும்; மரத்தால்ஆன பதுமையின் வலிமையான மெலிந்த இடுப்பில் அலங்கரிக்கும் மென்மையான சிற்றாடை கட்டியும், ஒளிபொருந்திய கண்ணாடியில் காணும் நிழலைக்கூவி அழைத்தும் விளையாடி மகிழ்தல்போல்; குளிர்ந்த காந்தள்மலர்போன்ற கையினைநிலத்தில் வைத்துத், தலைநிமிர்ந்து, கங்கைநீர் கழுவும் உனது செந்தாமரைபோன்ற ஒருதிருவடியை வளைத்துத் தலைவியே ! நீ செங்கீரையாடி அருள்க. திருவானைக்கா ஆகிய அழகியதலம் அருள்செழிக்க வாழும் என்தாயே! செங்கீரை ஆடியருள்க.

**விளக்கம் :** செங்கீரையாடுதல் என்பது; “இருகை நிலத்தூன்றி, தலை நிமிர்ந்து, ஒருமுழந்தாள் ஊன்றி ஒருகால்வளைத்துஎடுத்துத் தவழமுயலும் நிலையில் தடுமாறி ஆடுதல் ஆகும்” என்ற விளக்கத்தை இச்செய்யுளின் ஈற்றில் காண்க.

( 6 ) **வேறு**

கெண்டை இரண்டு மருண்(டு)ஒரு முளரி கிடந்து நடந்தாடக்
கெளி(று)ஒரு பதுநில மகளை விடாது கிளர்ந்து தளர்ந்தாடக்
கொண்டல் திரண்(டு)ஒளிர் உச்சியின் மீது குவிந்து கவிந்தாடக்
குமுதம் மலர்ந்தபொன் முளரி பிறந்(து)எழு குறுவெண் மணியாடத்
துண்டு படுங்கலை மதியில் கட்டிய சுட்டி அசைந்தாடச்
சூழ்ந்(து)இரு காந்தள் அடிப்படி வண்டு சுழன்று முரன்(று)ஆட
அண்டம் அனைத்தும் உயிர்த்த பொலன்கொடி ஆடுக செங்கீரை
அத்தி வனத்(து)அமர் அத்தர் இடத்தவள் ஆடுக செங்கீரை.

**குறிப்புரை :** கெண்டை இரண்டு= இருகண்களாகிய கெண்டை மீன்கள். முளரி= முகமாகிய தாமரை. நடந்துஆட= இயங்கி ஆட. கெளிறு= கெளிற்றுமீன் ஆகிய கால்விரல்கள். கிளர்ந்து= எழுந்து. கொண்டல்= கூந்தல் ஆகியமேகம். பொன்முளரி பிறந்துமலர்ந்த குமுதம் எழுகுறுவெண்மணி ஆட என்று கூட்டுக. பொன்முளரி= அழகிய தாமரை. பிறந்து மலர்ந்த= தோன்றி விரிந்த. குமுதம்= உதடு ஆகிய செங்குமுத மலர். எழு குறுவெண்மணி= எழுந்த சிறுபற்களாகிய வெண்முத்துகள். கலைமதியில் துண்டுபடும்= முகமாகிய முழுநிலவில் துண்டுபட்டதாகிய நெற்றி. சுட்டி= நெற்றிச்சுட்டி. இருஅடி காந்தள் சூழ்ந்து படி= இரண்டு பாதங்கள் ஆகிய காந்தள் மலர்களைச்சுற்றிலும் படிந்த. பொலன்கொடி= அம்மையாகிய அழகிய கொடி. அத்திவனம்= ஆனைக்கா. அத்தர்= சிவபிரான். இடத்தவள்= இடப்பாகம் கொண்டவள்.

**பொழிப்புரை :** இரண்டு கண்களாகிய கெண்டைமீன்கள் மருண்டு ஒப்பற்ற முகமாகிய தாமரையில் இயங்கி ஆட; கெளிற்றுமீன்களாகிய கால்விரல்கள் பத்தும் நிலத்திலிருந்தும் எழுந்து நெகிழ்ந்து இயங்க; கூந்தல் ஆகிய மேகம் ஒளிரும்உச்சியில் திரண்டு குவிந்துகவிந்து ஆட; அழகிய முகமாகிய தாமரையில் தோன்றி மலர்ந்த உதடு ஆகிய செங்குமுதமலரிடையே தோன்றிய சிறு பற்களாகிய வெண்முத்துகள் ஒளிவீச; முகமாகிய நிலவில் துண்டுபட்ட நெற்றியாகிய நிலவில்கட்டிய நெற்றிச்சுட்டிஅசைந்து ஆட; இரண்டு பாதங்கள் ஆகிய காந்தள்மலர்களைச் சுற்றிலும் படிந்த வண்டுகள் சுற்றிலும் ஒலிஎழுப்பி ஆட; அண்டங்கள் அனைத்தையும் ஈன்ற அழகிய கொடியாகிய அம்மையே ! செங்கீரை ஆடுக. ஆனைக்கா சிவபிரானின் இடப்பாகம் கொண்டவளே ! செங்கீரை ஆடுக. .

**இலக்கணக்குறிப்பு :** கெண்டை, முளரி, கெளிறு, நிலமகள், கொண்டல், குமுதம், முளரி உருவகங்கள்.

( 7 ) பாத சலங்கை புலம்பு சிலம்பு பதிந்து பொதிந்தாடப்
பால்வளை யிற்சுடர் ஆகை குயிற்றிய பல்சுடர் மணியாடக்
கா(து)அள வும்கயல் மோதுந றுங்குமிழ் கதுவிய முத்தாடக்
ககனத் திடைபொலி மின்னலின் மின்னிய கனவிரி சிகையாடத்
தா(து)அவிழ் நறுமென் குமுதத்(து) அமுதொடு தழைகுறு நகையாடத்
தழைதரு மரகத நிழல்விரி மேனித் தண்ஏனும் ஒளியாட
ஆதவன் ஒளியென என்னுட் பொலிபவள் ஆடுக செங்கீரை
அத்தி வனத்தமர் அத்தகர் இடத்தவள் ஆடுக செங்கீரை.

**குறிப்புரை** : பாதசலங்கை= ஒருவகைக் கால்அணிகலன். புலம்பு= ஒலித்தல். பால்வளை= சங்கு வளையல். சுரர் ஆகை= ஒளிருமாறு. குயிற்றிய= பதித்த. மணிசுடர்= மணிகளின் ஒளி. அளவும் கயல்=காது அளாவிய கெண்டைமீன் ஆகியகண். நறுங்குமிழ் கதுவிய= நன்மைபொருந்திய உருண்டையாய்விளங்கும். ககனம்= வானம். மின்னலின்= மின்னல்போல். கன= கனத்த. விரிசிகை=மாதர் தம்இடுப்பில் அணியும் முப்பத்திரண்டு கோவையுடைய அணிகலன். தாது அவிழ்= தேனொழுகும். அமுது= எச்சில். தழை= செழித்த. குறுநகை= புன்முறுவல். நிழல்விரி= ஒளிபடரும். ஆதவன்= சூரியன். என்னுள்= எனது உள்ளத்தில்.

**பொழிப்புரை** : பாதசரம் / பாதசலங்கை என்ற கால் அணியின் ஒலியுடன், சிலம்பின் ஒலியும் சேர்ந்து ஒலிக்க; சங்குவளையலில் ஒளிருமாறுபதித்துப் பலவகையில் ஒளிரும் மணிகளின் ஒளிவிளங்க; காதினை அளாவிய கண்களாகிய கெண்டை மீனொடு நன்மைதரும்வகையில் உருண்டையாக விளங்கும் காதில் அணிந்த முத்துஅணி ஆட; வானில் விளங்கும் மின்னல்போல் மின்னும் கனத்தமுப்பத்திரண்டு கோவையுடைய விரிசிகைஎன்னும் அணிகலன் ஆட; தேன் ஒழுகி மென்மையான மணப்பதுஆகிய செங்குமுதமலர் ஆகிய உதட்டில் ஒழுகும் அமுதமாகிய எச்சிலுடன் புன்முறுவல் விளங்க; மரகதமணியின் செழித்தஒளிவிரியும் உடம்பில் தண்ணிய ஒளிவிரிய; சூரியனின் ஒளியாக என்னுள்ளத்தில் விளங்குகிறவளே ! செங்கீரை ஆடுக. ஆனைக்கா சிவபிரானின் இடப்பாகம்கொண்டவளே ! செங்கீரை ஆடுக.

**இலக்கணக்குறிப்பு** : மின்னலின் மின்னிய, ஆதவன் ஒளி என - உவமையணிகள்

( 8 ) மருங்(கு)அணை ஆடைகை வெந்நிட்(டு) உதையா மலரடி கன்றாமே
வாய்அமு(து) ஊறல் அளித்த விரல்படு மண்என எண்ணாமே
கருங்குயில் மென்குரல் விம்மிப் பொருமிக் கம்மிப் போகாமே
கயல்ஈன் முத்(து)என நுண்துளி முத்(து)இரு கண்கயல் சிந்தாமே
சுருங்கு மருங்கு துவண்(டு)அற உந்தித் தொந்தி ததும்பாமே
சூழ்சுடர் மேனிப் புழுதி பொருந்தத் தொட்டுமண் அளையாமே
அருங்கலை மேகலை ஆக அணிந்தவள் ஆடுக செங்கீரை
அத்தி வனத்துஅமர் அத்தர் இடத்தவள் ஆடுக செங்கீரை.

**குறிப்புரை** : மருங்கு அணை= இடுப்பில் கட்டிய. கை வெந்நிட்டு= சிறிதுஒதுங்க. உதையா= உதைத்த. வாயமுது ஊறல் அளித்த விரல்= வாயில் ஊறிய எச்சில்பட்ட விரல். மண்படு என= மண்ணில் படும்என்று. விம்மி= தடித்து. பொருமிக் கம்மி= பூரித்து கம்மி. கயல் ஈன்முத்துஎன= கெண்டைமீன் ஈன்ற முத்தாக. துளிமுத்து= கண்ணீர்த்துளியாகிய முத்து. சுருங்கு மருங்கு= மெல்லிய இடுப்பு. அறத்துவண்டு= முழுதும் துவண்டுபோக. உந்தித்தொந்தி= கொப்பூளுடன் கூடிய வயிறு. ததும்பாமே= அசையாமல். சுடர் சூழ் மேனி. மண்தொட்டு= மண்ணில்பட்டு. அளையாமே= குழையாமல்.

**பொழிப்புரை** : இடுப்பில் கட்டியஆடை சிறிது ஒதுங்குமாறு உதைத்த தாமரை மலர்போன்ற பாதம் கன்றிப்போகாமல்; வாயில் ஊறிய எச்சில்பட்ட விரலில் மண்படும் என்று எண்ணாமல்; கரிய குயில்போன்ற மென்மையான குரல்தடித்து, பூரித்துக்கம்மிப் போகாமல்; இருகண்களாகிய கெண்டை

மீன்களும் கண்ணீர் முத்துகளைச் சிந்தின என்றுகூறாதவாறும்; மெல்லிய இடுப்பு முழுதும் துவண்டுபோக, அதனால் தொப்பூளுடன் கூடிய வயிறுஅசையாமல்; ஒளிசூழ்ந்த உடம்பு மண்ணில்பட்டு ஒளிகுறையாமல்; அரிய கலைகளைத் தனதுமேகலையாக அணிந்தவளே ! செங்கீரை ஆடுக. ஆனைக்கா சிவபிரானின் இடபப்பக்கம் கொண்டவளே ! செங்கீரை ஆடுக.

( 9 )

## வேறு

கடல்சுவ றிடவட அடல்வரை பொடிபடல் கண்(டு)ஓ டும்காலன்
கடவிய முதுபக(டு) அடிஒடி படவெரி கண்கா லும்பீழைப்
படவர உடல்அடல் விடநெடு நிலமகள் பண்பா டும்கீதம்
பயிறுள வவனை முனிதர அமரர் பயம்தீர் என்றுஓலம்
இடஇள முளரியில் வளர்பவன் முதலியர் எந்தாய் எம்கோவே
எனமுனர் வரும்அசு ரர்கள்பொடி படவலி எஞ்சா நின்(று)ஓர்வேல்
திடமொடு தொடும்ஒரு மதலையை உதவினள் செங்கோ செங்கீரை
சினமுடை மதகரி வனம்வரும் ஒருமயில் செங்கோ செங்கீரை.

**குறிப்புரை :** சுவறிட= வற்ற. அடல்வரை= வலிமையான மலை. கடவிய= செலுத்தும். முதுபகடு= வலிமையான எருமை. அடிஒடி வெரிகண் பீழைபட= முன்னே ஓடி அதன் கண்ணின்புறத்தே பீழை யுண்டாக. பட அரவு உடல் அடல் விட= படமுடைய ஆதிசேடன் உடல் வலிமை இழக்க. பண்பாடும் கீதம்= இசையுடன் பாடும் பாடல். துளவு பயில் அவனை= துளசிமாலை அணிந்த திருமாலை. முனிதர= சினக்க. அமரர் பயம் தீர் என்று= தேவர்கள் எங்கள் அச்சம் தீர்த்தருள் என்று. ஓலம் இட= அபயம் கூறி அழைக்க. இளமுளரியில் வளர்பவன்= புதுத் தாமரைமலரில் வாழ்கிற நான்முகன். முனர் வரும்= முன்னே எதிர்த்துவரும். எஞ்சா நின்று= குன்றாது எதிர்த்துநின்று. திடமொடு= ஆற்றலுடன். மதலை= மகன் - முருகன். மதகரிவனம்= மதயானைகளுடைய ஆனைக்கா. ஒரு= ஒப்பற்ற.

**பொழிப்புரை :** கடல் வற்ற, வலிமையான மேருமலை பொட்டிபடுவதுகண்டு அஞ்சி ஓடும் யமன் செலுத்திவரும் வலிமையான எருமை, அவனுக்குமுன்னே ஓடியதால் அதன் கண்களின் வெளியே பீழைதோன்ற, படமுடைய ஆதிசேடன் உடல் வலிமை இழக்க, இசையுடன் நீண்ட பாடல்பாடும் நிலமகள் துளசிமாலையணிந்த திருமால் ஆகியோரை அசுரர்கள் சினக்க, புதுத்தாமரையில் வாழும் நான்முகனும், தேவர்களும் எம்தாயே! எம் அரசே! எமது அச்சத்தைத் தீர்த்தருள் என்று அபயம் கூறிஅழைக்க, தன்னை எதிர்த்து முன்னேவந்த அசுரர்கள் அழியுமாறு; வலிமையில் குன்றாது எதிர்த்து, ஒப்பற்ற வேலினை ஆற்றலுடன் எடுத்து வீசிய ஒப்பற்ற மகனாகிய முருகனை உதவியவளே! செங்கோ செங்கீரை! மதமுடன் சினம்மிக்க யானைகள் வாழும் ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள ஒப்பற்ற மயிலே! செங்கோ செங்கீரை!

**இலக்கணக்குறிப்பு :** செங்கோ செங்கீரை என்பது செங்கீரைப் பருவச்செய்யுளில் அமைக்கும் ஒருவகை மகுடம்.

( 10 )

## வேறு

நெக்குரு கிக்கசி வுற்றவர் கண்தனி நின்றா டும்தோகாய்
நெட்(டு)உடல் அப்பன கத்தலை நிற்குநி லம்தா ழும்பாவாய்
மைக்கரு மைப்புயல் பின்பொலி வுற்றுவ ரும்பூ மென்தோகாய்
மட்டுவி ரித்(து)என் உளக்கம லத்(து)உறும் வண்டே தண்தேனே
அக்(கு)அர வப்பணி முக்கணர் பக்கல் அமர்ந்(து)ஈ ரைந்(து)ஆறோ(டு)
அத்தொகை பெற்றஅ றத்தைவ ளர்க்கும்அ ணங்கே கொங்(கு)ஏறும்
செக்கம லத்தைந கைக்கும்மு கக்குயில் செங்கோ செங்கீரை
சித்திஅ ளித்திடும் அத்திவ னத்தவள் செங்கோ செங்கீரை.

**குறிப்புரை :** கசிவுற்றவர்கண்= மனம் கசிந்தவரிடம். தனிநின்று= சிறப்பாக விளங்கி. தோகாய்= மயிலே. நெட்டு உடல்= நீண்ட உடம்பு. அப்பனகன்= அந்தப்பாம்பு - ஆதிசேடன். நிற்கு= உனக்கு. நிலம் தாழும்= வணங்கும். மைக்கருமைப் புயல்= மைபோன்று கருமையான மேகம். பின்பொலிவுற்று வரும்= கூந்தலாக உன்முதுகில் பொலிவு பெற்றுவரும். பூமென் தோகாய்= பூச்சூடிய மென்மையான கூந்தலுடையவளே. மட்டு = தேன். உளக்கமலம்= மனத்தாமரை. அக்கு= உருத்திராக்கம். பணி= அணிகலன். பக்கல்= இடப்பாகம். ஈரைந்து ஆறோடு அத்தொகை= முப்பத்திரண்டு. கொங்கு= தேன். செக்கமலம்= செந்தாமரை. நகைக்கும்= இகழும், சித்தி அளித்திடும்= நினைத்ததை நிறைவேற்றும்.

**பொழிப்புரை :** மனம்நெகிழ்ந்துருகிக் கசிகின்றவரிடம் சிறப்பாகத் தங்கி ஆடும் மயிலே! நீண்ட உடம்புடைய ஆதிசேடன் உனக்குத் தலைவணங்கும் பாவையே! மைபோல் கருமையான உடம்புடைய மேகம், உன்முதுகுப்பக்கம் பூச்சூடிய மென்மையான கூந்தலாகப் பொலிவுபெற வருகிறவளே! எனது மனமாகிய தாமரையில் தண்ணிய பக்தித்தேன்பெருக வந்து பொருந்திய வண்டே! உருத்திராக்கமும் நாகமும் அணிகலனாகப் பெற்ற முக்கண்ணராகிய சிவபிரானின் இடப்பாகம் அமர்ந்து முப்பத்திரண்டு அறங்களையும் வளர்க்கும் அணங்கே! செந்தாமரையை இகழும் அழகிய முகமுடைய குயிலே! அடியவர் நினைத்ததை நிறைவேற்றியருளும் ஆனக்காவில் எழுந்தருளியுள்ளவளே! செங்கோ செங்கீரை!.

**செங்கீரைப்பருவம் முற்றிற்று.**

*****************************************************

**தாலப்பருவம்.**

***************************

( 1 ) சேற்று மணிகள் சலஞ்சலங்கள் சிதறிச் சிலம்ப ஞிமி(று)அலறச்
செந்தா மரையின் வெள்ளிமுனை சிந்தித் தெறிக்கச் சினவாளை
நாற்று வயலில் குதிக்கவளை நடுவண் கயல்கள் ஒளிக்கநடு
நடுங்கிக் கமடம் சரிக்க வரால் நாரம் புரண்டு துடிக்கமது
ஊற்றும் குமுதம் படைச்சாலின் ஊடே அரையக் கருங்கடைஞர்
உழும்வெம் பகட்டை உரப்(பு)அமலை உம்பர் கரத்தை அவர்செவிக்கண்
ஏற்றும் பழனச் செழுங்காவை என்தாய் தாலோ தாலேலோ
எல்லா உலகும் சராசரமும் ஈன்றாய் தாலோ தாலேலோ.

**குறிப்புரை :** மணிகள்= முத்து ஈனும் சங்குகள். சலஞ்சலங்கள்= ஆயிரம் சங்குகள் சூழ்ந்த அரசச் சங்கு. சிலம்ப= ஒலிக்க, ஞிமிறு= வண்டு. அலற= பேரொலிஎழுப்ப. வெள்ளி முனை= தாதுவின் - தேனின் சொட்டு. கமடம்= ஆமை. சரிக்க= ஒதுங்கிச் செல்ல. நாரம்= நீர். படைச்சால்= உழுபடைச்சால். அரைய= உராய. கருங்கடைஞர்= வலிமையான மருதநிலமக்கள். வெம்பகட்டை= தாம் விரும்பும் எருதை. உரப்பு அமலை= அதட்டிஓட்டும் ஒலி. உம்பர்= தேவர்கள். கரத்தை அவர் செவிக்கண் ஏற்றும்= கையால் காதினைப் பொத்தச் செய்யும். பழனம்= நன்செய் நிலம். சரம் அசரம்= இயங்குதிணை நிலைத்திணை - இயங்கும்உயிர்கள் (புழு.... தேவர்) இயங்காது நிலைத்த உயிர்கள் ( புல் .... மரம்)

**பொழிப்புரை :** சேற்றில் வாழும் சங்குகள், ஆயிரம் சங்குகள் சூழஉள்ள சலஞ்சலம் என்னும் சங்குகள் சிதறிக்கிடந்து ஒலிக்க; வண்டுகள் பேரொலி எழுப்ப; செந்தாமரை மலரின் தேன்சொட்டு சிந்தித் தெறிக்க; சினம்மிக்க வாளைமீன் நாற்றுநட்ட வயலில் குதிக்க; அவ்வொலியால் அஞ்சிய நண்டுவளைகளின் நடுவே கெண்டை மீன்கள் ஒளிந்துகொள்ள; நடுநடுங்கி ஆமைகள் ஒதுங்கிச்செல்ல; வரால்மீன்கள் நீரில் புரண்டு துடிக்க; தேன்சொரியும் குமுதமலர்கள் உழுபடைச்சால்களில் உராய; வலிய மருதநிலமக்கள் - உழவர்கள் தாம்உழும் விரும்பத்தக்க எருதினை அதட்டி ஓட்டும் ஒலி தேவருலகத்தவர் கைகளால் தம்காதுகளைப் பொத்திக்கொள்ளுமாறு செய்யும் வளமான நன்செய் நிலங்களுடைய ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள என்தாயே ! தாலோ தாலேலோ ! அனைத்து உலகங்களையும், இயங்குதிணை நிலைத்திணைகளையும் ஈன்றவளே! தாலோ தாலேலோ.

**விளக்கம்** : இச்செய்யுளில் பண்டை நன்செய் நிலத்தின் உயிர்வளத்தை ஒருங்குகூறினார்.

**இலக்கணக்குறிப்பு** : காவை - மரூஉமொழி. கருங்கடைஞர்............ ஏற்றும் - உயர்வுநவிற்சியணி.

( 2 ) அரும்பு முலைசிற் றிடைநுடங்கி அசையப் பரித்த கடைசியர்கள்
அலர்வாய் நறவும் குயம்பாளை அரியும் நறவும் அருந்துமள்ளர்
கரும்பு வடித்த தீஞ்சாறு கதலிப் படப்பை புகுந்துநெடும்
கமுகம் படப்பை உலவிஇளம் கன்னல் படப்பைத் தூர்அகழ்ந்து
சுரும்பு மடுக்கும் முளரிமடுச் சுருங்கப் பெருகிச் சலதிஉவர்த்
தோயம் கலக்க முகில்மேய்ந்து சொரியும் புவனம் இனிப்பஅறிந்(து)
இரும்பு வனம்தாழ் வயற்காவை என்தாய் தாலோ தாலேலோ
எல்லா உலகும் சராசரமும் ஈன்றாய் தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : நுடங்கி= துவண்டு. பரித்த= தாங்கிய. அரும்புமுலை பரித்த சிற்றிடைச்சியர் என்க. கடைசியர்= மருதநிலத்துப் பெண்டிர். அலர்வாய் நறவு= மலர்போன்ற வாயின்தேன். குயம் பாளைஅரி= முலைபோன்ற தென்னம்பாளையின் கள். மள்ளர்= மருதநிலஆண்கள். வடித்த= பிழிந்த. கதலிப்படப்பை= வாழைத்தோட்டம். மடுக்கும்= பருகும். முளரிமடு= தாமரைபூத்த ஆழமான குளம். சலதி= கடல். தோயம்= நீர். மேய்ந்து= பருகி. இனிப்பஅறிந்து= இனிப்பதை அறிந்து. இரும் புவனம்= பெரிய உலகவர். தாழ்= வணங்கும்.

**பொழிப்புரை** : அரும்புபோன்ற முலைகளைத் தாங்கும் மெல்லிய இடையுடைய மருதநிலப்பெண்களின் மலர்போன்ற வாயின்தேனும், முலைபோன்ற தென்னம்பாளையின் கள்ளும் பருகிய மருதநிலஆண்கள் வடித்த கரும்பின் சாறு, வாழைத்தோட்டத்தில் புகுந்து, உயரமான பாக்குத்தோட்டத்தில் உலவி, இளையகரும்புத்தோட்டத்துத் தூர்களை அகழ்ந்து, வண்டுகள் பருகும் தாமரைமலர்கள் பூத்த ஆழமான குளத்தின் நீர் சிறிதாகுமாறு பெருகி, கடலின் உப்புக்கரிக்கும் நீரில் கலக்க, அந்நீரினைப்பருகிய மேகம் இனியமழை பொழிவதை அறிந்து, பெரிய உலகவர் வணங்கும்படியான வயல்சூழ்ந்த ஆனைக்காவில் விளங்கும் என்தாயே! தாலோ தாலேலோ! அனைத்து உலகங்களையும், இயங்குதிணை நிலைத்திணை உயிர்களையும் ஈன்றவளே! தாலோ தாலேலோ.

( 3 ) நெரிந்து சரிந்து நெய்த்(து)இருண்டு நீண்டு சுருண்டு மகரந்தம்
நிமிரத் திமிர்ந்து நறியபனி நீரின் நனைந்த குழல்மடவார்
பரிந்து குடையும் மணமஞ்சள் படுநீர் பாய்ந்து தழைத்தசெழும்
படப்பைக் கதலிப் பசும்குருத்(து)ஒண் பரிதிக் கடவுள் தனைமுடுக்கி
விரிந்து படுக்க நிலம்படுத்த மென்பூத் தரும்தேன் மிஞி(று)அருந்தி
மிடறு திறந்து பாண்மிழற்ற விரைப்பங் கயம்துஞ்(சு) அனம்துயிலா(து)
இரிந்து மறுகும் வயற்காவை என்தாய் தாலோ தாலேலோ
எல்லா உலகும் சராசரமும் ஈன்றாய் தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : நெரிந்து= வளைந்து. நெய்த்து= செழித்து. மகரந்தம்= தேன். நிமிரத்திமிர்ந்து= மிகுதியும் செறிந்து. பனிநீர்= பன்னீர். பரிந்து= விரும்பி. குடையும்= நீராடும். மஞ்சள் படு= மஞ்சளுடன் கலந்த. கதலிப்படப்பை= வாழைத்தோட்டம். பரிதி= சூரியன். முடுக்கி= விரைவுபடுத்தி. விரிந்துபடுக்க= விரிவடைய. நிலம்படுத்த= நிலத்தில் தோன்றிய. மிஞிறு= வண்டு. மிடறு திறந்து= வாய்விட்டு. பண்= இசைப்பாடல். துஞ்சு அனம்= உறங்கும் அன்னப்பறவை. இரிந்து= வெளியேறி. .   .

**பொழிப்புரை** : வளைந்து, கீழிறங்கி, செழித்து, கருமை நிறம்பெற்று, நீண்டு, நுனிசுருண்டும், சூடிய மலர்களால் தேனினை மிகப்பெற்றும்விளங்கும், பன்னீரில் நனைந்த கூந்தலுடைய மகளிர்; விரும்பி நீராடும்மஞ்சள் நீர் பாய்ந்ததால் செழித்த வாழைத்தோட்டத்தின் வளமானகுருத்து வளர்ந்து, ஒளிரும்

சூரியனை  விரைந்து ஓடத்துரத்தி, குருத்துவிரிந்து தொங்க; நிலத்தில் பூத்த பூக்கள்தரும் மென்மையான தேனை வண்டுகள் பருகி வாய்திறந்து இசைபாடல் பாடியதால், மணக்கும் தாமரையில் உறங்கும் அன்னப்பறவை வெளியேறி வருந்தும் வயல்கள் சூழ்ந்த ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள என்தாயே! தாலோ தாலேலோ. அனைத்து உலகங்களையும், இயங்குதிணை நிலைத்திணை உயிர்களையும் ஈன்றவளே! தாலோ தாலேலோ.

( 4 ) உடுக்கும்(பு )அடங்க உகள்கயலா ஒற்றை ஆழி வையமும்இந்
தூரும் ஒளிர்மா னமும்விரைய ஓடும் கலமாச் சலராசி
மடுக்கும் கனங்கள் பச்சொளிச்சை வலமா ஒளிகள் சலஞ்சலமா
மருவி மிதப்ப உடல்கண்ணன் மனைஊற் றெடுப்ப உயர்ந்துமால்
படுக்கும் பாயல் பின்ஓ(டு)அப் பயத்தன் பயத்தன் ஆகஉடல்
பரிய மகரம் சரியஅலை பாய்ந்து பாரை அகழ்ந்துபெருக்
கெடுக்கும் பொன்னித் தடங்காவை என்தாய் தாலோ தாலேலோ
எல்லா உலகும் சராசரமும் ஈன்றாய் தாலோ தாலேலோ

**குறிப்புரை** : உடு கும்பு அடங்க= விண்மீன் கூட்டம் முழுவதும். ஒற்றை ஆழி வையம்=ஒற்றைச் சக்கரமுடைய தேரில் வரும் சூரியன். இந்தூர்= இந்திரனின் அமராவதிநகர். மானம்= ஆகாயம். கலம்= மரக்கலம். மடுக்கும் சலராசி= நிறைந்த நீர்வாழினங்கள். பச்சொளிச் சைவலம்= பசிய நிறமுடைய பாசிகள். ஒளிகள்= இவற்றின் ஒளிகள். சலஞ்சலம்= சலஞ்சலச்சங்கு. மருவி= பொருந்தி. உடன்கண்ணன்= தேவேந்திரன். மனை= அரண்மனை. மால்படுக்கும் பாயல்= திருமால் படுக்கும் மெத்தையாகிய ஆதிசேடன். பின்ஓடு=பின்னேஓடும். அப் பயத்தன்= அப்பாற்கடலில் வாழும் திருமால். பயத்தன் ஆக= அஞ்சியவனாய். உடல்பரிய மகரம்= உடம்பால் பருத்த திமிங்கலம். சரிய= சாக. பாய்ந்து= வலிமையுடன் மோதி. பாரை அகழ்ந்து= பூமியைத் தோண்டிக்கொண்டு. பொன்னி= காவிரியாறு.

**பொழிப்புரை** :  விண்மீன்கூட்டம் முழுவதும் புரண்டு திரியும் மீன்களாகவும்; ஒற்றைச்சக்கரமுடைய தேரில் வரும் சூரியன், இந்திரனது அமராவதி நகர், ஒளிரும் ஆகாயம் ஆகியன விரைந்து ஓடும் மரக்கலங்களாகவும்; நிறைந்த நீர்வாழினங்கள் பசிய ஒளிவீசும் நீர்ப்பாசியாக; இவற்றின் ஒளிகள் சலஞ்சலச்சங்குகளாக மாறி மிதப்ப; உடல் முழுதும்கண்களுடைய இந்திரனின் அமராவதி நகர் அரண்மனையில் ஊற்றுப்பெருக; தனது மெத்தையாகிய ஆதிசேடனின் பின்னே அந்தப் பாற்கடலில் பள்ளிகொண்ட திருமால் அஞ்சிஓட; உடல்பருத்த திமிங்கலம் இறக்குமாறு அலைமோதி; பூமியை அகழ்ந்துகொண்டு பெருக்கெடுக்கும் காவிரியின் கரையிலுள்ள ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள என்தாயே! தாலோ தாலேலோ. அனைத்து உலகங்களையும் இயங்குதிணை நிலைத்திணை உயிர்களையும் ஈன்றவளே! தாலோ தாலேலோ.

**விளக்கம்** : இதில் காவிரியாற்றின் வெள்ளப்பெருக்கினை வருணித்தார்.

**இலக்கணக்குறிப்பு** :  இச்செய்யுள் இயைபுஉருவகவணி.

( 5 ) கங்குல் அனைய குழல்காட்டும் கலாபத் தோகை கடுப்பாரும்
கருங்கண் மழஏறு அனையாரும் கலவிப்பூசல் அயரஅனை
கொங்கு மலிதே மலர்மாலை கொட்டும் துகளும் சிதறுசுண்ணக்
குவையும் நறுங்குங் குமத்தூளும் குண்டுக் கிடங்கர் நிரை தூர்த்துப்
பொங்கு மதஎண் திசையானைப் புழைக்கை மடுத்துக் கோட்(டு)எயில்மீப்
பொலியும் கொடிகள் கிழித்தவழிப் புயல்வான் புகுந்து பொன்னுலகம்
எங்கும் மணக்கும் திருக்காவை எந்தாய் தாலோ தாலேலோ
எல்லா உலகும் சராசரமும் ஈன்றாய் தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : கங்குல்= இருள். கலாபத்தோகை= தோகையுடைய மயில். கருங்கண்= கரிய கண். மழஏறு= இளங்காளை. கலவிப்பூசல் அயர= புணர்ச்சிப்போரை அனுபவிக்க. வனை=அலங்கரித்துக்கொண்ட - சூடிக்கொண்ட. கொங்கு= மணம். தே= தேன். சுண்ணக்குவை= நறுமணத்தூள் குவியல். நிரை குண்டுக் கிடங்கர்= வரிசையாக உள்ள ஆழமான அகழி. பொங்குமத எண்திசை யானைப் புழைக்கை மடுத்துத் தூர்த்து என்று கூட்டுக. மடுத்து= தின்று. எயில்கோட்டு மீ= மதில் உச்சியின் மேல். புயல் வான் புகுந்து= பெருங்காற்றுவானத்தில் புகுந்து. பொன்னுலகம்= தேவருலகம். .

**பொழிப்புரை** ; காரிருள் ஒத்த கூந்தலுடன்கூடிய தோகைமயில்போன்ற மகளிரும், கரியகண்களுடைய காளைபோன்ற ஆண்களும் புணர்ச்சிப்போரினை அனுபவிக்குமுன் சூடிக்கொண்ட மணம்மிக்க தேன்பொருந்திய மலர்மாலையிலிருந்து, போரின்போது கொட்டிய பூந்துகளும், சிதறிய மணப்பொடிக் குவியலும், மணக்கும் குங்குமத்தூளும் வரிசையாக உள்ள ஆழமான அகழியைத் தூர்க்க; மதம்பொங்கும் யானைகள் தமது புழையுடைய துதிக்கையால் எடுத்துத்தின்று, மதில்உச்சியின் மேல்பறக்கும் கொடிகளைக்கிழிக்க, அத்துளைவழியே பெருங்காற்றுப் புகுந்துவீசியதால் தேவருலகம் எங்கும் தேன்கமழச்செய்யும் அழகிய ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள என்தாயே! தாலோ தாலேலோ. அனைத்து உலகங்களையும் இயங்குதிணை நிலைத்திணை உயிர்களையும் ஈன்றவளே! தாலோ தாலேலோ.

**இலக்கணக்குறிப்பு** : கங்குல் அனைய ........... கடுப்பாரும் - உவமைஅணி. **இச்செய்யுள் உயர்வு நவிற்சியணி.**

( 6 ) **வேறு**

இரசத மலைஅமர் பவள விலங்க லிடம்படர் பைங்கொடியே
இமையவர் மகிழ்வொடு புகழும் சிமயத்(து) இமயம் வரும்பிடியே
சரண்நினை பவர்உள் திமிரம் சிதறச் சாரும் இளங்கதிரே
சதுர்மறை யானும் அளப்ப ரிதான தயங்குபொ லாமணியே
மரகத வரைஇள கியஎழில் எனஎழில் வாய்த்த செழுஞ்சுடரே
மதுர்இத நவரசம் ஒழுகக் கனியும் வளத்த நறுங்கனியே
தரணிமி சைப்பொலி தருமக் குயிலே தாலோ தாலேலோ
தழையும் தந்தி வனத்(து)அமர் மயிலே தாலோ தாலேலோ

**குறிப்புரை** : இரசதமலை= பொன்மலை - மேருமலை. பவள விலங்கல்= பவளமலை - சிவபிரான். இடம்படர்= இடப்பாகம் தழைத்த. சிமயத்து இமயம்= உச்சியையுடைய இமயமலை. சரண்= திருவடி. உள்திமிரம் = மனத்து ஆணவஇருள். சிதற= அழிய. பொலாமணி= துளையிடப்பெறாத மணி. மரகதவரை-= மரகத மலை. மதுர் இத நவரசம்= இனிய பக்குவமான புதியசாறு. தந்தி வனம்= ஆனைக்கா.

**பொழிப்புரை** : மாமேருமலையில் எழுந்தருளிய பவளமலையாகிய சிவபிரானின் இடப்பாகம் தழைத்த பசியகொடியே! தேவர்கள் மகிழ்வுடன் புகழும் உச்சியையுடைய இமயமலையில் தோன்றிய பெண்யானயே! உன்னை அடைக்கலமாக அடைந்தவர்களின் மனத்து ஆணவஇருளை அழிக்கவந்த இளஞாயிறே! நான்மறைகளாலும் அளந்துகூறவியலாதவாறு விளங்கும் துளையிடப் பெறாத மரகதமணியே! மரகதமலை இளகிவந்தது என்னுமாறு விளங்கும் அழகுவாய்ந்த வளமான ஒளியுடையவளே! இனிய பக்குவமான புதியசாறுடைய வளமான நறுமணம் மிக்ககனியே! இவ்வுலகில் பொலியும் அறவடிவான குயிலே! தாலோ தாலேலோ. வளம்பெருகும் ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள மயிலே! தாலோ தாலேலோ.

.

( 7 ) அங்கம் புளகுற்(று) உருகுவர் இதயத்(து) அவிரும் விளக்(கு)ஒளியே
அறிதற்(கு) அரிய பரஞ்சுடர் ஆயஎன் ஐயர்க்(கு ஒருதுணையே)
பொங்குக் கதிர்மணி அணிகள் சுமந்(து)அவிர் புண்ணிய மென்கொடியே
பொய்யர் அகத்தும் இனிக்கும் இனிப்புறு புத்தமு தச்சுவையே

கொங்(கு)உந்(து) இணர்விரி பைந்தொடை நிம்பர் குலத்(து)உறு செந்தேனே
கோகன கச்சின கரம்ஒரு வாஇரு கோதைய ருக்(கு)அரசே
தங்கும் கருணை மலர்ந்(து)எழு கொம்பே தாலோ தாலேலோ
தழையும் தந்தி வனத்(து)அமர் மயிலே தாலோ தாலேலோ.

**குறிப்புரை :** அங்கம்= உடல் உறுப்புகள். புளகுற்று= மயிர்க்கூச்செறிந்து. ஐயர்= தலைவர் - சிவபிரான். கொங்குஉந்து= தேன்பிலிற்றும். இணர்= மலர்க்கொத்து. பைந்தொடை= வளமானமாலை. நிம்பர்= பாண்டியர். கோகனகச் சினகரம்= தாமரைக்கோயில். ஒருவா= நீங்காத. இருகோதையர்= கலைமகள் திருமகள். தழையும்= வளம்பெருகும்.

**பொழிப்புரை :** உடல் உறுப்புகள் மயிர்க்கூச்செறிய மனம் உருகிறவர் இதயத்தில் ஒளிரும் விளக்கின் ஒளியே! பிறரால் அறிவதற்கு அரிய மேலான ஒளியாக விளங்கும் என்தலைவராகிய சிவபிரானுக்கு ஒப்பற்ற துணையே! ஒளிபெருகும் மணிகள் பதித்த அணிகள் அணிந்து விளங்கும் மென்மையான கொடியே! பொய்யாக நடிப்பவர் மனத்தும் இனிக்கும் இனிப்புடைய புதிய அமுதத்தின் சுவையே! தேன்பிலிற்றும் கொத்தாக மலரும் வேம்பின்மாலையணிந்த பாண்டியர் குலத்தில் வந்த செந்தேனே! தாமரையாகிய கோயிலில் வீற்றிருக்கும் கலைமகள் திருமகள் இருவர்க்கும் அரசியே! நிலையாகக் கருணை தங்கும்மலர் மலர்ந்த கொம்பே! தாலோ தாலேலோ. வளம்பெருகும் ஆனைகாவில் எழுந்தருளியுள்ள மயிலே! தாலோ தாலேலோ.

**விளக்கம் :** என் ஐயர்க்கு ஒருதுணை - ஐந்தொழில் புரியும் துணை.

" நங்கையினால் நாம் அனைத்தும் செய்தாற்போல் நாடுஅனைத்தும்,
நங்கையினால் செய்து அளிக்கும் நாயகன் " (திருக்களிற்றுப்படியார். 77)

" பொன்னிறம் கட்டியினும் பூணினும் நின்றாற்போல்
அந்நிற அண்ணலும் அம்பிகையும் - செந்நிறத்தள்
எந்நிறத்த ளாய்இருப்பள் எங்கள் சிவபதியும்
அந்நிறத்த னாய்இருப்பன்பஆங்கு" (திருக்களிற்றுப்படியார். 78)

" தாரத்தோடு ஒன்றாவர் தாரத்துஓர் கூறுஆவர்
தாரத்தோடு எங்கும் தலைநிற்பர் - தாரத்தின்
நாதாந்தத் தேஇருப்பர் நல்தானத் தேஇருப்பர்
வேதாந் தத்தேஇருப்பர் வேறு" (திருக்களிற்றுப்படியார். 79)

( 8 ) **வேறு**

சயிலத்(து) அரசர்க்(கு) ஒருபுத் திரியே வான்ஆள் வார்தாயே
தழலைத் தருகண் பரமர் துணையே நாயேன் மாவாழ்வே
கயலைக் கடுவைக் கணையைக் கவின்ஆர் மாகா ஆர்கார்சேர்
கடலைப் பிணையைக் கடுகிக் குழைதோய் காதோ டேமோதா
உயர்பொற் குமிழிற் குதியுற்(று) ஒளிகூர் கோமா னேதேனே
உவமித் திடுதற்(கு) அருமைக் குயிலே தூயோ ராய்மாயா
மயல்அ ற்றவர்உள் படுமெய்ப் பொருளே தாலோ தாலேலோ
மதவெற்(பு) அமர்பொன் பதிஉத் தமியே தாலோ தாலேலோ.

**குறிப்புரை :** சயிலத்து அரசர்= மலையரசன் - இமவான். வான்ஆள்வார்= தேவர்உலகை ஆளும் அயன் அரி அரன். மா= சிறந்த. கடு= நஞ்சு. கணை= அம்பு. மாகா ஆர்= உயரமான சோலையில் பொருந்தும். கார்சேர்= மேகம் படியும். பிணை= பெண்மான். கடுகி= ஒத்து. காதோடே மோதா= காதுடன் மோதும். குமிழ்= ஒருவகைக் காதணி. ஒளிகூர் உயர்பொன் குமிழில் குதியுற்று, குழைதோய் காதோடே மோதா கோமானே என்றுகூட்டுக. மோதா= மோதும். மாயாமயல் அற்றவர்= அழியாதமாயையின் மயக்கம்

இல்லாதவர். உள்படு= உள்ளத்தில் தோன்றும். மெய்ப்பொருளே= ஞானவடிவே. மதவெற்பு அமர்= மதமலையாகிய யானைகள் வாழும். பொன்பதி= அழகிய ஆனைக்கா.

**பொழிப்புரை :** மலையரசனாகிய இமவானின் ஒப்பற்ற மகளே! வானுலகை ஆளும் அயன் அரி அரன் ஆகியோர் தாயே! நெருப்பினை வெளிப்படுத்தும் நுதற்கண்ணர் ஆகிய சிவபிரானுக்கு ஐந்தொழில் புரியம் துணையே! நாயேனின் சிறந்த வாழ்வாக இருக்கின்றவளே! கெண்டைமீனை, நஞ்சினை, அம்பினை, அழகிய பெரிய சோலையில் பொருந்திய மேகம்படியும் கடலினை, பெண்மானை, ஒத்த ஒளிபொருந்திய கண்களால் குதித்துஆடும் குழையணிந்த காதுடன் மோதும் தலையாய மானே! தேனே! யாரையும் உவமைகூறற்கு அரிய கருங்குயிலே! மனத்தூய்மை உடையவராய், அழியாத மாயையின் மயக்கம் இல்லாதவர் உள்ளத்தில் தோன்றும் ஞானவடிவே! தாலோ தாலேலோ. மதம்பொழியும் மலைபோன்ற யானைகள் வாழும் அழகிய ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள உத்தமியே! தாலோ தாலேலோ.

**விளக்கம் :** வான் ஆள்வார் தாயே - தேவருலகை ஆளும் அயன் அரி அரனுக்குத் தாய் :

"சிவம்சத்தி தன்னை ஈன்றும் சத்திதான் சிவத்தை ஈன்றும்
உவந்துஇரு வரும்புணர்ந்து உலகு உயிர்எல்லாம் ஈன்றும் " ( சித்தியார் 80 )

என்பதால் அம்மையை இம்மூவர்க்கும் தாய் என்றார்.

" உள்படு மெய்ப்பொருள் " அம்மையே.=உள்ளத்தில் தோன்றும் ஞானவடிவினள்.
" சத்திதன் வடிவு ஏது என்னில் தடையிலா ஞானம் ஆகும் " ( சித்தியார் 62 )

( 9 ) **வேறு**

தானந தம்படு வெண்கரி தாழாமே வீழாமே
தானவர் மங்கையர் மங்கலம் நீள்நாள் வாழாமே
வானவர் நங்கையர் அம்கைகள் வார்மேல் மோதாமே
வாள்விழி அம்சசி வன்துய ரூடே போதாமே
தேன்மலி பைந்துணர் ஐந்தரு வார்வேர் காயாமே
. தேகம்அ டங்கலும் அம்பக னார்போய் மாயாமே
கான்முளை ஒன்(று)அருள் பைங்கிளி தாலோ தாலேலோ
காவை அமர்ந்த கருங்குயில் தாலோ தாலேலோ.

**குறிப்புரை :** தான நதம்படு= மத்தகம் முதலிய இடங்களில் தோன்றும் மதநீர். வெண்கரி= வெள்ளையானை - ஐராவதம். தாழாமே= நிலை கெடாமல். தானவர்= அசுரர். மங்கலம் நீள்நாள் வாழாமே= சுமங்கலியாக நெடுநாள் வாழாதிருக்கவும். அம்கைகள்= அழகிய கைகள். வார்மேல். மோதாமே= மார்பில் அடித்துக்கொள்ளாமல் இருக்கவும் - சுமங்கலியாக வாழவும். சசி= இந்திரன்மனைவி. வன்துயர்= கணவனை இழந்த கொடியதுன்பம். போதாமே= அடையாதிருக்கவும். ஐந்தரு= கற்பகம் முதலிய ஐந்துவகை மரங்கள். அம் பகனார்= அழகிய பெண்குறியுடையவர் - இந்திரன். மாயாமே= சாகாதிருக்கவும். கான்முளை= மகன் - முருகன்.

**பொழிப்புரை :** மத்தகம் முதலிய இடங்களில் தோன்றும் மதநீருடைய ஐராவதயானை தன்நிலையில் கெடாதிருக்கவும்; அசுரமகளிரின் சுமங்கலியான வாழ்நாள் நீடிக்காதிருக்கவும்; தேவருலமகளிர் தம் கச்சணிந்த மார்பில் அடித்துக்கொள்ளாதிருக்கவும்; ஒளிபொருந்திய கண்களுடைய சசிதேவி தன்கணவன் இறந்தால் அடையும் துயரம் அடையாதிருக்கவும்; தேன்மிக்க வளமான பூங்கொத்துகளுடைய தேவருலகக் கற்பகம் முதலிய ஐவகைமரங்களின் நீண்டவேர் காயாதிருக்கவும்; உடல் முழுவதும் அழகிய பெண்குறியாகிய கண்களுடைய இந்திரன் இறவாதிருக்கவும்; மகனாகிய முருகப்பெருமானை அருளிய பசியகிளியே ! தாலோ தாலலோ. ஆனைகாவில் எழுந்தருளியுள்ள கருங்குயிலே! தாலோ தாலேலோ.

**விளக்கம் :** முருகப்பிரான் தோன்றியதால், ஐராவதம் தன்னிலையில் நிலைபெற்றது; அசுரர்கள் கொல்லப்பெற்றதால் அசுரமங்கையர் மங்கலம் இழந்தனர்; தேவர்கள் வாழ்வுபெற்றதால் தேவருலக

மங்கையர் தம் மார்பில் அடித்துக்கொள்ளாதிருந்தர்; இந்திரன் வாழ்வுபெற்றதால் அவன்மனைவி சசிதேவி துயரம் தீர்ந்தாள்; கற்பகம் முதலிய தேவருலக ஐவகை மரங்களின் வளம் நிலைத்தது; இந்திரன் வாழ்வு பெற்றான் என்ற செய்திகளை எதிர்மறையில் கூறி உணரவைத்தார்.

ஆண்யானைக்கு மதநீர் சுரக்குமிடங்கள் - மத்தகம், கன்னம், குறி இடங்களாகும். தேவருலக ஐவகைமரங்கள் - கற்பகம், சந்தனம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் ஆகும்.

( 10 ) **வேறு**

இருவர்க்(கு) அரியஎன் அப்பன்இ டத்தவள் தாலோ தாலேலோ
இமயத் தலைவன் உயிர்த்த மடப்பிடி தாலோ தாலேலோ
கருணைக் கடல்பெரு கப்பொலி கண்குயில் தாலோ தாலேலோ
களகப் பிடரிவ ரத்திஅளித்தவள் தாலோ தாலேலோ
பொருநைத் துறைவர்கு லத்தைவி ளக்கினள் தாலோ தாலேலோ
புணரித் துறைவரு புத்தமு(து) ஒத்தவள் தாலோ தாலேலோ
மருமிக்(கு) எழுதுள வற்பின் உதித்தவள் தாலோ தாலேலோ
மதவெற்(பு) அமரும் வனத்(து)அமர் பொற்கொடி தாலோ தாலேலோ

**குறிப்புரை :** இருவர்= அயன் அரி ஆகியோர். இடத்தவள்= இடப்பாகத்தில் இருப்பவள். இமயத் தலைவன்= இமவான். களகப்பிடரி= பெருச்சாளியின் கழுத்து. அளித்த வரத்தியல்= கொடுத்த மேலானவள். பொருநைத் துறைவர்= தாமிரவருணிக்குரியவர் - பாண்டியர். புணரித்துறை= பாற்கடல். மரு= நறுமணம். துளவன்= துளசிமாலையணிந்த திருமால்.

**பொழிப்புரை :** அயன் அரி ஆகிய இருவராலும் காண அரியவனாகிய என் தலைவன்சிவபிரானின் இடப்பாகம் இருக்கின்றவளே! இமவான் ஈன்ற இளம்பெண்யானை ஒத்தவளே! கருணயாகிய கடல் பெருகுமாறு பொலியும் கண்களுடைய குயிலே! பெருச்சாளியின் பிடரியில் ஏறிவரும் விநாயகரை அளித்த மேலானவளே! தாமிரவருணியாற்றுக்குரிய பாண்டியர் குலம் விளக்கமுறச்செய்தவளே! பாற்கடலில் தோன்றிய புதிய அமுதம் ஒத்தவளே! நறுமணம் மிக்கதுளசிமாலையணிந்த திருமாலின் தங்கையே! மதம் பெருகும் மலையாகிய யானைகள் வாழும் ஆனைக்காவில் எழுந்தருளியுள்ளவளே! தாலோ தாலேலோ.

**தாலப்பருவம் முற்றிற்று**

***********

## சப்பாணிப்பருவம்

********************

( 1 ) செய்யதே மலர்மருவு நீலத்தின் ஒண்காந்தள்
சேர்ந்தெனப் பின்கூழைவாய்ச்
செங்கைஒன்(று) உறஒருகை இருசுடர் மறைக்கத்
தெரிந்தனள் எனப்பொதிகையான்
எய்யும்ஒர் பைந்துழாய்க் கோல்இருகை சேமித்த
தெறுழ்அதன்(று) ஒருகையில்
இருகோள் மறைத்தவலி நன்றுநன்(று) எனமகிழும்
எந்தையொடு மகிழநறவம்
பெய்யுநாண் முளரிமலர் வலியஒரு கமலம்
பிறந்தகீ தத்தைஅடையும்
பெற்றிபோல் சிற்றிடை நுடங்கக் கடங்கால்
பிறங்கல்வழு திப்பொன்மனையில்
தையலார் மைக்கண் புதைக்கும்கை சேர்த்(து)அம்மை

சப்பாணி கொட்டிஅருளே
தண்நாவ லோர்புகழும் வெண்ணாவல் ஊர்அரசி
சப்பாணி கொட்டிஅருளே.

**குறிப்புரை :** செய்ய= அழகிய. தேமலர்= தேன்பிலிற்றும் மலர். தேமருவு செய்ய நீலத்தின் மலர்= தேன்பிலிற்றும் அழகிய நீலமலர் ( இது தலைமுடி குறித்தது )ஒண்காந்தள்= செவ்வொளிபொருந்திய காந்தள்மலர் ( இது சிவந்த உள்ளங்கை குறித்தது ) பின்கூழை= பின்தலைமுடியின் அடிப்பகுதி. உற= தாங்கிக்கொள்ள. இருசுடர்= ஞாயிறு, திங்கள் ஆகியன. தெரிந்தனள்= அறிந்தாள். பைந்துழாய்க்கோல்= பசிய துளசியாகிய அம்பு. சேமித்த= பற்றிக்கொண்ட. தெறுழ்= ஆற்றல். அதன்று= அதுவல்லாமல். இருகோள்= ஞாயிறு திங்கள். கமலம் பிறந்த நறவம் பெய்யும் நாள்முளரிமலர்= நீரில் தோன்றியதாய், தேன்பிலிற்றும் புதுத் தாமரைமலர்.. கீதத்தை அடையும் பெற்றி போல்= வண்டினைப் பெற்ற தன்மைபோல். நுடங்க= ஒசிய. பிறங்கல் கடங்கால்= சிறுமலைபோன்ற அடிஆதாரம் - அஸ்திவாரம். பொன்மனை= அழகிய அரண்மனை. தையலார்= மகளிரின். நாவலோர்= நாவலந்தீவினர். வெண்ணாவல் ஊர்= வெண்ணாவல் மரத்தினைத் தலமரமாகக் கொண்ட ஆனைக்கா.

**பொழிப்புரை :** தேன்பிலிற்றும் அழகிய கருங்குவளை மலரை, ஒளிபொருந்திய செங்காந்தள் மலர் சென்றடைந்தாற்போல, பின்தலைமுடியின் அடிப்பகுதியை சிவந்த ஒருஉள்ளங்கை பொத்திக்கொள்ள; ஒருகை ஞாயிறு திங்கள் ஆகிய இருகண்களையும் பொத்த அறிந்தாள் என்றும், பொதிகைக்குரியவன் - மன்மதன் எய்யும் பசிய துளசியாகிய அம்புகளை இருகைகளாலும் பற்றிக்கொண்கொண்ட ஆற்றலும், ஒருகையால் ஞாயிறு திங்கள் ஆகிய இரண்டையும் பொத்திமறைத்த ஆற்றலும் நன்றுநன்று என்று எம்தந்தையாம் சிவபிரான் மகிழ; வண்டுகள் மொய்ப்பதால் நீரில் தோன்றித் தேன்பிலிற்றும் புதுத்தாமரைமலர் நுடங்குவதுபோல் நுடங்கும் சிறுத்த இடையுடைய மகளிரின் மைஎழுதப்பெற்ற கண்களை, பாண்டியமன்னனின் சிறியமலைஒத்த அடிஆதாரம் - அஸ்திவாரம் கொண்ட அழகிய அரண்மனையில் பொத்திவிளையாடும் அம்மையே! உன் இருகையால் சப்பாணி கொட்டிஅருள்க. தண்ணிய நாவலந்தீவினர் புகழும் வெண்ணாவல் தலமரம் கொண்ட ஆனைக்கா அரசியே! சப்பாணி கொட்டிஅருள்க.

**விளக்கம் :** இந்தியத்துணைக்கண்டத்தை நாவலந்தீவு என்று இலக்கியங்கள் குறிக்கும்.

( 2 ) கந்தம்மலி நெட்டிதழ் அவிழ்க்கும்வெண் தாமரைக்
கவின்மயிலும் உவரிபடியும்
காளமே கத்தின்ஆ கத்துமோ கத்தெண்
கடல்சனித்த குயிலும்
வந்(து)இரு மருங்கும்நின்(று) ஐம்பால் முடித்துநறு
மாலைசெரு கிக்குனிநுதல்
மணநரந் தம்தூரி யம்கொண்டு தீட்டிமதர்
மாழைஉண் கட்குமைஇட்(டு)
அந்தர மடந்தையர் பணிந்துபுடை சூழமணி
அணிபல அணிந்துநெடுவான்
அளவிய மணக்கா வணத்(து)இருத்தத் தழல்முனா
வரைக்(கு)அரையன் என்னும்உன்
தந்தைதர எந்தையார் தொட்டகை முகிழ்த்(து)அம்மை
சப்பாணி கொட்டியருளே
தண்நாவ லோர்புகழும் வெண்ணாவல் ஊர்அரசி
சப்பாணி கொட்டியருளே.

**குறிப்புரை** : கந்தம்= நறுமணம். மயில்= கலைமகள். உவரி படியும்= கடலில் படியும் காளமேகத்தின் ஆகத்து= காளமேகநிறமுடைய திருமாலின் மார்பில். மோகத்து= பேரன்புடைய. தெண்கடல்=திருப்பாற்கடல். குயில்= திருமகள். ஐம்பால்= கூந்தல். குனி= வளவு. நரந்தம்= நறுமணம். தூரியம்= தூரிகை. மதர்= அழகிய. மாழை= இளமையான - கரிய. உண்= கவரும். அந்தரமடந்தையர்= வானுலமகளிர். அணி= அணிகலன். மணக்காவணம்= திருமணப்பந்தர். தழல் முனா இருத்த= வேள்வித்தீ முன் அமர்த்த. வரைக்கு அரையன்= மலையரசன் - இமவான். முகிழ்த்து= கூப்பி. சப்பாணி கொட்டியருள்= கைகொட்டியருள்க. தண்நாவலோர்= குளிர்ந்த நாவலந்தீவினர். வெண்ணாவல் ஊர்= வெண்ணாவல் மரத்தினைத் தலமரமாகக்கொண்ட ஆனைகா.

**பொழிப்புரை** : மணம் மிக்கதும், நீண்ட இதழினைவிரிப்பதும் ஆகிய வெண்தாமரையில் வீற்றிருக்கும் கலைமகளும், கடலில் படிந்துவரும் கரிய மேகநிறத்துத் திருமாலின் மார்பில் பேரன்புடையவளாய்த் திருப்பாற்கடலில் தோன்றிய திருமகளும் வந்து, தேவமகளிர் வணங்கிச் சூழ்ந்திக்க, இருபுறமும் நின்றுகொண்டு கூந்தலைச் சீவிமுடித்து, மணம்மிக்க மாலையைச் செருகி, வளைந்த புருவத்துக்குமணத்தினைத் தூரிகைகொண்டு தீட்டி, அழகிய கருமையானதும் காண்போரைக் கவர்வதும் ஆகிய கண்களுக்கு இட்டும் மணிகள் பதித்த அணிகலன் பலஅணிவித்துத் தேவமகளிர் சூழ்ந்திருக்க வானளாவிய பெரிய மணப்பந்தரில் இருக்குமாறுசெய்ய; வேள்வித்தீயின் முன் மலயரசனாகிய உன்தந்தைதர, எம்தந்தையாகிய சிவபிரான் பற்றியஉனது கையைக் குவித்துத் தாயே சப்பாணிகொட்டியருள்க! தண்ணிய நாவலந்தீவினர் புகழும் வெண்ணாவல் மரத்தினைத்தலமரமாகக் கொண்ட ஆனைக்கா அரசியே சப்பாணிகொட்டியருள்க.

( 3 ) கலைமணக் கும்கொடிக்(கு)ஒரு பீட மானகடவுள்ஒரு வா(து)அமர்ந்த
கமலபீ டமும்அகில மகளிடை பொதிந்தபூங் கலைவயி(று) உளைந்(து)உயிர்த்த
சிலைமணக் கும்சிறு நுதல்சின கரப்பூஞ் செழுங்கபா டம்திறக்கும்
திறவுகோ லைச்செங் கருங்கரள அர(வு)எனச் சென்(று)ஒளி கவர்ந்தபடையான்
அலைமணக் கும்திருப் பாற்கடலும் வேல்கண்அயி ராணிஇன் பம்திளைக்கும்
அண்ணலைத் தாங்குசிறு கண்ணநாற் கோட்டுவெள் அருவிச்சி லம்புநின்தாள்
தலைமணக்கும் படிவணங்கு வோர்க்(கு) அருள்கைகொடு சப்பாணி கொட்டியருளே
தண்நாவ லோர்புகழும் வெண்ணாவல் ஊர்அரசி சப்பாணி கொட்டியருளே.

**குறிப்புரை** : கலைமணக்கும் கொடி= கலைமகள். பீடம்= இருக்கை. கடவுள்= நான்முகன். ஒருவாது= நீங்காமல். பூங்கலை= மென்மையான அழகு. சிலைமணக்கும் திருநுதல்= வில்ஒத்த அழகியநெற்றியுடைய திருமகள். சினகரம்பூ= கோயில் ஆகிய தாமரை. கபாடம் திறக்கும் திறவுகோல்= இதழ்விரியச்செய்யும் சூரியன். செங் கருங் கரள அரவுஎன= மாணிக்கமும் கொடிய நஞ்சும் உடையபாம்புபோல. சென்று ஒளிகவர்ந்த படையான்= போய் மறைத்த சக்கராயுதமுடைய திருமால். அலைம்ணக்கும்= அலையெறியும். அயிராணி இன்பம் திளைக்கும் அண்ணல்= அயிராணிதரும் இன்பம் அனுபவிக்கும் இந்திரன். நாற்கோட்டு வெள்ளருவிச் சிலம்பு= நான்கு கொம்புகளாகிய மதஅருவிகள் கொண்ட மலையாகிய அயிராவதம். தலை மணக்கும்படி= தலைகமழ - தலையில் சூட்டி. .

**பொழிப்புரை** : கலைகள் மணக்கும் கொடியாகிய கலைமகளின் இருப்பிடமாக, தனது நாவினைக்கொண்ட நான்முகன் நீங்காது அமர்ந்திருக்கும் இருக்கையாகிய வெண்தாமரையையும்; அண்டத்து மகளிரின் அழகினைஎல்லாம் தனது மென்மையான அழகிய வயிற்றில் தாங்கிநொந்து ஈன்றவளும், வில்போல் வளைந்த சிறிய நெற்றியுடையபேரழகியும்ஆகிய திருமகளின் கோயிலாகிய செந்தாமரையையும் மலர்த்தும் திறவுகோலாக விளங்கும் சூரியனை, மாணிக்கமும்கொடிய நஞ்சும்பெற்ற அரவுவிழுங்கச்சென்றது போல்சென்று அச்சூரியனை மறைத்த சக்கரப்படையுடையவனது திருப்பாற்கடலும்; வேல்போன்ற கண்கள்பெற்ற அயிராணியின் இன்பம் துய்க்கும் இந்திரனைச்; சிறுகண்களுடன்,

மலையிலிருந்து வீழும் அருவிபோல் நான்குகொம்புடன் விளங்கிச் சுமக்கும் அயிராவதயானையும் வணங்கியதுபோல்; நின்தாளினைத்தமது தலையில்சூடி வணங்குகிறவர்களுக்கு அருள்புரியும் நின்கைகளால் சப்பாணிகொட்டியருள்க. தண்ணிய நாவலந்தீவினர் புகழும் வெண்ணாவல் மரத்தினைத் தலமரமாகக் கொண்ட ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள அரசியே! சப்பாணிகொட்டியருள்க.

**விளக்கம்** : வெண்டாமரை மலரையும்; செந்தாமரை மலரையும் மலர்த்தும் சூரியனைப் பாம்பு விழுங்கச் சென்றதுபோல்சென்று, சூரியனை மறைக்க அருச்சுனன் பொருட்டுத் தன்சக்கரப்படை ஏவிய திருமாலும், அயிராவத யானையும், இந்தியனும் அருள்தரு அகிலாண்டநாயகியை வணங்கிமை கூறினார். அயிராவதயானை வணங்கியமை கூறியதனால் அதனைச்செலுத்திவந்த இந்திரன் வணங்கியதை உணர்த்தினார் என்க.

**இலக்கணக்குறிப்பு** : நாற்கோட்டு வெள்ளருவிச் சிலம்பு - முற்றுருவகம்.

( 4 ) அருமறைக் கிழவன்முதல் ஐவருக் கும்தொழில்கள் ஐந்(து)எண்ணல் அளவைசெய்ய
ஐவிரல் படைத்தகை யால்சுட்டி னோ(டு)அவர்க்(கு) அத்தொழில் காட்டுகையால்
பருமுலை மருப்(பு)உற வளைக்குறி படத்துகிர்ப் பட்டகோ டீரமுடிஎம்
பரமனைத் தழுவுகை யால்வளர் அறங்கள்முப் பத்திரண்டும் புரிகையால்
குருமணி குயிற்றிய இருங்கங்க ணக்கையால் கொடியேனை அஞ்சல்என்ற
கோலக்கை யால்மடப் பொய்தற்பி ணாக்களொடு குளிர்பனி வரைச்சோலைத்
தருநறவு கொட்டுமலர் கொய்யும்கை யால்அம்மை சப்பாணி கொட்டியருளே
தண்ணாவ லோர்புகழும் வெண்ணாவல் ஊர்அரசி சப்பாணி கொட்டியருளே.

**குறிப்புரை** : அருமறைக்கிழவன்= நான்முகன். ஐவர்= நான்முகன், திருமால், அரன், மகேசுவரன், சதாசிவம் ஆகியோர். தொழில்கள் ஐந்து= படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன. சுட்டினோடு அத்தொழில் காட்டுகை= அத்தொழில்களைச் சுட்டிகாட்டிய கை. முலைமருப்பு= கொங்கை களாகிய தந்தம். பட= உண்டாக. துகிர்ப்பட்ட கோடீரமுடி= பவளம்போல் சிவந்த சடைமுடி. குருமணி குயிற்றிய= ஒளிபொருந்திய மணிகள் பதித்த. கோலம்= அழகு. மடப் பொய்தல் பிணா= இளமைபொருந்திய தோழிப்பெண்கள்.

**பொழிப்புரை** : அருமையான மறைகளுக்கு உரிய நான்முகன் முதலான ஐவருக்குமுரிய தொழில்கள்ஐந்து என்று வரையறுத்துக்கூற அத்தொழில்களை ஐந்து விரல்களாலும் சுட்டிக்காட்டிய கையால்; பருத்த முலைகளாகிய தந்தங்கள் பொருந்தத் தழுவியகுறி பதியுமாறு, பவளம்போல் சிவந்த சடைமுடியுடைய எமது சிவபிரானைத் தழுவியகையால்; அறங்கள் முப்பத்திரண்டும் செய்த கையால்; பருத்த மணிகள்பதித்த கங்கணங்கள் அணிந்த இரண்டுகையால்; கொடியவனாகிய என்னை அஞ்சாதே என்று அபயம்காட்டிய அழகியகையால்; இளையதோழிப்பெண்களுடன் குளிர்ந்த இமயமலைச் சோலையில் தேன்சொரியும் மலர்களைப் பறித்த கையால் அம்மையே! சப்பாணிகொட்டியருள்க. தண்ணிய நாவலந்தீவு புகழும் வெண்ணாவல் மரத்தினைத் தலமரமாகக் கொண்ட ஆனைகாவில் எழுந்தருளியுள்ள அரசியே! சப்பாணிகொட்டியருள்க.

**விளக்கம்** : காஞ்சிபுராணம் தழுவக்குழைந்த படலத்தின் செய்யுள் 138 - 141 கூறும் 32 அறங்கள் : 1.தேவயாகம். 2. பிதிர்யாகம். 3. பூதயாகம். 4. மானிடயாகம். 5. பிரமயாகம். 6. வறியார்க்கு ஈதல். 7. துறவிகட்கு மடம். 8. இல்வாழ்வார்க்கு இல்லம். 9. இல்வாழ்வார்க்குக் கருவிப்பொருள்கள் தருதல். 10. தண்ணீர்ப்பந்தல். 11. பூஞ்சோலை வைத்தல். 12. இரப்பவர், மாற்றுத்திறனாளியரை ஆதரித்தல். 13. நோய்க்குமருந்து தருதல். 14. குழந்தையைவளர்த்தல். 15. வெற்றிலைக்குச் சுண்ணாம்பு கொடுத்தல். 16. தாம்பூலம் தருதல். 17. தலைக்கு எண்ணெய் வார்த்தல். 18. முழுகுதற்கு அரப்புப்பொடிதருதல். 19. படுக்கை அளித்தல். 20. நிலக் கொடை. 21. பசுக்கொடை. 22. கன்னிகா தானம். 23 மணம்செய்வித்தல். 24. விளக்குக் கொடுத்தல். 25. தீராக்கடன் தீர்த்தல். 26. சிவனடியார் வேண்டுவன கொடுத்தல். 27. உருத்திராக்கம்

அளித்தல். 28. திருவெண்ணீறு கொடுத்தல். 29. பூசைக்குரிய பொருள் கொடுத்தல். 30. சைவநூல் புராணம் முதலியன தருதல். 31.சிவபத்தியை உபதேசித்தல். 32. அபயம் அளித்தல் ஆகியன. சிலர் இவற்றில் சிலவற்றை வேறுபடவும் கூறுவர்.

( 5 ) பாகம்உற அம்மைநினை வைத்தஎம் மான்கரப்
பால்வைத்த மான்மருண்ட
பார்வைகொண் டதுகொலை சிலைவேடுகூடும்
பருப்பதம் தொறுமாடு
மேகம்உற ழும்குழல் சிறுகுறவர் சிறுமிவாய்
மிக்கமோ கப்புல(வு)உலாம்
வேல்குழவி எனுமருகன் அருகுறைவ தற்கன்று
விரவிநம் கைப்பட்டதால்
ஏகஅரி தெனநினைத்(து) அன்(று)உனால் எனஒளிர்
இணைகண்எழு கருணைவெள்ளம்
எங்கும் பரந்(து)அப் பரற்கும் மீ(து)இட்(டு)அடியர்
இருவினையை வாரிஓட்டக்
கோகனகம் அதின்முளைத் தால்எனப் பொலிகையால்
கொட்டிஅருள் சப்பாணியே
கொடிவிரவு கடிமதில் காவைஇம யப்பாவை
கொட்டிஅருள் சப்பாணியே.

**குறிப்புரை** : பாகம்= இடப்பாகம். கரப்பால் வைத்த மான்= கையிலேந்திய மான். வேடு கூடும்= வேடர் கூடியுள்ள. பருப்பதம்= மலை. மாடு= பக்கம். உறழும்= ஒத்த. சிறுமிவாய்= சிறுமியரிடம். மோகப்புலவு= மோகமாகிய மணம். வேல் குழவி= முருகன். மருகன்= கால்வழியினர். அருகு உறைவதற்கன்று= அருகில் வாழத்தக்கதன்று. நம்கைப்பட்டதால்= நம்மை வந்தடைந்ததால். ஏக அரிது= கைவிட்டுச் செல்லுதல். உனால் ஏக அரிது இயலாது என்று கூட்டுக. பரற்கும்= வேற்றுப்பொருளாகிய மானுக்கும். இணைக்கண்= இருகண்கள். இட்டு= விருப்புடன். வாரி ஓட= ஒருசேர வாரிக்கொண்டுஓட. கோகனகம் அது= தாமரைமலர். கடி= காவல். கவை= திருவானைக்கா. இமயப்பாவை= இமவான் மகள்.

**பொழிப்புரை** : எம்தாயாகிய உன்னைத் தனது இடப்பாகத்தில் வைத்த எம்தலைவன் தன்கையில் ஏந்திய மான் மருண்டபார்வை உடையது. விலங்குகளைக் கொல்லும் வில்லேந்திய வேடர்கள் கூடி இருக்கும் மலைகள்தோறும் வாழ்கின்றவர்களாகிய அதன் பக்கங்களில் உலவும் மேகம்போல்கரிய முடியுடைய குறவரின இளஞ்சிறுவர் சிறுமியரிடம் மோகமாகிய மணம் கமழும் வேலேந்தியவனாகிய முருகனது கால்வழியினர் அருகிலும் வாழத்தக்கதன்று. ஆதலால், நாம் கைவிட்டுச்செல்லுதல் இயலாது என்று எண்ணி, உனது அருள்ஒளிரும் இருகண்களிலும் பெருகிய கருணை வெள்ளமானது எவ்விடத்தும் பரவி, அந்த வேற்றுப்பொருளாகிய மான்மீதும் மேம்பட்ட விருப்புடன் பரவி, அடியவரது இருவினைகளயும் ஒருசேரவாரிக்கொண்டு ஓடும்பொருட்டுத் தாமரைமலர் முளைத்தாற்போல விளங்கும் இருகைகளாலும் சப்பாணி கொட்டியருள்க. வெற்றிக்கொடிகள் கட்டப்பெற்ற காவல்மிக்க மதில்களுடைய திருவானக்காவில் எழுந்தருளியுள்ளவளாகிய இமவான்மகளே! சப்பாணிகொட்டியருள்க.

( 6 ) வெள்அனம் எனத்தமிழ்க் கூடல்வாழ் கைதவன்
விழுப்பெற உதித்(து)எதிர்த்த
வேளைத் தழற்கணால் செற்றஎம் மான்அளவில்
வேள்திரண் டெனவரச்செய்(து)

எள்ளல்இல் கலாநிலா மேலாக்கி மலயவெற்(பு)
ஈந்(து)அதின் அரும்பும்மென்காற்(கு)
இறையாக்கி வெம்பா ரிடம்சூழும் என்னநற(வு)
இழிநிம்ப மாலைஈந்து
கள்அவிழ் இலம்பகத் தையலார் ஆயம்
கலந்துபுடை சூழமுடியில்
கவின்முடி தரித்(து)அரி யணைக்கண்வைத்(து) இருகயல்
களிக்கநோக் காஒருகயல்
கொள்ளன விரும்பிக் கொடுத்தகை சிவப்புறக்
கொட்டிஅருள் சப்பாணியே
கொடிவிரவு கடிமதில் காவைஇம யப்பாவை
கொட்டிஅருள் சப்பாணியே.

**குறிப்புரை** : வெள் அனம்= வெண்மையான அன்னப்பறவை. கைதவன்= பாண்டியன். விழு= மேன்மை. வேள்= மன்மதன். அளவில் வேள்= அளவற்ற விருப்பம். கலாநிலா= கலைகளின் ஒளி. மலயவெற்பு= பொதிகைமலை. மலயவெற்பு ஈந்து இறையாக்கி என்று கூட்டுக. அதின் அரும்பு மென்கால்= பொதிகையில் தோன்றும் மென்மையான தென்றல். பாரிடம்= பூதக்கூட்டம். நறவு இழி= தேன் சொட்டும். நிம்பமாலை= வேப்பம்பூ மாலை. இலம்பகம்= மாலை. முடியில்= தலையில். இருகயல் களிக்க நோக்கா= கெண்டைமீன்கள் ஆகிய இருகண்களும் களிப்புறப்பார்த்து. ஒருகயல்= ஒப்பற்ற இலச்சினையாகிய மீன்சின்னம்.

**பொழிப்புரை** : தமிழ்சிறந்த மதுரையை ஆண்ட பாண்டியமன்னன் மேன்மைபெற அவனுக்கு வெண்மையான அன்னப்பறவையாகத் தோன்றி; தன்னை எதிர்த்த மன்மதனை நெற்றிக்கண்ணால் அழித்த எமது தலைவனாகிய சிவபிரான் உள்ளத்தில் அளவற்ற விருப்பம் திரண்டுவரச் செய்து, இகழ்தலில்லாத கலைகளுடைய நிலவைச் சூடியதால் மேலானவனாக்கி, பொதிகைமலைக்கு அரசனாக்கி, அதன்கண் தோன்றும் மென்மையான தென்றலுக்குக் கொடிய பூதக்கூட்டம் வந்துசூழும் என்றுசொல்லி, தேன்சொரியும் வேப்பம்பூ மாலை அணியச்செய்து, தேன்சொரியும் மாலைசூடிய மகளிர் கூட்டம் பிறருடன் கலந்து சூழத் தலையில் அழகிய கிரீடம் சூட்டி, அரியணைகண் அமரச்செய்து, தனது இருகண்களாகிய கெண்டை மீன்கள் கண்டு களிக்க, ஒப்பற்ற இலச்சினையாகிய கெண்டையை ஏற்குமாறு விருப்புடன் கொடுத்த கை சிவக்குமாறு சப்பாணி கொட்டியருள்க. வெற்றிக்கொடிகள் விரவிய காவல்மிக்க மதில்களுடைய திருவானைகாவில் எழுந்தருளியுள்ளவளாகிய இமவான் மகளே ! சப்பாணி கொட்டியருள்க.

( 7 ) **வேறு**

அரவப் பரிபுர மேகலை பம்பி அலம்பிப் பதறாமே
அம்போ ருகமொடு வெம்போ ரிடுகர மணிவளை சிதறாமே
இரவில் பொலிமதி வகிரில் சுட்டி இரிந்(து)அது பிறழாமே
இயல்(பு)அன் றியும்இரு கரமலர் சேந்(து)அடல் ஏறிக் கன்றாமே
பரவைக் கடல்சுல(வு) உலகினில் அலகில் பவக்கடல் வீழ்ந்(து)உழலும்
பயன்இல் லாஎனை வழிவழி அடிமை படைத்தபி ரான்மகிழும்
குரவக் குழவி துயின்ற கரம்கொடு கொட்டுக சப்பாணி
கொம்பு படைத்த சிலம்பு வனத்தவள் கொட்டுக சப்பாணி.

**குறிப்புரை** : பரிபுரம்= சிலம்பு. பம்பி அலம்பி= பதுங்கி வருந்தி. அம்போருகம்= தாமரைமலர் ஆகிய கைகள். போரிடு= மோதும். மணிவளை= அழகிய வளையல். மதி வகிரில்= பிளவுபட்ட நிலவுஆகிய நெற்றியில். சுட்டி= நெற்றிச்சுட்டி. இரிந்து= தன் இடத்தில் இருந்து விலகி. இயல்பு அன்றி= இயல்புக்கு

மாறாக. சேந்து= சிவந்து. அடல் ஏறி= வருத்தம் மிக்கு. பரவைக் கடல்= நீர்ப்பரப்புடைய கடல். சுலவு= சூழும். பவக்கடல்= பிறவிக்கடல். பிரான்= சிவபிரான். குரவக் குழவி துயின்ற= குழந்தைபோன்ற குரவமலர் தங்கிய. கொம்புபடைத்த சிலம்பு= கொம்புடைய - தந்தமுடைய மலை - ஆனை.

**பொழிப்புரை** : நீர்ப்பரப்புடைய கடல் சூழ்ந்த இவ்வுலகில், எண்ணற்ற பிறவிக்கடலில் விழுந்து துன்புறும் ஒன்றுக்கும் ஆகாத என்னை வழிவழி அடிமையாகப்படைத்த சிவபிரான் மகிழ்வதும். குழந்தைபோன்ற குரவமலர் தங்கியதும் ஆகிய உன்கைகளால்; பாம்பு ஆகிய சிலம்பும், மேகலையும் பதுங்கி வருந்திப் பதறாமலும்; தாமரை மலர் போன்ற கையுடன் மோதிக் கொடிய போரிடும் அழகிய கைவளையல் சிதறாமலும்; இரவில் பொலிவுடன் விளங்கும் பிளவுபட்ட நிலவுஆகிய நெற்றியில் அணிந்த நெற்றிச்சுட்டி தன்னிடத்தில் இருந்து விலகிப்;பிறழாமலும்; இருகைகளாகிய தாமரை மலர்கள் இயல்புக்கு மாறாகச் சிவந்து வருத்தம்மிக்குக் கன்றிப்போகாவகையிலும் சப்பாணி கொட்டுக. தந்தமுடைய மலைகளாகிய ஆனைகள் வாழும் ஆனைக்காவில் எழுந்தருளியுள்ளவளே ! சப்பாணி கொட்டுக.

( 8 ) **எ**ங்கள் பிரான்அடி வைத்த கருத்தர் இடர்க்கடல் வீழாமே
எறிதிரை படும்ஒரு குடிஞையின் மறைமடல் எதிர்அல(து) ஏறாமே
வெங்கனல் தங்கு மடத்(து)உறு தூமம் விரித்து முழங்காமே
மெச்சு குலச்சிறை நட்ட நுனைக்கழு வீணாப் போகாமே
அங்கம் அலம்பு சிலம்பு கலந்தமெல் அடிஅல(து) ஆகாமே
அரஒலி மலிசிர புரம்வரு குழவிக்(கு) அருள்ஞா னம்கலவாக்
கொங்கை சுரந்(து)இழி பால்அமு(து) ஊட்டினள் கொட்டுக சப்பாணி
கொம்பு படைத்த சிலம்பு வனத்தவள் கொட்டுக சப்பாணி

**குறிப்புரை** : கருத்தர்= மனத்தினர். குடிஞை= ஆறு - வைகையாறு. மறைமடல்= வேதமொழி எழுதிய ஓலை. ஏறாமே= செல்லாமல். தூமம்= தீ. அங்கம் அலம்பு= உடலை வருத்தும். மெல் அடி அலது ஆகாமே= மென்மையான கால்களில் அல்லது நிகழாமல். குழவி= திருஞான சம்பந்தர். கலவா= கலந்து.

**பொழிப்புரை** : எமது தலைவனாகிய சிவபிரானின் திருவடிகளை மனத்தில் வைத்தவர்கள் துன்பக்கடலில் வீழாமலும்; அலைவீசும் வைகையாற்றில் இட்ட வேதமொழி எழுதிய ஓலை ஆற்றுப்போக்கை எதிர்த்தல்லது ஆற்றுப்போக்கில் செல்லாதிருக்கவும்; அடியவர்களுடன் திருஞானசம்பந்தர் தங்கியிருந்த மடத்திற்குச் சமணர் வைத்த தீ மேலும் பரவாதிருக்கவும்; அனைவரும் போற்றும் குலச்சிறையார் நட்ட கூர்மையான நுனியுடைய கழுவீணாகாமல் இருக்கவும்; மென்மையான காலில் அணிந்த அணியாகிய சிலம்பல்லது, பிற உடலை வருத்தாதிருக்கவும்; அர அர ஒலிமலிந்த சீர்காழியில் பிறந்த திருஞானசம்பந்தருக்குக் கருணையுடன் தனது கொங்கைசுரந்த ஞானப்பால் ஊட்டியவளே ! சப்பாணி கொட்டுக. தந்தங்களுடைய மலைகளாகிய ஆனைகள் வாழும் ஆனைக்காவில் எழுந்தருளியுள்ளவளே! சப்பாணி கொட்டுக.

**இலக்கணக்குறிப்பு** : தூமம் - ஆகுபெயர். கலவா - செய்யாஎன்னும் வாய்பாட்டு வினைஎச்சம்.

( 9 ) **வேறு**

முமலக் கருள்அற ஒருவினர் மனன்எனும் அற்புத றச்சாரும்
முளரிச் சததள இளமலர் உளிவிள ரிப்பண் மிழற்(று)ஓதைப்
பமரக் குலம்முடி அடிபடி தரமது மிக்கபெ ருக்(கு)ஊறும்
பதிபச் சடையுடை மரைமடல் புரைஅடி வைப்ப அடுப்பார்அ
மமர்பொற் கிரிஎன வளர்இள முலைகள் பரித்(து)எழு பொற்பாவை
அமலச் சுடர்இட மருவிய ஒருகொடி புத்தமு தப்பூவை
கமலக் குயில்புணர் குயில்வர வருகுயில் கொட்டுக சப்பாணி

கரடக் கடம்உமிழ் கடகரி வனமயில் கொட்டுக சப்பாணி.

**குறிப்புரை :** மும்மலக் கருள்= ஆணவம் கன்மம் மாயை ஆகிய மூன்று மலங்கள் ஆகிய குற்றம். ஒருவினர்= நீங்கியவர். அற்பு நறச் சாரும்= அன்பாகிய தேன் பொருந்திய. சததள முளரி= நூறிதழ்த்தாமரை. உளி= எண்ணி - விரும்பி. மிழற்று= முரலும். பமரக்குலம்= வண்டுகளின் இனம். முடி அடி படிதர= உச்சியிலும் அடியிலும் படிய. பச்சடையுடை மதுமிக்கபெருக்கு ஊறும் மரைமடல் புரை அடி வைப்ப= பசுமையான இலையுடன் கூடியதும், தேன்மிகப் பெருகுவதும் ஆகிய தாமரைமலரின் இதழ்போன்ற திருவடியைச் சூட்டும்பொருட்டு. அமமர் அடுப்பார்= மலப்பிணியாளர் வருவார்கள். பொற்கிரி= மேருமலை. பரித்து= சுமந்து. அமலச்சுடர் இடம் மருவிய பொற்பாவை ஒருகொடி புத்தமுதப் பூவை= மலமில்லாத ஒளிவடிவான சிவபிரானின் இடதுபாகத்தில் பொருந்திய அழகிய பாவையும், ஒப்பற்ற கொடியும், புதிய அமுதம் பொழியும் குயிலும் ஆனவளே. . கமலக்குயில்= திருமகள். குயில் = மேகம் ஆகிய திருமால். கரடக்கடம்= மதநீர்ச்சுவடு. கடம் உமிழ் கரிவனம்= மதம்பொழியும் யானைகளுடைய ஆனைக்கா.

**பொழிப்புரை :** ஆணவம் கன்மம் மாயை ஆகிய மூன்று மலக்குற்றங்களையும் நீக்கியவர் மனமாகிய அன்புத்தேன் பொருந்திய நூறிதழ் தாமரையின் தேன்மிகப் பெரிய அளவில் ஊறும் புத்தம்புதிய மலரை எண்ணி - விரும்பி; விளரிப்பண் முரலும் வண்டின் இனம் அதன் உச்சியிலும் அடியிலும் படிய, பசிய இலையுடன் கூடியதும் தேன் மிகப்பெரிதும் ஊறுவதும் ஆகிய தாமரைமலர் போன்ற திருவடியைத் தலைவன் ஆகிய சிவபிரான் சூட்டும்பொருட்டு மலப்பிணியாளர் வருவர். மாமேருமலை எனுமாறு பருத்த இளமுலைகளுடைய அழகிய பாவையே! மலமில்லாத ஒளிமயமான சிவபிரானின் இடப்பால் பொருந்திய ஒப்பற்ற கொடியே! புதிய அமுதமொழிபேசும் கிளியே! திருமகளைக்கூடும் மேகம்போன்ற திருமாலுக்குப் பின்வந்த குயிலே! - திருமாலுக்குதங்கையே! சப்பாணி கொட்டுக, மதநீர்ச்சுவடு படிய மதம்பொழியும் ஆனைகள் மிக்க ஆனைக்காவில் எழுந்தருளியுள்ளவளே! சப்பாணி கொட்டுக.

**இலக்கணக்குறிப்பு :** மும்மலம் - செய்யுள் விகாரம். பசுமை + அடை= பச்சடை மரைமடல் - முதற் குறை. உளி - இடைக்குறை - செய்யுள்விகாரம்.

( 10 ).

**வேறு**

மலைஎன வளர்இரு பாரப் பூண்முலை வனிதையர் குடைபனி நீர்கண் தாமரை
மலிமடு நடுவிரை(வு) ஓடிப் பாயமி குத்தபெ ருக்காகி
வரிவளை வயி(று)உளை(வு) ஆகிக் கால்மணி நில(வு)ஒளி அலகில்நி லாஒப்(பு) ஆகலின்
மலர்தரு கயிரவ ஊறல் தேறல்ம ணத்தப ணைக்(கு)ஓடித்
தலைமடை அகடுவி ராவிக் கீறிமுள் மடலொடு சுலவிய தாழைத் தூர்முறி
. தரஎறி அலையொடு வேள்கைச் சாபவ னத்தைந னைத்(து)ஏறத்
தனிஉருள் இரதந டாவல் சார்பிலன் எழுபரி பசியமெய் கீறித் தோகைகள்
தழையவிண் அளவிய தாலக் கானைம டித்துமு றுக்(கு)ஆலை
அலைஎறி பிரசமி டாவில் பாய்பொழு(து) இரிசிறு துளிபிர வாகக் காவிரி
அலைபட ஒழுகிய ஓதைக் கேஉள்ந டுக்கம் எடுத்(து)ஓடி
அரு(கு)ஒரு குளன்இள மேதிச் சூல்முகில் நிரைவிழ வெருவுவ ரான்எட்(டு) ஏ(டு)அவிழ்
அயல்வளர் கதலிகள் சாயப் பாசுநி றத்தம டல்பூகக்
குலைமிட(று) ஒடிபட வானிற் போயதென் முதிர்பலன் உதிர்தர மோதித் தாவொடு
குதிகொளும் வளம்மலி ஆனைக் காமயில் கொட்டுக சப்பாணி
குரைகழல் அடிபடி வாழ்விற் கூடிய மனன்உடை என்முடி மீதிற் சூடிய
குனிமதி வதிசடை யாருக்(கு) ஓர்துணை கொட்டுக சப்பாணி.

**குறிப்புரை :** பூண்= அணிகலன். வனிதையர்= மகளிர். குடை= மூழ்கிஎழும். பெருக்கு ஆகி= நீர்மட்டம் பெருகி. வளை= சங்கு. உளைவு ஆகி= நொந்து. கால்மணி= ஈன்றமுத்து. நிலவு ஒளி= ஒளிரும் ஒளி.

மணத்த கயிரவ ஊறல்= மணமுடைய ஆம்பல்மலரின் தேன். பணை= நன்செய் நிலம். தலைமடை அகடு= பெரியமடையின் நடுவிடம். கீறி உடைத்துக்கொண்டு. சுலவிய= விளங்கும். எறி அலையொடு= வீசும் அலையுடன். வேள்கைச் சாப வனம்= மன்மதனின் கைவில்லாகிய கரும்புக் காடு. ஏற= மிக. தனி உருள்= ஒற்றைச்சக்கரம். நடாவல்= இழுத்துச்செல்லும். எழுபரிமெய்= ஏழு குதிரைகளின் உடம்பு. தழைய விண் அளாவிய தோகைகள் கீறி= தழைத்து வானளாவிய தோகைகள் புண்படுமாறு அடிக்கும். தாலக்கான்= கரும்புக்காடு. மடித்து முறுக்கு ஆலை= வெட்டிஅழித்து நெறிக்கும் கரும்பு ஆலை. பிரசம்= இனிய சாறு; மிடா= பெரும்பானை. இரி= தெறித்து ஓடும். அலைபட ஒழுகிய= அலையுண்டாகுமாறு கலந்த. ஓதை= ஒலி. உள்= மனம். குளன்= குளம். மேதி= எருமைகள். சூல்முகில்நிரை= கார்மேகக் கூட்டம். வெருவு எட்டு வரான்= அஞ்சிய அருகில் இருந்த வரால் மீன்களால். கதலிகள்= வாழைகள். பாசுநிறத்த= பசிய நிறமுடைய பூகமடல்= பாக்கு மடல். வானில் போய= வானளாவச்சென்ற. தென் முதிர் பலன்= தென்னையின் முற்றிய நெற்று. தாவொடு மோதிக் குதிகொளும்= வலிமையுடன் மோதிக்குதிக்கும். கூடிய= பொருந்திய. வதி= வாழும்.

**பொழிப்புரை :** மலைஎன்னுமாறு வளர்ந்த கனத்த முலைகளில் அணிகலன் அணிந்த மகளிர், தாமரைமலர்கள் மலிந்த குளிர்ந்தநீரின் நடுவில் ஓடிப்போய் பாய்ந்து நீராடும்போது நீர்மட்டம் உயர்ந்ததால் கோடுகளையுடைய சங்குகள் வயிறுநொந்து ஈன்ற முத்துகள் ஒளிரும்ஒளியானது அளவற்ற நிலாக்களுக்கு ஒப்பாக விளங்கியதால், அதுகண்டு மலர்ந்து மணக்கும் ஆம்பல்மலர்களின் தேன்; நன்செய் நிலங்களை நோக்கி ஓடித் தலைமடையின் நடுவிடத்தை உடைத்துக்கொண்டு, மடலில் முட்களுடைய தாழைகளின் தூர் முறிபட அலையெறிந்து ஓடி, மன்மதன் ஏந்திய வில்லாகிய கரும்புக்காட்டினை நனைத்துக்கொண்டு பெருக; அதனால் ஒற்றைச்சக்கரமுடைய தேரினை இழுத்துச்செல்லும் ஏழுகுதிரைகளின் உடம்புபுண்ணாகுமாறு அடிக்கும் தோகையுடைய அக்கரும்புக்காட்டினை வெட்டிஅழித்து அக்கரும்புகளை ஆலைகளில் சாறுபிழியும்போது சாற்றினைப் பிடிக்கும் பெரியபானைகளில்இருந்து தெறிக்கும் சிறுதுளி வெள்ளமாகப் பெருகிக் காவிரியாற்றில் அலையுண்டாகுமாறு கலந்தஓசையால் மனம்நடுங்கிஓடி, அருகில் இருக்கும் குளத்தில் விழுந்த கார்மேகமாகிய கரியநிறமுடைய எருமைகளால் அஞ்சிய அங்கிருந்த நீண்டவரால்மீன்கள் வானில்எழுந்துபலமாக மோதியதன் காரணமாக, பூக்களின் இதழ்விரிந்து வளரும் வாழைகள் சாய, மடல்களுடைய பசியபாக்குக்குலைகளின் கழுத்து ஒடிபட, பின்னும்போய் முதிர்ந்த தென்னை நெற்றுகள் உதிருமாறு குதிக்கும் வளம்மிக்க திருவானைக்காவில் எழுந்தருளியுள்ளமயிலே ! சப்பாணிகொட்டியருள்க. ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த திருவடிகளில் படிந்து வணங்கிய மனத்தினையுடைய என்தலையில் அவற்றைச் சூட்டியவனாகிய வளைந்தபிறை வாழும் சடையுடைய சிவபிரானுக்கு ஒப்பற்ற துணையே! சப்பாணிகொட்டியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : குளன் - மொழிஈற்றுப்போலி. மேதிச் சூல்முகில்நிரை - உருவகம்.

**சப்பாணிப்பருவம் முற்றிற்று.**

**********************************

## முத்தப்பருவம்

*********************

கொதிக்கும் கவைச்செங் கொழும்தழல்கண் குளிக்கும் மெழுகுஒத்(து) உருகிஅறக்
குழைந்து கசிந்து கரம்சிரமேல் குவித்துக் கொழுநாத் தழும்பேறத்
துதிக்கும் அடியார் உளக்கோயில் தூண்டா விளக்கே மெய்ஞ்ஞானச்
சுடரே அமலச் சுடர்க்(கு)ஒருவாத் துணையே இணையின் மணியேஅ
திதிக்கும் ஒருகா சிபர்க்கும்வரும் சிறுவர் பணிந்து கரம்கூப்பும்
சிலந்தி பணிந்த நகரில்வளர் செழும்பூங் கொம்பே சிரபுரச்சந்

ததிக்கு முலைப்பால் முன்அளித்த தாயே முத்தம் தருகவே

சயிலத்(து) அரசன் தவத்தில்அவ தரித்தாய் முத்தம் தருகவே..

**குறிப்புரை** : கவை= பிளவு. குளிக்கும்= முழுகும். அற= முழுவதும். கொழு= பதித்த. அமலச்சுடர்= மலமில்லாத பேரொளி - சிவபிரான். ஒருவா= பிரியாத. சிறுவர்= தேவர்கள். சிலந்தி பணிந்த நகர்= சிலந்தி வலைபின்னி வணங்கிய ஆனைக்கா. சந்ததி= வழித்தோன்றல் - திருஞானசம்பந்தர். சயிலத்து அரசன்= இமவான்.

**பொழிப்புரை** : பெருவெப்பத்துடன் பிளவுபட்டு எரிந்துகொதிக்கும் நெருப்பில் முழுகும் மெழுகுபோல் மனம் முழுதும் உருகி, முழுவதும் குழைந்துகசிந்து கைகளைத் தலைமேல் குவித்து, திருவடியில் பதித்துப்போற்றும் நாக்கு, தழுப்பேறப் போற்றும் அடியவர் மனக்கோயிலில் எழுந்தருளும் தூண்டாவிளக்கே! மெய்ஞ்ஞான வடிவான சுடரே! மலமில்லாச்சுடரான சிவபிரானைப்பிரியாது அவனுக்குத் துணையாய் விளங்குகிறவளே! ஒப்பற்ற மாணிக்கமணியே! சிலந்தி வலைபின்னிப்பணிந்த திருவானைக்காவில் எழுந்தருளியுள்ளவளே! அதிதிக்கும் காசிபமுனிவர்க்கும் பிறந்த தேவர்கள் பணிந்து கைகூப்பி வணங்க எழுந்தருளி அருள்வழங்குவதில் வளமான மலர்க்கொம்பே! சீர்காழி வழித்தோன்றலாகிய திருஞானசம்பந்தர்க்கு முற்காலத்தில் முலைப்பால் அளித்ததாயே! முத்தம் தருக. இமவானின் தவத்தால் தோன்றியவளே! முத்தம்தருக.

**இலக்கணகுறிப்பு** : தூண்டா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்.

( 2 ) கல்நேர் உள்ளம் கசிந்(து)உருகக் கரைவித்(து) ஒருபைந் தருஅறைந்த

கருந்தா(து) ஆணி எனக்கசிவு காணக் கடையேன் தனைப்புரந்த

பொன்னே பளகற்(று) ஒளிகாலும் பொல்லா மணியே மெய்ஞ்ஞானப்

பொருளே அருள்எண் நான்(கு) அறமும் பூத்த கொடியே பொற்கொம்பே

மின்னே மழலைப் பசுங்கிளியே வெள்ஓ திமமே கருங்குயிலே

வேம்பர் குடிக்(கு)ஓர் செங்கரும்பே வெள்ளை நாவல் அடிமுளைத்த

தன்னேர் இலிக்குத் துணைவரும்என் தாயே முத்தம் தருகவே

சயிலத்(து) அரசன் தவத்தில்அவ தரித்தாய் முத்தம் தருகவே.

**குறிப்புரை** : பைந்தரு= பசிய - உயிர்ப்புள்ள மரம். கருந்தாது= இரும்பு. பளகற்று= மலைக்கண். பொல்லா= துளையிடப்பெறாத. ஓதிமம்= அன்னப்பறவை. வேம்பர்= வேப்பம்பூ மாலையணியும் பாண்டியர்.

**பொழிப்புரை** : கருங்கல் போன்ற என்உள்ளம் கசிந்துஉருகச்செய்து, அதில்; உயிர்ப்புள்ள பசிய மரத்தில் அறைந்த இரும்புஆணிமூலம் மரத்தின் சாரம்கசியச்செய்ததுபோல் உள்ளத்தைக் கசியச்செய்து கடையேனைக் காத்த பொன்னே! மலைக்கண் தோன்றி ஒளிரும் துளையிடப்பெறாத மணியே! மெய்ஞ்ஞானமே வடிவான பொருளே! முப்பத்திரண்டு அறங்களையும் பூத்து அருளும் கொடியே! பொற்கொம்பே! மின்னலே! மழலைபேசும் பசிய கிளியே! வெண்மையான அன்னப்பறவையே! கருங்குயிலே! வேப்பம்பூமாலையணிந்த பாண்டியர்குடி விளங்கவந்த செங்கரும்பே! வெண்ணாவல் மரத்தடியில் தோன்றிய தன்னொப்பார் இல்லாத இறைவனுக்குத் துணையாக வரும் என்தாயே! முத்தம் தருக. இமவானின் தவத்தால் தோன்றியவளே! முத்தம் தருக.

**விளக்கம்** : அரிய உவமை இது. உயிர்ப்புள்ள மரம் - மகாவித்துவான். இரும்பாணி - சிவபிரான். இரும்பாணி பசியமரத்தில் பதிதல் - இவர்மனத்தில் சிவபிரான்பதிதல். இரும்பாணியால் சாரம்இடையறாது கசிதல் - இடையறாத பத்திமைக்கசிவு.

**இலக்கணக்குறிப்பு** : ஒருபைந்தரு .... புரந்த - உவமையணி. பொன், மணி, கொடி, கொம்பு, பசுங்கிளி, ஓதிமம், குயில், செங்கரும்பு - உருவகங்கள்.

( 3 ) பொங்கும் கருணைப் புதுவெள்ளப் புணரி எழுந்து திரைஎறிந்து
பொறிபோம் நெறியில் உளம்செலுத்தாப் புனித அடியர் குழாம்அடுக்க
எங்கும் பரந்து பெருக்(கு)ஏற எனைஆள்வாத வூர் அடிகள்
இயல்செந் தமிழின் அமு(து)அருந்தும் எம்கோன் செவிகள் குளிர்தூங்கக்
கொங்(கு)உந்(து) இணர்கொள் பொங்கர்வனக் குயில்நாண் பொருந்த மதர்நோக்கம்
கொள்ளா வதனம் கோட்டிநறும் குதலை ததும்பப் பேசுநறாத்
தங்கும் குமுத மலர்வாயால் தாயே முத்தம் தருகவே
தானப் பொருப்பு வனம்தழையத் தழைந்தாய் முத்தம் தருகவே.

**குறிப்புரை :** புணரி= கடல். பொறிபோம் நெறி= ஐம்பொறிகளும் செல்லும்வழி. அடுக்க= சேர. ஏற=மிக. எம்கோன்= எம்சிவபிரான். குளிர்தூங்க= குளிர. கொங்கு= தேன். இணர்= பூங்கொத்து. பொங்கர் வனம்= சோலைக்காடு. மதர் நோக்கம்= மகிழ்ச்சியான பார்வை. கோட்டி= கொட்டி. நறா= தேன். தானப்பொருப்பு= மதமலை - யானை. தழைந்தாய்= செழிப்பவளே.

**பொழிப்புரை :** கருணைபொங்கும் புதுவெள்ளக்கடல் அலைவீசித்தோன்றி; ஐம்பொறிகள் செல்லும் வழியில் தமது மனத்தைச் செலுத்தாத புனிதராகிய அடியவர் கூட்டத்தச் சேரும்பொருட்டு; அவ்வெள்ளம் எங்கும் பரவிஅதன் பெருக்கு மிகுதியாகவும்; என்னை ஆளும் வாதவூரடிகளாகிய மாணிக்கவாசகரின் இயல்செந்தமிழின் அமுதத்தை நுகரும் எமதுதலைவனாகிய சிவபிரானின் செவிகள் குளிரவும்; தேன்சுரக்கும் பூங்கொத்துகளயுடைய சோலைக்காட்டுக் குயிலே! நாணமுடன் மகிழ்ச்சியான பார்வைகொண்டு, அதனை முகத்தில் கொட்டிக்காட்டி, செவிமணக்கும் குதலைததும்பப்பேசும் தேனாகிய சொற்கள் பொருந்திய குமுதமலர்போன்ற வாயால் தாயே! முத்தம்தருக. மதமலையாகிய யானைகள் மிக்க ஆனைக்கா செழிக்கச் செழிப்பவளே! முத்தம் தருக.

**இலக்கணக்குறிப்பு :** செலுத்தா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். தானப்பொருப்பு - உருவகம்.

( 4 ) போ(து)ஆர் நினது பொன்அடியில் புரம்மூன்று எரித்த எம்இறைவன்
புலவி தீர்ப்பான் வணங்கமுடிப் பொலியும் குடிலத் துகிர்க்கொடியும்
கா(து)ஆர் வளையும் கமடமும்மேல் காணப் பரந்து பெருக்கெடுத்த
கங்கைப் புணரி நாறுமதிக் கலையைச் சிறிது கண்ணுற்று
மீதார் நாணுற்(று) அவண்சிறிது மென்தாள் கமலம் சுருங்கமகிழ்
வேரிக் குமுத மலர்கடுப்ப வெள்ளி முறுவல் சிறி(து)அரும்பும்
தா(து)ஆர் தளவம் செறிவாயால் தாயே முத்தம் தருகவே
தானப் பொருப்பு வனம்தழையத் தழைந்தாய் முத்தம் தருகவே.

**குறிப்புரை :** புலவி= ஊடலின் நீட்டம். குடிலத் துகிர்க்கொடி= பவளம்போல் நீண்ட சடை. வளை= குண்டலம். கமடம்= ஆமையோடு. புணரி= நீர். கலைமதி= பிறைநிலவு. மீதார்= மேன்மைபொருந்திய. அவண்= அங்கே. அங்கேசிறிது கண்ணுற்று என்று கூட்டுக. தாள்கமலம்= திருவடித்தாமரை. சுருங்க= இழுத்துக்கொள்ள. மகிழ்= மகிழ்ந்த. வேரி= தேன். கடுப்ப= ஒத்த. வெள்ளி முறுவல்= வெண்பற்கள். தாது= தேன். தளவம்= முல்லையரும்பு - கூரிய பற்கள்.

**பொழிப்புரை :** தாயே! மலர்கள் பொருந்திய உனதுஅழகிய திருவடியில், முப்புரம் எரித்த எம்இறைவனாகிய சிவபிரான் உனது புலவி நீட்டத்தினைத் தீர்க்கும்பொருட்டு விழுந்து வணங்க; அவ்விடத்தில் அவனது தலைக்கண் விளங்கும் நீண்டபவளம் போன்ற சடையையும், காதுகளில் அணிந்த குண்டலத்தையும், மேலே காணுமாறு பரவிய ஆமையோட்டினையும், பெருக்கெடுத்த கங்கைநீர் மணக்கும் பிறையையும் சற்றுக்கண்டு, மேன்மைபொருந்திய உனதுமென்மையான தாமரைமலர்போன்ற திருவடிகளை இழுத்துக்கொள்ள, அதுகண்டு தேன்பொருந்திய குமுதமலர் ஒத்த வாயிலுள்ள தேன்பொருந்திய முல்லை

அரும்பு போன்றபற்கள் தோன்ற வெண்மையான முறுவல் அரும்பும் வாயினால் முத்தம் தருக. மதமலையாகிய யானைகள் மிக்க ஆனைக்கா செழிக்கச் செழிப்பவளே! முத்தம் தருக.

**விளக்கம்** : கமலம் சுருங்க மகிழ் குமுதமலர் என்ற நயம் காண்க.

**இலக்கணக்குறிப்பு** : தீர்ப்பான் - பான் ஈற்று எதிர்காலவினையெச்சம்.

( 5 ) வண்ணம் கரிய முகில்உயிர்த்த மணிமுத்(து) அம்மே நீஉயிர்த்த
மணிமுன் தளைந்து பிணிக்கஉரு மாறிப் போன முத்தம்அலை
நண்(ணு)அம்(பு) உவரி முளைத்தமதி நளிர்முத்(து) ஒளிர்முத் தமிழ்க்(கு)உரிய
நால்வர் கசைக்கு மைந்தலைஉன் நாதன் அடிகள் தேய்த்தமுத்தம்
வெண்நந்(து) உமிழ்வெண் முத்துநெடு வேயின் முத்து நின்முன்எச்சில்
விரவி இருப்ப(து) அவையார்க்கு வேண்டும் அடியேன் விரும்பிடநின்
தண்அம் குமுத மலர்வாயால் தாயே முத்தம் தருகவே
தானப் பொருப்பு வனம்தழையத் தழைந்தாய் முத்தம் தருகவே

**குறிப்புரை** : அம்மேநீ= தாயே நீ. மணிமுத்து= அழகிய முத்து. உயிர்த்த மணி= ஈன்ற முத்து. தளைந்து= தொடுக்கப்பெற்று. நண்ணு= பொருந்திய. அம்பு உவரி= நீர்மிக்க கடல். மதி நளிர்= நிலவுபோல் குளிர்ந்த. கசைக்கு= வேலைப்பாடு. மைந்தலை= அழகு. அடிகள் தேய்த்த= திருவடிகள் பொருந்திய. முத்தம்= வீடுபேறு. வெண்நந்து= வெண்மையானசங்கு. நெடு= முற்றிய. எச்சில்முன் விரவி இருப்பது= வடியும் எச்சிலுக்குமுன்னே அதனுடன் கலந்து இருக்கும் முத்துப்போன்ற எச்சில். யார்க்கு வேண்டும்= யார்க்கும் வேண்டாம். விரும்பிட= விரும்பும்வண்ணம்.

**பொழிப்புரை** : தாயே! கரிய நிறத்து மேகம் ஈன்ற அழகிய முத்து; முன்தோன்றி உருமாறிய முன்னைய முத்துகளுடன் கட்டப்பெற்ற முத்து; அலைகள் பொருந்திய நீர்நிறைந்த கடலில் பிறந்த முழுமதிபோல் குளிர்ந்த முத்து; ஒளிபொருந்திய தமிழுக்கு உரிய நால்வர் பெருமக்கள் அருளிய வேலைப்பாடமைந்த பாடல்களின் அழகுக்கு ஏற்றவாறு உன்திருவடிகளில் பொருந்திய முத்து; வெண்மையான சங்குகள்ஈன்ற முத்து; வடியும் உனது எச்சிலின் முன்னே அதனுடன் கலந்து சொட்டும் எச்சிலாகிய முத்து ஆகிய முத்துகள் யார்க்கும் வேண்டாம். நான்விரும்பும் வண்ணம் நீ உனது தண்ணிய குளிர்ந்த குமுதமலர்போன்ற வாயால் தாயே! முத்தம் தருக. மதமலையாகிய யானைகள் மிக்க ஆனைக்கா செழிக்கச் செழிப்பவளே! முத்தம் தருக.

( 6 )

**வேறு**

கையடி புடைத்(து)எழு மருப்புப் பொருப்புக் களிற்றைக் கிழித்து நெடிய
கன்னலில் கயலில் கனன்றுநுதல் நாறுசெங் கண்தழலை இட்டும்இடைவாய்ப்
பைஅடியின் நுனிவால் பொருந்திட முறுக்கிவெம் பாம்பைப் பிணித்தும் அடல்வாய்
பரியஏறு ழிக்குறுங் கோட்டினை முறித்தும் பயக்குருகின் இறகொடும்கார்
மைஅடி படச்சடைக் காட்டினிடை போட்டுநின் மணவாளன் என்னும்முக்கண்
வானவன்இவ் வண்ணம்வெண் தரளங்க ளுக்(கு)ஒவ்வோர் மா(சு)உறச் செய்தஅதனால்
மெய்அடியர் நசையாகி வேண்டுவன அருளுவைநின் வீழிவாய் முத்தம்அருளே
வெண்ணாவல் அடிவளர் கரும்பினை விரும்புகொடி வீழிவாய் முத்தம்அருளே.

**குறிப்புரை** : கை அடி= வலிமையான பாதம். புடைத்து எழு= வெளிப்பட்டுத் தோன்றும். பொருப்பு= மலை. கன்னலில் கயலில்= கரும்புவில், இலச்சினையாகிய கெண்டை மீன் ஆகியனகொண்ட மன்மதன். நுதல் நாறு செங்கண் தழலை இட்டுக் கனன்று= நெற்றியில் பொருந்திய தீக்கண்ணின் நெருப்பினை இட்டு எரித்து. வாய் இடை= வாயின். பை= படம். அடியின் நுனிவால்= அடிப்பகுதியின் வால்நுனி. முருக்கி= பிணித்து. அடல் வாய்= வலிமைமிக்க உடம்பு. பரிய ஏறுழி= பருத்த காட்டுப்பன்றி. பயக்குருகின் இறகு= கொக்கின் இறகு. கார் மைபட= அச்சமும் களங்கமும் உண்டாக. வெண் தரளங்களுக்கு= அறிவின்றித்

திரண்ட அவற்றுக்கு. மாசு உற= குற்றமுண்டாக. நசையாகி= விரும்பப்படுகின்றவளாய். வீழிவாய்= விரும்பப்படும் வாய்.

**பொழிப்புரை :** வலிமையான பாதமும் வெளிப்பட்டுத் தோன்றும் தந்தமும்கொண்ட மலையாகிய ஆண்யானையின் வயிற்றைக்கிழித்தும்; உயரமான வில்ஆகிய கரும்பு, கொடிஇலச்சினையாகிய கெண்டை மீன் ஆகிய கொண்ட மன்மதனைத் தனது நெற்றிக்கண் தீயால் எரித்தும்; பாம்பின் வாய்மேல் பொருந்திய படம், அதன்அடிப்பகுதியின் நுனிவால் ஆகிய இரண்டையும் முடிச்சிட்டுக்கட்டிக்கொண்டும்; வலிமைமிக்க உடம்புடைய காட்டுப்பன்றியின் குட்டையான கோட்டினை முறித்து அணிந்தும்; கொக்கின் இறகினைச் சடைக்காட்டில் போட்டும்; உன்கணவன் ஆகிய முக்கண்தெய்வம், இவ்வாறு அறிவின்றித் திரண்ட அவற்றுக்கு அச்சமும் களங்கமும் உண்டாகச்செய்த காரணத்தால், உன்னையே விரும்பும் உண்மைஅடியார்கள் விருப்பப்படி அருளும்நீ, அவர்களால் விரும்பப்படுகிறவளாதலின் உன்வாய்முத்தம் அருள்வாயாக! வெண்ணாவல் மரநிழலில் வாழும் கரும்பாகிய பெருமானைவிரும்பி அவனதுஇடப்பால் பற்றிப்படரும் கொடியே! அடியார் விரும்பும் உன்வாய்முத்தம் அருள்வாயாக.

**விளக்கம் :** அறிவின்றிச் சினத்துடன் எதிர்த்துச் செயல்பட்டதால் உன்கணவனால் அவை தண்டிக்கப்பெற்றன. நாங்கள் அறிவற்றவராயினும் அன்புகொண்ட உன்அடியவராதலின் நாங்கள் வேண்டுவன அருளும் நீ உன்வாய்முத்தம் அருள்க என்றார்.

( 7 ) கடிஅவிழ் நுனைக்கண்ட கப்பசிய நெட்டிலைக் கண்டல்அம் போதுமதுரக்
கள்ஊறு புன்னைமல ரும்குறவை அம்தாலி கட்டும் களச்சிறுமியர்
முடிமிசை சுமந்துவிலை கூறிட இடைக்(கு)இடை முறம் குழைய வாரிவாரி
முருகுவிரி குழல் அருண வல்லிமுலை புல்லும்எழில் மொய்ம்பன்அதி அரசன்மனையில்
வெடிபடு வரால்பட உடல்திருக நின்(று)அலையில் வீசுவலை உதயமதியும்
விர(வு)அமு(து) அளவலால் தேன்சா(று) எனச்சொலிஅம் மீன்சாறு பருகுகரும்
செடிஉடலர் இறைஅருளும் முத்தம்அருள் அம்மைஒரு செம்பவள முத்தம்அருளே
செம்புநா யகர்இடம் விரும்புநா யகிநினது செம்பவள முத்தம்அருளே.

**குறிப்புரை :** கடிஅவிழ்= மணம்வீசும். கண்டகம்= முள். கண்டல்= தாழை. போது= மலர். மதுரக்கள்= இனியதேன். குறவை= குறவைமீன். களம்= கழுத்து. இடைக்குஇடை= இடையிடையே. குழைய= உட்குழிய. முருகுவிரி= மணம்வீசும். அருண வல்லி= கடலரசன் மனைவி. புல்லும்= தழுவும். மொய்ம்பன்= பெருவலிமை யுடையவன். அதிஅரசன்= சிறந்த அரசன். வெடிபட= துள்ளிக்குதித்து வெளிப்படும். பட= அகப்படுமாறு. உடல் திருகநின்று= தமது உடல் திருகுமாறு நின்றுகொண்டு. உதய மதி= முழுநிலவு. அளவல்= கலத்தல். கரும்செடி உடலர் இறை= புலால்நாற்றம் வீசும்உடம்புடைய இறைவன்( செம்படவராய் வந்த சிவபிரான் ) முத்தம்= வீட்டின்பம். செம்பு நாயகர்= வெண்ணாவல் ஈசர். இடம்= இடது பாகம்.

**பொழிப்புரை :** மணம்வீசுவதும், நுனியில் முட்களுடையதும், வளமான நீண்ட மடல்களுடையதும் ஆகிய தாழையின் பூக்களையும்; இனிய தேன்மிக்க புன்னைமலர்களையும் தாலியாகக் கழுத்தில் கட்டிய சிறுமியர், தெருக்களில் குறவைமீன்களைக்கூடையில் தலையில் சுமந்துகொண்டு விலை கூறி விற்கும்போது, மணம்பரப்பும் கூந்தலுடைய அழகிய மனைவியின் கொங்கைகளைத்தழூவும் கடலரசனின் இல்லத்தில் இடையிடையே வாங்குவோருக்கு முறம் குழையவாரித்தர; துள்ளிக்குதித்து அலையில் வெளிப்படும் வரால்மீன்களைப் பிடிக்கத் தமது உடல் திருக நின்றுகொண்டு கடல்அலையில்வீசும் வலைப்பட்ட மீனில் முழுநிலவும் அதன்அமுதமும் கலத்தலால் அதனைத் தேன்சாறு என்றுசொல்லி அந்த மீன்சாற்றினைப் பருகும் புலால்நாற்றம் வீசும்உடம்புடைய செம்படவனாய்வந்த இறைவன் அருளும் வீட்டின்பத்தினை அருளும் தாயே! உனது செம்பவளவாயினால் முத்தம் அருள்க. வெண்ணாவலீசரின் இடப்பக்கம் விரும்பும் தலைவியே! உனது செம்பவளவாயால் முத்தம் அருள்க.

**விளக்கம் :** தகுதிவாய்ந்த உயிர்கட்கு வீட்டின்பத்தை அனுபவிக்க வழங்குகிறவன் சிவபரம்பொருளே. ஆனால் அவ்வீட்டின்ப அனுபவத்திற்கு உயிர்களைத் தகுதிப்படுத்துகுறவள் அம்மையாதலின் இதில் அம்மையை “ இறைஅருளும் முத்தம்அருள் அம்மை “ என்றார்.

( 8 ) துடிகொண்ட கொடிஇடை துவண்டுகுடி வாங்கச் சுரும்பர்பண் மிழற்றும்கரும்
சுருள்ஓதி இமயமா தேவிகச்(சு) இட்டுச் சுமந்தமுலை மந்தரத்தில்
கடிகொண்ட வெண்தரள நில(வு)ஒளி நிலாஎனக் காலும்ஒளி கிரணம்என்னக்
கருதிச் சகோரம் புகுந்தது கடுப்பஒண் கவின்நாசி மோதிஅள்ளும்
படிகொண்ட திவலைஎன முத்(து)ஒன்று தூங்கும்அப் பைங்குமிழ்த் துண்டம்ஒளிர்சண்
பகம்என நினைந்துவிழி வண்டுகடை பிறழப் பசுங்குதலை வாய்மடுத்துக்
குடிகொண்ட பால்அருவி உண்டசிறு பெண்பிள்ளை கொவ்வைவாய் முத்தம்அருளே
கொம்புவரை பம்புவன அம்பிகை விரும்பிநின் கொவ்வை வாய் முத்தம்அருளே.

**குறிப்புரை** : துடிகொண்ட= உடுக்கைஒத்த. துவண்டு= வற்றி. குடிவாங்க= உட்குழிய. சுரும்பர்= வண்டுகள். சுருள் ஓதி= சுருண்ட கூந்தல். இமயமாதேவி= இமயஅரசனாகிய இமவான் மனைவி மேனை.. முலைமந்தரம்= முலைகளாகிய மந்தரமலை. கடிகொண்ட= அழகிய. வெண்தரளம் = வெண் முத்து. நிலவு ஒளி= வெண்மையான ஒளி. நிலாக்காலும் ஒளிக்கிரணம் என= நிலவு வெளியிடும் ஒளிக்கற்றை என்று கருதி. சகோரம்= சகோரப்பறவை. புகுந்தது கடுப்ப= வந்ததுபோல். நாசி மோதி அள்ளும்படி கொண்ட திவலை= மூக்கினில் தெறித்துக் கவர்வதுபோல் விளங்கும் பால்திவலை. தூங்கும்= தொங்கும். பைங்குமிழ்த் துண்டம்= வளமான உருண்டையான துண்டினை - முத்தினை. சண்பகம்என சண்பக மலர்.என்று. கடைபிறழ= கீழ்நோக்கி வர. பசுங்குதலை= புதுமையான குதலை பேசும். வாய்மடுத்து= வாய்நிறைய. பால்அருவி உண்ட= அருவிபோன்று சுரந்த பாலுண்ட. கொம்புவரை= கொம்புடைய மலை = யானை. பம்பு= ஆரவாரிக்கும்.

**பொழிப்புரை** : உடுக்கைஒத்தும் துவண்டும் உள்வாங்கியும் உள்ள கொடி இடையும், வண்டுகள் இசை முரன்று மொய்க்கும் சுருண்ட கூந்தலும் கொண்டவளாகிய மேனையின்முலைகளாகிய மந்தரமலைக்கண் அணிந்த அழகிய வெண்மையான முத்தின் ஒளியை, நிலவு வெளியிடும் ஒளிக்கற்றை என்றுகருதி, அதனை உண்ணவிரும்பும் இயல்புடைய சகோரப்பறவை வந்துசேர்ந்ததுபோல், மூக்கில் தெறித்து அதைக்கவர்வதுபோல் விளங்கும் பாலின்திவலைபோன்ற முத்தால்ஆன புல்லாக்கு அணிகலன் தொங்க; வளமான உருண்டையான ஒளிபொருந்திய அதனைச் சண்பகமலர் என்று நினைத்துக் கருவிழியாகிய வண்டு கீழ்நோக்கிவர; புதுமையான குதலைபேசும் வாயினால் அருவிபோல் சுரக்கும் பாலினைஉண்ட சிறு பெண்பிள்ளையே! உன்கொவ்வைக்கனிபோன்ற வாயால் முத்தம் தருக. கொம்புகளுடைய மலைபோன்ற யானைகள் ஆரவாரிக்கும் ஆனைக்கா அம்பிகையே! உன்கொவ்வைக்கனிபோன்ற வாயால் முத்தம் தருக.

( 9 ) **வேறு**

வெப்பஅ னல்சினம் வைத்த தரக்கை உரித்தஅ தள்புனையா
விண்பர வப்படி மண்சுவை பெற்றக ணைப்புறன் இட்(டு)எழிலார்
தப்(பு)இல் மதிக்கலை நெக்குவி திர்த்(து)அமு தத்தைஉ குத்திடஓ
தப்புனல் வெட்கம ருத்தைஉ டுத்(து)அயில் கட்செவி யைப்பிணியாத்
துப்(பு)உறழ் பொற்சடை யைச்சுமை கட்டிஇ றுக்கிமு டித்(து)ஒளிகால்
துத்திஅ ரக்கயி(று) இட்டுவ ளைத்(து)ஒரு பொற்கிரி யைச்சுமவா
முப்புரம் முன்தெறு முத்தர்இ டத்தவள் முத்தம்அ ளித்தருளே
முத்திஅ அளித்திடும் அத்திவ னத்தவள் முத்தம்அ ளித்தருளே.

**குறிப்புரை** : வெப்ப அனல் சினம் = வெப்பம் மிக்க நெருப்புப்போன்ற சினம். தரக்கு= புலி. அதள்= தோல். விண்= வானோர். படிமண்= நிலத்து மண். சுவை பெற்ற கணை= சுவைத்த அம்பு - திருமால். புறனிட்டு= ஒதுக்கி. நெக்குவித்து= இளகச்செய்து. விதிர்த்து= சொரிந்து. ஓதப்புனல்= கடல்நீர். மருத்துஅயில்= காற்றை உட்கொள்ளும். கட்செவி= வாசுகியாகிய பாம்பு. பிணியா= வசப்படுத்தி. துப்பு உறழ்= பவளம் போன்ற. சுமைகட்டி= தொகுதியாகக் கட்டி. ஒளிகால் துத்தி அர= ஒளிரும் படப்புள்ளியுடைய பாம்பு.

வளைத்து=கட்டி. பொற்கிரியைச் சுமவா= மேருமலையச் சுமக்கச்செய்து. முன் முப்புரம் தெறு=முற்காலத்தில் முக்கோட்டைகளை யும் நீறாக்கிய. முத்தர் சிவபிரான். அத்திவனம்=ஆனைக்கா.

**பொழிப்புரை** : முற்காலத்தில்; வெப்பம்மிக்க நெருப்புப் போன்ற சினமுடைய புலியின் தோலினை உரித்து உடுத்தும். வானோர் போற்ற நிலத்துமண்ணினைச் சுவைத்ததிருமால்ஆகிய அம்பினை ஒதுக்கியும், அழகிய குற்றமில்லாத நிலவின்கலையை இளக்கிச்சொரிந்து கடல்நீர் அவமானப்பட - பொங்க - செய்தும், பவளம் போன்ற சடையைத் ஒருதொகுதியாக இறுக்கிமுடித்துகட்டிக்கொண்டு, ஒளிரும் படப்புள்ளிகள் உடையதும் காற்றை உட்கொள்வதும் ஆகிய பாம்பினைக் கயிறாக்கி பொன்மலையாகிய மேருமலையைச் சுற்றிக் கட்டி பாற்கடல் கடையச் சுமக்கச்செய்தும், முப்புரங்களை முழுதும் நீறாக்கியும் செயற்பட்ட முத்தராம் சிவபிரானின் இடப்பாகம் கொண்டவளே! முத்தம் அளித்தருள்க. முத்தியளிக்கும் ஆனைக்காவில் எழுந்தருளியவளே! முத்தம் அளித்தருள்க.

**விளக்கம்** : சினம்மிக்க புலி தாருகவனத்து முனிவர்கள் ஏவியது. திருமால் மண்தின்றது கண்ணனாகத் தோன்றியபோது. திருமாலாகிய அம்பினை ஒதுக்கிச் செயற்பட்டது முப்புர எரியின்போது. மந்தரமலையாம் மத்தினை, வாசுகியால் சுற்றிக்கட்டியது திருப்பாற்கடல் கடைந்தபோது.

( 10 ) **வேறு**

சிரபுரச்சந் ததிதழைக்க முலைகொடுத்த தலைவிமுத்தம் தருகவே
திருமகட்கும் கலைமகட்கும் எழில்சிறக்கும் இறைவிமுத்தம் தருகவே
தரணிமுற்றும் தனிதழைக்க நனிபுரக்கும் அமலைமுத்தம் தருகவே
சடைமுடித்தும் பியைவிருப்ப முடன்உயிர்த்த விமலைமுத்தம் தருகவே
மரகதப்பொன் சிமயவெற்பு நிகர்தழைக்கும் வடிவிமுத்தம் தருகவே
மழைமுகில்கண்(டு) எழுபசுத்த மடமயிற்கு நிகரள்முத்தம் தருகவே
உரகபொன்கங் கணர்இடத்து மருவுசத்தி கவுரிமுத்தம் தருகவே
உரல்அடிக்குஞ் சரவனத்தும் என(து)உளத்தும் உறைவள்முத்தம் தருகவே.

**குறிப்புரை** : சிரபுரம்= சீர்காழி. சந்ததி= பரம்பரை. முலை= முலைப்பால். எழில்= தகுதி. சடைமுடி= பிரபையுடைய. தும்பி= விநாயகர். உயிர்த்த= ஈன்ற. விமலை= மலமில்லாதவள். மரகதப்பொன் சிமயம்= பசுமையான அழகிய உச்சி. நிகர்= ஒப்ப. பசுத்த= பசிய. உரக பொன் கங்கணர்= பாம்பினை அழகிய கங்கணமாக அணிந்தவர். இடத்து மருவு= இடப்பால் பொருந்திய. உரல் அடிக் குஞ்சரம்= உரல்போன்ற கால்களுடைய யானை.

**பொழிப்புரை** : சீர்காழிக் கவுணியர் பரம்பரை தழைக்கத் தனது முலைப்பால் அருளிய தலைவியே! திருமகள் கலைமகள் இருவரினும் தகுதிசிறந்த இறைவியே! உலகம் முழுவதும் ஒப்பற்றுச் சிறக்க மிகவும்காப்பதில் மலமில்லாதவளே! பிரபையுடைய விநாயகரை விருப்புடன் ஈன்றவளே! பசுமையான அழகிய உச்சியையுடைய மலைபோல் தழைத்த வடிவினளே! மழைமேகத்தைப் பார்த்ததும் ஆடஎழும் பசிய இளமயில் போன்றவளே! பாம்பினை அழகிய கங்கணமாக அணிந்த சிவபிரானின் இடப்பாகத்தில் பொருந்தியுள்ள சத்தியே! கவுரியே! உரல்போன்ற பாதங்களுடைய யானைகள் வாழும் ஆனைக்காவிலும் எனது உள்ளத்திலும் உறைகின்றவளே! முத்தம் தருக.

**முத்தப்பருவம் முற்றிற்று**

*******************************

**வாரானைப் பருவம்**

***********************

( 1 ) செம்பொன் பிறங்கலை வலம்சூழும் அமுதவெண் திங்கள்செந் தீக்கருங்கட்
செவி அஞ்சி ஆம்பல்புக்(கு) ஒளிகால்வ தெனநின்வாய்த் தெண்ணிலா முறுவல்பூப்பக்
கம்பக் களிற்(று)உரியர் கண்சுடரில் அங்கியைக் கைத்தலை இருத்திமதியைக்

கங்கைமுடி வைத்தல்போல் வையாமை கண்டுசெங் கதிர்நினது செவிபுகுந்(து)ஓர்
கும்பத்தன் அம்சடை யிடைக்கரந் தார்நினது கொழுநர்என மொழிதல்ஏய்ப்பக்
குழைத்தோ(டு) இலங்கமணி மேகலை சிலம்பக் குழைந்(து)இளம் கொடிதளாட
அம்பொன் சிலம்(பு)அலறி முரலஉரல் அடிவனத்(து) அமர்இளம் பிடிவருகவே
அகிலாண்டம் முழுவதும் உயிர்த்தும்எழில் முதிரமுதி ராதபூங் கொடிவருகவே.

**குறிப்புரை :** வாரானை= வருகை. ஆனை - தொழிற்பெயர் விகுதி. செம்பொன் பிறங்கல்= சிறந்த பொன்மலை. வலம் சூழும்= வலம்வரும். தீ செம் கரும்= தீப்போல் சிவந்த கொடிய. கட்செவி= பாம்பு. ஆம்பல் புக்கு= யானையிடம் சரணடைந்து. ஒளிகால்வது என= தந்தமாக ஒளி வீசுகிறது என்னுமாறு. வாய்த்தெண்நிலா முறுவல் பூப்ப= வாயின்பற்கள் புன்முறுவல் பூத்து ஒளிர. கம்பக் களிற்று உரியர்= தூணில் கட்டப்பெறும் யானையின் தோலை உரித்த சிவிபிரான். கண்சுடரில்= நெற்றிக்கண் ஒளியின். அங்கி= நெருப்பு. மதி= மதித்தல். செங்கதிர்= செஞ்ஞாயிறு. கும்பத்தன்= நுதற்கண்ணர் - சிவபிரான். அம்சடை= அழகியபிரபை - அழகிய ஒளி. ஏய்ப்ப= ஒப்ப. இலங்க= விளங்க. சிலம்ப= ஒலிக்க. இளம்கொடி= இளம்கொடியாகிய இடை. தளாட= தள்ளாட. முரல= ஒலிக்க. முதிர= மேன்மேலும்மிக. முதிராத= மூப்படையாத.

**பொழிப்புரை :** சிறந்த பொன்மலையாகிய மாமேருமலையை வலமாகச்சுற்றிவரும் அமுதம் சொரியும் வெண்மையான நிலவு, தீப்போல் சிவந்த கொடிய கண்களுடைய பாம்பு தன்னை விழுங்கிவிடும் என்று அஞ்சி யானையிடம் சரணடைந்து தந்தமாக ஒளிர்வதுபோல், உனது வாய்ப்பற்கள் ஒளிரவும்; தூணில் கட்டப்பெறும் யானையின் தோலை உரித்த சிவபிரான்; தனது நெற்றிக்கண் நெருப்பைத் தனது கையில் வைத்துடன், தனது மதித்தலைக் கங்கையிடம் வைத்தஅளவு உன்னிடம் வைக்காமல், உன்னைத்தன் ஒளியுடன் சேர்த்துப் பிறர்க்குப் புலப்படாதவாறு வைத்தார் என்றும் கூறுவதுபோல் காதணியாகிய குழைவிளங்க; (அதனை உணர்ந்த) மணிகள் பதித்த மேகலை புலம்பவும், இளங்கொடிஒத்த இடைதள்ளாடவும், பொன்னாலான அழகிய சிலம்புவாய்விட்டு ஒலிக்கவும்; உரல்போன்ற பாதங்களுடைய யானைவனமாகிய ஆனைக்காவில் எழுந்தருளி இளம்பிடியாய் ஒப்பநடப்பவளே! வருக. அண்டங்கள் அனைத்தையும் ஈன்றும் வயது முதிராமல் அழகுமுதிரும் பூங்கொடியே! வருக.

**விளக்கம்:** சிவபிரான், கங்கையிடம் வைத்த மதிப்பின்அளவு உன்மேல் மதிப்பு வைத்திருந்தால் கங்கையைப் பிறர்காணச் சடையில் வைத்ததுபோல் உன்னையும் பிறர்காணுமாறு வைத்திருப்பார், ஆனால் உன்னைத் தன்பிரபையுள் மறைத்துவைத்ததால் அவர் உன்னை மதிக்கவில்லை என்று காதிலணிந்த குழை கூறியதுகேட்டு அழகியமேகலையும் சிலம்பும் ஆரவாரிக்க, இளங்கொடியாகிய இடைதள்ளாட, . ஆயினும் இதுபற்றி எண்ணாமல் ஆனக்காவில் எழுந்தருளி அருள்புரிகின்றாள் என்றார்.

**இலக்கணக்குறிப்பு :** தளாட - இடைக்குறை. பூங்கொடி - உவமையாகுபெயர். இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

( 2 ) வெஞ்சினம் உறுத்திப் பதங்கண்ஒண் கிரணவாள் வீசித்துணிக்க வீந்து
வீந்(து)எழும் இராக்குலம் இகல்(கு)அளித் திடுபாக்(கு)அவ் விரிசுடர்க்கு உறவுபூண்ட
கஞ்சமலர் முன்பணிபு முறையிடுதல் ஏய்ப்பஅவிர் கனகலோ கத்(து)அரிவைமார்
கழல்பெயர்க் கும்தொறும் அளிக்குலம் முழக்குதம் கார்அளக பாரமோதக்
குஞ்சர அதள்பரமர் கோடீர முடிகண்டு கொள்வான் விரும்பிய(து)அலால்
கோலநடை பயில்வதும் கற்பான் விரும்பிஎழில் கூர்மென் சிறைப்பவளவாய்
அஞ்ச(ம்)நின் அடிதொடரும் வண்ணஉரல் அடிவனத்(து) அமர்இளம் பிடிவருகவே
அகிலாண்டம் முழுவதும் உயிர்த்தும்எழில் முதிரமுதி ராதபூங் கொடிவருகவே.

**குறிப்புரை :** உறுத்தி= உண்டாக்கி. பதங்கண்= சூரியன். கிரணவாள்= ஒளிக்கற்றையாகிய வாளாயுதம். துணிக்க= வெட்ட. வீந்து வீந்து எழும்= செத்துச் செத்து உயிர்பெறும். இராக்குலம்= இரவுக்கூட்டம். இகல்கு அளித்திடு பாக்கு= தமக்குப்பகையிடம் கூறவேண்டி. கஞ்சமலர்= தாமரைமலர். பணிபு= பணிந்து. கனக லோகத்து= பொன்னுலகத்து. கழல் பெயர்க்கும்தொறும்= அடியெடுத்து வைக்கும்போதெல்லாம். தம்காரளக பாரம் ஒத முழக்கு ஏய்ப்ப= தமது கரிய பாரமான கூந்தலுக்குச் சொல்ல முழங்குதல் போல. குஞ்சர அதள்= யானைத்தோல். கோடீர முடி= சடை உச்சி. கண்டுகொள்வான்= காண. அலால்= அலால்= தவிர. கற்பான்= கற்க. கூர்= மிக்க. வண்ணஅஞ்சம்= அழகியஅன்னப்பறவை.

**பொழிப்புரை :** கொடியசினத்தை உண்டாக்கிக்கொண்ட சூரியன் தனது ஒளிக்கற்றையாகிய வாளாயுதத்தை வீசிவெட்ட, அதனால் செத்துச்செத்து உயிர்பெறும் இரவுக்கூட்டம், தம்நிலையைத் தமக்குப் பகையும், சூரியனுக்கு உறவும்கொண்ட தாமரை மலரின் முன்னேபோய்ப் பணிந்து முறையிடுதல்போல; ஒளிரும் பொன்னுலகமகளிர் கால் எடுத்துவைத்து நடக்குந்தோறும் வண்டின்கூட்டம் எழுந்து கரியபாரமான கூந்தலிடம் மோதும். அன்னையே! யானைத்தோல் போர்த்த சிவபிரானின் சடைஉச்சியைக் கண்டுகொள்ள விரும்பியது மட்டுமன்றி, உன்அழகுநடை கற்கவும் விரும்பிய அழகுமிக்க மென்மையான சிறகினையும் பவளம்போன்ற அலகினையுமுடைய அன்னப்பறவை உன்திருவடிகளைத் தொடர்கின்ற யானைவனமாம் ஆனைக்காவில் எழுந்தருளி அழகியஇளம் பெண்யானை ஒப்ப நடப்பவளே! வருக. அண்டங்கள் அனைத்தையும் ஈன்றும் வயது முதிராது அழகு முதிர்ந்த பூங்கொடி போன்றவளே! வருக.

**இலக்கணக்குறிப்பு** : கிரணவாள் - உருவகம். வீந்துவீந்து - அடுக்குத்தொடர். அளித்திடுபாக்கு - பாக்கு - எதிர்காலவினையெச்சம். பணிபு= செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். ஏய்ப்ப - உவமஉருபு. கொள்வான் - வான் - எதிர்கால வினையெச்சம். கற்பான் - பான் - எதிர்கால வினையெச்சம்.

( 3 ) எண்ணரிய செஞ்சடை முடங்கல் கலாநிலாவொ(டு) எறுழிவெண் கோ(டு)இணைப்ப
எழும்வெள்ளி முழுமதி எனக்கொடிய நெட்டரா எட்டிக் கழுத்தைநீட்டி
வண்ணம்மிகு நின்சாயல் கண்(டு)உளம் நடுங்கிமரை மலரோன்த லைப்புகுங்கால்
வாலின்அடி யுண்டசிற் றிடைஉடைத் தண்ணுமைவிண் மண்செவிடு படஇரட்டத்
தண்அமுத மதிமான் வெருண்டிட மருண்டுகைத் தனிமான் எழுந்துதுள்ளத்
தழைஅறு(கு) எடுத்துநீ வாஎனும்முன் நின்விழி தனைக்கண்(டு) ஒடுங்கஎனைஆள்
அண்ணல்இடம் ஒருவியப்(பு) அயரும்உரல் அடிவனத்து அமர்இளம் பிடிவருகவே
அகிலாண்டம் முழுவதும் உயிர்த்தும்எழில் முதிரமுதி ராதபூங் கொடிவருகவே.

**குறிப்புரை :** கலைமுடங்கல் நிலா= பிறைநிலா. எறுழிவெண்கோடு= பன்றியின் வெண்கொம்பு. இணைப்ப= சேர. வெள்ளி முழுமதி= வெண்மையான முழுநிலா. மரைமலரோன்= நான்முகன் சிற்றிடையுடைத் தண்ணுமை= ஒடுங்கிய நடுவிடமுடைய உடுக்கை. இரட்ட= ஒலிக்க. மதிமான்= நிலவில் உள்ளகளங்கமாகிய மான். கைத்தனிமான்= கையில் ஏந்திய ஒருமான். தழை அறுகு= வளமான அறுகம்புல். ஒடுங்க= ஒளிந்துகொள்ள. அண்ணல்= சிவபிரான். வியப்பு அயரும்= மேலான - வியக்கத்தக்க செயலில் ஈடுபடும்.

**பொழிப்புரை :** எண்ணற்ற செஞ்சடையில் பிறை நிலாவுடன் காட்டுப்பன்றியின் வெண்மையான கொம்பும்ஓருசேர இருப்பதுகண்டு, அதனை வெண்ணிறத்துடன்எழும் முழுநிலாஎன்று கருதி விழுங்கக் கொடிய நீண்ட பாம்புதலையை நீட்டியபோது, மயில்போன்ற உனது அழகிய சாயலைக்கண்டு மனம் நடுங்கி, தாமரையில் இருக்கும் நான்முகனைச் சரணடையும்போது, அப்பாம்பின் வாலினால் அடியுண்ட உடுக்கை விண்ணும் மண்ணும் செவிடுபட முழங்க, அதுகேட்ட நிலவில் உள்ள களங்கமாகிய மான் அஞ்ச, கையில் ஏந்திய மான்மருண்டு துள்ள, நீ துள்ளியமானின் அச்சம்தவிர்க்க அறுகம்புல்லினை எடுத்து நீட்ட, மருண்டமான்போன்ற உனதுவிழியைக்கண்டதும் புல்தின்ன வராமல் அதுஒளிந்துகொள்ள,இதனால் எனைஆளும் சிவைபிரானிடம் மேலன வியப்புத்தோன்ற; உரல்போன்ற கால்களுடைய ஆனைக்காவில்

எழுந்தருளியுள்ள இளம்பிடியே! வருக. அண்டங்கள் அனைத்தையும் ஈன்றும் அழகுமுதிர்ந்தும் வயது முதிராத பூங்கொடி போன்றவளே வருக.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் இயைபு உருவகவணி.

( 4 ) கடியஇள ஞாயிறு கடுப்பஅவிர் மணிஅணிக் கற்றைஒளி சுற்றவற்றாக்
கண்கடல் பிறந்தகரு ணைப்புணரி நீத்தம்எழு கடல்மடை திறந்த(து)ஏய்ப்பக்
கொடிஅன மருங்குல்அரு கித்துவண்டு எய்த்துநனி குடிவாங்கி ஏங்கவீங்கும்
கொங்கைகள் சுமந்தமட வார்தனி வர்ஆர்உயிர்க் கொழுநர்விட்(டு) என்பதால்வெண்
பொடிவிரவு செம்புய மலைக்கண் கொலைத்தொழில் பொங்குவெங் காரிபில்கும்
புழைவாள் எயிற்(று)அரவு பூண்டமுக் கண்திரி புராந்தகக் கொழுநர்துணைகொண்(டு)
அடியர்மிடி தீர்வரும் அமுதம்உரல் அடிவனத்(து) அமர்இளம் பிடிவருகவே
அகிலாண்டம் முழுவதும் உயிர்த்தும்எழில் முதிரமுதி ராதபூங் கொடிவருகவே.

**குறிப்புரை** : கடிய= விரைந்து செல்லும். கடுப்ப= ஒப்ப. மணி அணிக்கற்றை= மணிகள் பதித்த அணிகளின் கொத்து. ஒளி சுற்ற= ஒளி சூழ. கண்கடல்= கண்ஆகிய கடல். புணரி நீத்தம்= கடல்நீர். ஏய்ப்ப= ஒப்ப. அன= அன்ன. அருகி= மெலிந்து. எய்த்து= இளைத்து. குடிவாங்கி= உட்குழிந்து. ஆர் உயிர்க்கொழுநர் விட்டுத் தனிவர்= சிறந்த உயிர்போன்ற கணவரைவிட்டுத் தனித்திருப்பர். வெண்பொடி= திருநீறு. செம் புயமலை= செந்நிறத்துத் தோள்களாகிய மலை. பொங்கு= மிக்க. வெங்காரி பில்கும்= கொடியநஞ்சினைச் சொரியும். திரிபுராந்தகக் கொழுநர்= முப்புரம் எரித்த கணவர். மிடி= வறுமை. அமுதம்= அமுதமே.

**பொழிப்புரை** : கொடிபோன்ற இடுப்புமெலிந்து துவண்டு, பருத்த முலைகள்சுமந்த மகளிர் தமதுசிறந்த உயிர்போன்ற கணவரைப் பிரிந்து தனித்து இருப்பர், அவ்வாறு இருத்தல் தக்கதன்று என்று கருதி; விரைந்துசெல்லும் இளஞாயிற்று ஒளி ஒப்ப, மணிகள் பதித்த கொத்தான அணிகளின் ஒளி சூழ, கருணைகடல் நீர்வற்றாத கண்ணாகிய ஏழுகடல்நீரும் மடைதிறந்தது போல் அருள்பொழிய; வெண்மையான திருநீறு பூசப்பெற்றதும், செம்மைநிறத்து மலைபோன்றதும் ஆகிய தோள்களில், கொல்லும் தன்மையுடைய மிக்கநஞ்சினைச் சொரியும் துளைகொண்ட கூரிய பற்களுடைய நாகத்தை மாலையாக அணிந்தவரும், முக்கண்ணரும், முப்புரம் எரிசெய்தவருமாகிய கணவரின் துணையால் அடியவர்களின் அனைத்துவறுமையும் தீரும்பொருட்டு வந்த அமுதமே! உரல்போன்ற பாதமுடைய யானைகள் வாழும் ஆனைகாவில் எழுந்தருளியுள்ளவளே! இளம்பெண்யானையின் நடையுடையவளே! வருக. அனைத்து அண்டங்களையும் ஈன்றும் வயது முதிராது அழகுமுதிர்ந்த மென்மையான கொடிஒத்தளே! வருக.

**விளக்கம்** : மனிதர்க்கு மட்டுமன்றி விலங்குகளுக்கும் இடுப்பு அருகித் துவண்டு எய்த்துக் குடிவாங்கிஇருத்தல் உடல்நலம் குறிப்பது என்பர் உடல் இயங்குஇயலார். இது மகளிர்க்குச் சிறப்பாதலின் கூறினார்.

**இலக்கணக்குறிப்பு** : கண்கடல், கருணைப்புணரி, புயமலை - உருவகங்கள். எழுகடல் மடை திறந்தது ஏய்ப்ப வரு அமுதம் - உவமையணி

( 5 ) கடக்குஞ்ச ரம்கடவும் ஒலியும்இளை யோர்கடவு கவன்அவாம் பரிஅமலையும்
கரியஇருள் சரியச் சிவந்(து)உதயம் எழும்எழு கடும்பரிக் கவரியேபோல்
நடக்கும் தடந்தேர் உருட்(டு)அரவ மும்கடி நலம்கெழு மியத்தமரமும்
நளிர்முத்(து) அலைக்கடலும் மிடலுடைக் கருமஞ்சு நாணத் தடிக்கும்வேலை
வடக்குங் குமக்கொங்கை மாதர்எழி லான்நறு மலர்ப்பகழி யானைவென்ற
மைந்தரோ(டு) ஊடிச் சினந்(து)ஒளிர் மணிப்பணி கள்மறு(கு) எறியஎழுமோதையே
அடக்கும் திருப்பொடி வளம்கொள்உரல் அடிவனத்(து) அமர்இளம் பிடிவருகவே
அகிலாண்டம் முழுவதும் உயிர்த்தும்எழில் முதிரமுதி ராதபூங் கொடிவருகவே.

**குறிப்புரை** : கடக்குஞ்சரம்= மதயானை. கடவும்= செலுத்தும். இளையோர்= வீரர்கள். கவனவாம் பரி= விரைந்துஓடும் குதிரை. அமலை= ஆரவாரம். கடும் எழுபரி= விரையும் ஏழு குதிரைகள். கவரி= தேர். கடிநலம் கெழுமிய= திருமணத்தால் பொருந்திய. தமரம்= ஆரவாரம். அலைக்கடல்= அலைக்கும் கடல்.

மிடல்உடைக் கருமஞ்சு= ஆற்றல் மிக்க கரிய மேகம். நாண= அஞ்ச. தடிக்கும் வேலை= மின்னும் பொழுது - நேரம். வடக் குங்குமம்= மணிவடமும் குங்குமமும். எழிலான்= அழகால். மலர்ப் பகழியானை வென்ற மைந்தரொடு வடக் குங்குமக்கொங்கை மாதர் எழிலான் ஊடி - என்று கூட்டுக. மலர்ப்பகழியான்= மலரம்பு ஏந்திய மன்மதன். மணிப்பணிகள்= மணிகள் பதித்த அணிகலன்கள். மறுகு= தெரு. ஓதையே= ஒலியே. அடக்கும்= வெல்லும். திருப்பொடி வளம்= திருநீற்று வளம்.

**பொழிப்புரை :** மதயானையைச் செலுத்தும் ஒலியும், வீரர்கள் விரைந்து ஓடும்குதிரைகளைச் செலுத்தும் ஆரவாரமும், கருமையான இருள் சிறிதுசிறிதாகஓட வானம் சிவந்து சூரியன் எழுந்துவரும் ஏழு விரைந்த குதிரைகள் இழுத்துவரும் தேர்போல் பெரியதேரினை உருட்டிவரும் ஆரவாரமும், திருமணத்தால் பொருந்திய ஆரவாரமும், குளிர்ந்த முத்துகளை அலைக்கும் கடல்ஒலியும் ஆகியவற்றை; ஆற்றல் மிக்க கரிய மேகம் அஞ்ச மின்னும்பொழுதும்; நறுமலர்களாகிய ஆகிய அம்புகளையுடைய மன்மதனை வென்ற தமது கணவருடன் ஊடல்கொண்டவர்களாய், மணிகள்பதித்த அணிகலன் அணிந்து குங்குமம்பூசிய கொங்கைகளுடைய மகளிர் அணிகலன்களைத் தெருவில்எறியும் ஓசையானது விஞ்சி அடக்கக்கூடியதும்; திருநீற்று வளம்கொண்டுவிளங்குவதும் ஆகிய உரல்போன்ற பாதமுடைய யானைகள் வாழும் ஆனைகாவில் எழுந்தருளியவளே!, இளம்பெண்யானையின் நடையுடையவளே! வருக. அனைத்து அண்டங்களையும் ஈன்றும் வயது முதிராது அழகுமுதிர்ந்த மென்மையான கொடிஒத்தவளே! வருக.

**விளக்கம் :** ஊடியமகளிர், தெருவில் எறிந்த அணிகலன்களின் ஓசை, மதயானைகளக்கடவும் ஒலிமுதல் அலைகடல் அலைக்கும்ஒலி ஈறானவற்றை அடக்கும் என்றார்.

**இலக்கணக்குறிப்பு :** எழுகடும்பரிக் கவரி..........தடந்தேர் - உவமையணி.

( 6 ) **வேறு**

பொன்னைப் புணரும் அகன்மார்பப் புயலும் புயல்தோய் கடலுலகம்
    பூத்த சுருதி நாத்தவனும் போற்றி போற்றி எனத்தோற்றி
மின்னைப் பொருவு நுசுப்(பு)ஒசிய விலங்கல் பொருவு முலைசுமந்த
    மின்னார் மாயக் கடல்வீழ்ந்து வெறும்பொய் உடலை வேட்(டு)உவந்த
என்னைத் தனது வசத்தாக்கி இறப்புப் பிறப்(பு)என் கடல்வீழா(து)
    எடுத்துத் தடுத்தாட் கொண்டவண்டர் இரைக்கும் இதழி இலம்பகத்தோன்
மன்னைத் தனது வசத்(து)ஆக்கும் மயிலே வருக வருகவே
    மதமா தங்க வனத்துமட மானே வருக வருகவே.

**குறிப்புரை :** பொன்= திருமகள். மார்பப்புயல்= மார்பினையுடைய மேகவண்ணத்திருமால். புயல்தோய்= மேகம் படியும். பூத்த= படைத்த. சுருதி நாத்தவன்= வேதம் ஓதும் நான்முகன். தோற்றி= வணங்க. பொருவு= ஒத்த. ஒசிய= துவள. விலங்கல்= மலை. மின்னார்= மின்னல் ஒத்த மகளிர். வேட்டு= விரும்பி. வண்டர்= வண்டுகள். இலம்பகத்தோன்= மாலை சூடிய சிவபிரான். மன்னை= மன்னனை. மத மாதங்கம்= மதயானை.

**பொழிப்புரை :** திருமகளைக்கூடும் அகன்ற மார்பினையுடைய மேகநிறத்துத் திருமாலும், மேகம் படியும் கடல் சூழ்ந்த இவ்வுலகைப் படைத்த நான்முகனும் போற்றி போற்றி என்று வணங்க; அவர்கட்கு அருளாது, மின்னலை ஒத்த இடுப்புத்தளர மலைபோன்ற் முலைகளுடைய மகளிரின் வஞ்சனையாகிய கடலில் வீழ்ந்து, பொய்யான இவ்வுடலை மெய்யானது என்று விரும்பிமகிழும் என்னைத் தன்வசப்படுத்தி, இறப்புபிறப்பு ஆகிய கடலில் வீழாமல் தடுத்து ஆட்கொண்டவராகிய வண்டுகள் ஆரவாரிக்கும் கொன்றைமாலை அணிந்த பேரரசன் ஆகியசிவபிரானைத் தன்வசம் ஆக்கிய மயிலே! வருக வருக. மத யானைகள் வாழும் ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள என்றும் இளமையான மயிலே! வருக வருக.

**விளக்கம் :** இச்செய்யுளின் முதலடியில், அதிகாரமலத்தராகிய திருமால் நான்முகன் ஆகியோர் வேண்டவும் அவர்கட்கு அருளாமல், என்னை எடுத்துத் தடுத்து ஆட்கொண்டான் என்றசெய்தி; " வேண்டும் அயன் மாற்கு அரியோய் நீ, வேண்டி என்னைப்பணிகொண்டாய் " என்ற திருவாசகம் பா. 501 ஐ நினைப்பிக்கின்றது

( 7 ) பருத்தார மும்குங் குமச்சேறும் பம்ப இணங்கிச் சுணங்(கு)அரும்பப்
    பணைத்துத் தடித்துப் புடைத்தமுலைப் பாரம் சுமந்த கொடிஅசையத்
தருத்தாழ் உலகு முதலான சகல உலகும் சராசரமும்

சற்றே அசைய அசை(வு)இல்லான் தானும் அசையச் சுரர்க்(கு)அமுதம்
அருத்தா விடம்உண்(டு) உவந்தஐயன் கரம்தொட் டிடச்சிலைமேல்
அலரி புரையும் சிலம்(பு)அவிர அலர்ந்த அடியேன் முடிக்(கு)ஏறு
மருத்தா மரைமென் மலர்பெயர்த்து மயிலே வருக வருகவே
மதமா தங்க வனத்துமட மானே வருக வருகவே.

**குறிப்புரை :** பரு தாரமும்= பருத்த முத்தும். பம்ப= மூட. இணங்கி= உடன்பட்டு. பணைத்து= செழித்து. கொடி= கொடி இடை. தருத்தாழ் உலகு= கற்பகமரம் செழித்த தேவருலகம். சராசரம்= சரம் அசரம்= இயங்குதிணை நிலைத்திணை - இடம்பெயர்வன, இடம்பெயரமாட்டாதன. அசைவு இலான்= நிலைகுலையாதவன் - சிவபிரான். அசைய= மனம்சலனப்பட. அருத்தா= உண்பித்து. ஐயன்= சிவபிரான். சிலைமேல்= அம்மியின்மேல். அலரிபுரையும்= சூரியன்போல் ஒளிரும். சிலம்பு அவிர= சிலம்புகள் ஒளிர. அலர்ந்த= மனம் மலர்ந்த. முடிக்கு ஏறு= தலையில் சூட்டுதற்குரிய. மரு= நறுமணம். பெயர்த்து= எடுத்துவைத்து. மத மாதங்கம்= மதம்மிக்க யானை.

**பொழிப்புரை :** பருத்த முத்தாரமும், குங்குமச்சேறும் மூட அதற்கு இணங்கி, சுணங்கு தோன்றச் செழித்துப் பருத்துப் புடைத்தமுலையின் பாரத்தைச் சுமந்துகொண்டிருக்கும் கொடி இடை அசையவும், கற்பகமரம் செழித்த தேவருலகம் முதலான அனைத்து உலகங்களும் அசையவும், இடம்பெயர்வனவும் இடம்பெயராதனவும் சற்று அசையவும், தன்னிலையில் குலையாத சிவபிரான் உன்அழகுகண்டு சலனப்படவும், தேவர்கள் அமுதம் உண்ணத் தான் நஞ்சு உண்டு மகிழ்ந்த அவன் உனது கையினைப் பற்ற, சூரியனை ஒத்து ஒளிரும் சிலம்பணிந்தததும் அம்மிக்கல்மேல் வைத்ததும், என்தலையில் சூட்டிய மணம்மிக்க தாமரைமலர்போன்று மென்மையானதுமாகிய உனது திருவடியை எடுத்துவைத்து - நடந்து மயில்போன்றவளே! வருக. மதம்மிக்க யானைகள் வாழும் ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள இளம்மான்போன்றவளே! வருக வருக.

**விளக்கம் :** திருமணத்தில் மணமகன் மணமகளின் கையினைப்பற்றலும், குலையாத கற்புநிலை உணர்த்த அவள் காலினை அம்மியின்மேல் எடுத்துவைத்தலும் ஆகிய மரபுகள் கூறினார்.

**இலக்கணக்குறிப்பு :** கொடி - உவமையாகுபெயர். இல்லான் - வினையாலணையும் பெயர். மயிலே , மானே - உவமைஆகுபெயர்கள்.

( 8 ) வேலை அலம்பக் கரும்சுரும்பர் விளரி அலம்பி முளரிவிட்டு
மென்பூங் குமுத வீஅலம்ப விரிஅம் சிறகர்க் குரு(கு)இனங்கள்
காலை அலம்பப் பொலிகதிர்மேல் கடல்போய் விழவெள் ளியநிலவுக்
கற்றை பரப்பும் மதியைமுகக் கமலம் காட்டி வாட்டியபூஞ்
சோலை அலம்பும் பைங்கிளியே சுகம்ஆர் இன்பப் பெருங்கடலே
சொல்லற்(கு) அரிய மறைப்பொருளே துளிக்கும் பிரசத் துளபநறு
மாலை அலம்பும் குயிற்(கு)இளைய மயிலே வருக வருகவே
மதமா தங்க வனத்துமட மானே வருக வருகவே.

**கூட்டுமுறை :** அம் சிறகர்விரி குருகு இனங்கள் காலை அலம்பப், பொலிகதிர் மேல்கடல்போய்விழ, வெள்ளிய நிலவுக்கற்றை வேலை அலம்ப........ என்றுதொடங்குக. சிறகர்= சிறகு. குருகு இனங்கள்= பறவைக்கூட்டங்கள். காலை அலம்ப= காலையில் குரல்கொடுக்க. பொலி= ஒளிவிளங்கும். வேலை அலம்ப= கடல் ஆரவாரிக்க. சுரும்பர்= வண்டுகள். விளரி அலம்பி= விளரிப்பண்பாடி. முளரி விட்டு= தாமரை மலரை விட்டு. குமுத வீ அலம்ப= குமுதமலரில் மொய்த்து ஒலிக்க. வெள்ளிய நிலவுக்கற்றை= வெண்மையான ஒளிக்கற்றை. மதியை = நிலவை. முகக்கமலம் காட்டி= முகத்தாமரையைக் காட்டி. வாட்டிய= வருத்திய. பூஞ்சோலை அலம்பும்= மலர்ச்சோலையில் மிழற்றும். பிரசம் துளிக்கும்= தேன் துளிக்கும். அலம்பும்= அசையும். குயில்= மேகநிறத்துத் திருமால்.

**பொழிப்புரை :** அழகிய சிறகுகளை விரித்த பறவைஇனங்கள் காலையில் குரல் கொடுக்க ஒளிரும் சூரியன் மேலெழுந்து ஓடி மேலைக்கடலில் விழ; தோன்றும் வெண்மையான ஒளிக்கற்றையைப்பரப்பும் நிலவைத்; தனது மலர்ந்த முகமாகிய தாமரையைக்காட்டி வாட்டிய பூஞ்சோலையில் மிழற்றும் பசிய கிளியே! நன்மைபொருந்திய இன்பம்தரும் பெருங்கடலே! சொல்லுதற்கு இயலாத மறையின் பொருளே! தேன் துளிப்பதும் மணம்பொருந்தியதுமாகிய துளசிமாலை அசையும் மேகவண்ணனாகிய திருமாலுக்குத்

தங்கையாகிய மயில்போன்றவளே! வருக வருக. மதம்மிக்க யானைகள் வாழும் ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள இளமான்போன்றவளே! வருக வருக.

( 9 ) ஒன்றும் திமிரக் கருள்அறஎன் உள்ளத்(து) ஒளிரும் ஒளிவிளக்கே
உருகிப் பெருகும் கண்ணீர்என் உததி அழுந்திப் பதைபதைத்துக்
கன்றும் அடியார் உளத்(து)இன்பம் கனியக் கனியும் மெய்ஞ்ஞானக்
கனியே நனியா நவரசமும் கலந்து காட்டும் செழுந்தேனே
என்று புரையும் அணிப்பொறைகொண்(டு) எழும்பூங் கொம்பே இரைத்(து)எடுக்கும்
இன்பப் பெருக்கே முருக்(கு)அவிர்மெல் இதழ்ப்பூங் குயிலே இமைக்கும்அம்பொன்
மன்றுள் நடன்அத் தனைஆட்டு மயிலே வருக வருகவே
மதமா தங்க வனத்துமட மானே வருக வருகவே.

**குறிப்புரை** : ஒன்றும்= உயிரில் பொருந்திய. திமிரக் கருள்= இருள் ஆகிய குற்றம். என் உததி= என்னும் கடல். கன்றும்= மனம் வாடும். நனியா= மிகுதியாக. நவரசம்= புதுச்சுவை. என்று புரையும்= சூரியனை ஒத்த. பொறைகொண்டு= அணிந்து. இரைத்து= மிகுதியாக. எடுக்கும்= தோன்றும். முருக்கு அவிர்= முருக்கமலர் போல்ஒளிரும். இமைக்கும்= ஒளிரும். நடன் அத்தன்= திருக்கூத்து இயற்றும் சிவன்.

**பொழிப்புரை** : உயிரில் பொருந்திய இருள்ஆகிய - ஆணவமாகிய குற்றம் விட, உள்ளத்தில் ஒளிவீசும் ஒளிவிளக்கே! மனம்உருகிப்பெருகும் கண்ணீர் என்கிற கடலில் அழுந்தி, பதைபதைத்து மனம்வாடும் அடியவரின் மனத்தில் இன்பம் முதிரமுதிரும் மெய்ஞானமாகிய கனியே! மிகுதியாகப் புதுச்சுவை கலந்துதரும் செழுமையானதேனே! ஞாயிற்றை ஒத்த அணிகலன்கள் மிகுதியாக அணிந்துவரும் மென்மையான கொம்பே! மிகுதியாகத்தோன்றும் இன்பபெருக்கே! முருக்கமலர்போல் ஒளிரும் இதழுடைய அழகிய குயிலே! ஒளிரும் அழகிய பொன்னம்பலத்தில் திருக்கூத்தியற்றும் சிவபிரானை ஆட்டும்மயில் போன்றவளே! வருக வருக. மதம்மிக்க யானைகள் வாழும் ஆனக்காவில் எழுந்தருளியுள்ள இளமான்போன்றவளே! வருக வருக.

( 10 ) பொன்னே வருக மூவுலகும் பூத்தாய் வருக நாயேனைப்
புரந்தாய் வருக வழுதியர்கோன் புதல்வீ வருக முகிற்(கு)இளைய
மின்னே வருக மெய்ஞ்ஞான விளக்கே வருக மறைநான்கின்
விரிவே வருக பேரின்ப விளைவே வருக மிகும்கருணை
அன்னே வருக அகம்நெகுவார்க்(கு) அணியாய் வருக அலர்மடவார்க்(கு)
அரசே வருக உரைப்பரும்சீர் அம்மே வருக அழல்கரத்து
மன்ஏர் உடலம் பகிர்ந்தஇள மயிலே வருக வருகவே
மதமா தங்க வனத்துமட மானேவருக வருகவே.

**குறிப்புரை** : பூத்தாய்= ஈன்றவளே. முகிற்கு= மேகம்போன்ற திருமாலுக்கு. அணியாய்= அணிகலனாக விளங்குகிறவளே. அலர்மடவார்= தாமரைகளில் இருக்கும் திருமகள் கலைமகள். அரசே= தலைவியே. மன்= அரசன் - சிவபிரான். ஏர் உடலம்= அழகிய திருமேனி. பகிர்ந்த= பாதிகொண்ட.

**பொழிப்புரை** : பொன்னே! மூன்று உலகங்களையும் ஈன்றவளே! நாய்போன்ற கீழான என்னைக் காத்தவளே! பாண்டியமன்னனின் மகளே! மேகவண்ணத் திருமாலுக்குத் தங்கையாய் மின்னலாய் விளங்குகின்றவளே! மெய்ஞ்ஞானம் அருளும் விளக்கே! பேரின்பத்தின் விளைவே! மிக்க கருணையுடைய தாயே! மனம் உருகும் அடியவர்க்கு அணிகலனாக விளங்குகிறவளே! திருமகள் கலைமகள் இருவர்க்கும் தலைவியே! சொல்லுதற்கரிய சிறப்புடைய தாயே! தீயினைக்கையில் ஏந்திய அரசனாகிய சிவபிரானின் அழகிய திருமேனியில் பாதிகொண்டவளே! இளைய மயில்போன்றவளே! மதம்மிக்க யானைகள் வாழும் ஆனக்காவில் எழுந்தருளியுள்ள இளமான்போன்றவளே! வருக வருக.

**வாரானைப் பருவம் முற்றிற்று.**

****************************************

**அம்புலிப் பருவம்**

********************

( 1 ) புன்னைவீ ஆர்தரு நெடுங்கோட்டு மோதிப் பொரும்கடல் உதித்தலானும்

புன்சிறு மதிச்சிறு விதிக்(கு)உறவு பூண்டுபின் போதப் பகைத்தலானும்
பின்னைவாழ் செந்தாம ரைக்கோயில் சாயஒளி பெறுமுகம் காட்டலானும்
பெட்பின்இம மாதிரம் தவழவர லானும்வெம் பேய்க்கூத்(து) உவந்தபெருமான்
மின்னைஏய் செஞ்சடை முடிப்பொங்கு கங்கைமகள் வெருவர உழக்கலானும்
வேம்பர்கள் குலம்புகழ வருதலா னும்குலவி விளையாட நின்னைஎங்கள்
அன்னைவா என்றனள் தனக்(கு)ஒப்(பு) எனக்கருதி அம்புலீ ஆடவாவே
அம்புவனம் மும்மைதரு சம்புவன அம்மையுடன் அம்புலீ ஆடவாவே.

**சாமம் - சமாதானமாகக் கூறி அழைத்தல் : இதுவும் அடுத்த செய்யுளும் நிலவுக்கும் அம்மைக்கும் ஒத்ததன்மை கூறி விளையாட அழைத்தல் :**

**குறிப்புரை : நிலவுக்கு** : புன்னைவீ ஆர்தரு நெடுங்கோட்டு மோதிப் பொரும் கடல் உதித்தலான்= மலர்கள் பொருந்திய புன்னைமரங்களுடைய உயரமான மலையில் மோதிப்பொரும் கடலில் உதிப்பதால். சிறுமதி= சின்னபுத்தி. சிறுவிதிக்கு உறவு பூண்டு= தட்சன் மகள்களை மணந்துகொண்டு மருமகன் என்ற உறவுகொண்டு. பின்போத= பின்னாளில். பின்னை= திருமகள். சாய= பொலிவுகுன்ற. பெட்பின்= அன்புடன். இமமாதிரம்= இமயமலையுடைய உலகு. தவழ வரலான்= ஊர்ந்து வருதலால். பேய்க்கூத்து= வெறிகொண்ட கூத்து. பெருமான்= சிவபிரான். மின் ஏய்= மின்னல் போன்ற. உழக்கல்= மிதித்தல். வேம்பர் குலம்= பாண்டியர் குலம். அம் மும்மை புவனம்= அழகிய மூவுலகங்கள். தரு= ஈன்ற.

**பொழிப்புரை : நிலவுக்கு** : மலர்கள் பொருந்திய புன்னை மரங்களுடைய உயரமான மலையுடன் மோதிப்போரிடும் அலைகளுடைய கடலில் உதிப்பதால்; அற்பமான சிறுபுத்தியுடைய தட்சனுக்கு மருகன் ஆகியும் பின்னாளில் அவ்உறவுக்குப் பகைகொண்டதால்; திருமகள் வாழும் செந்தாமரையாகிய கோயில் கூம்ப - அழகுகெடத் தோன்றுவதால்; இமயமலையுடைய இவ்வுலகை அன்புடன் ஊர்ந்து சுற்றி வருதலால்; வெறிகொண்ட கூத்தினை விரும்பும் சிவபிரானின் மின்னல் போன்ற செஞ்சடைமுடியில் கங்கையாகியபெண்ணுக்குமேல் தோன்றி அவளை மிதிப்பதால்; பாண்டியர் குலம்புகழ வருவதால்;

**குறிப்புரை : அம்மைக்கு:** புன்னைவீ ஆர்தரு நெடுங்கோட்டு உதித்தலான்= புன்னைமலர்கள் நிறைந்த உயரமான மலையில் - இமயத்தில் தோன்றியதால். கடல் மோதிப்பொரும் புன்சிறு மதி= மிகவும் மாறுபட்டுப் பொருந்திய அற்பமான சின்னபுத்தி. சிறுவிதிக்கு உறவு பூண்டு= தட்சனுக்கு மகள் என்ற உறவுடன் வாழ்ந்து. பின் போத= பிறகு (அவ்வுறவு) அழிய. பின்னை= திருமகள். சாய= தோற்க. பெட்பு= அன்பு. இமமாதிரம் தவழ= இமயமலையில் பார்வதியாகத் தோன்றித் தவழ. வெருவர உழக்கல்= அஞ்ச வெல்லுதல்.

**பொழிப்புரை : அம்மைக்கு :** புன்னைமலர்கள் நிறைந்த உயரமான இமயத்தில்தோன்றியதால்; மிகவும் மாறுபட்டுப் பொருந்திய அற்பமான சின்னபுத்தியுடைய தக்கனுக்குமகள் என்ற உறவுஇருந்தும், பிறகு அவ்வுறவு அழியப் பகைகொண்டதால்; திருமகள் வாழும் தாமரையாகிய சிறந்தவீடு தோற்குமாறு தன்முகம்காட்டுவதால்; அன்புடன் இமயமலைக்கண் இமவான் மகளாகத்தோன்றித் தவழ்நததால்; வெறிகொண்ட கூத்தினை விரும்பும் சிவபிரானின் மின்னலை ஒக்கும் சடைமுடியில் பொங்குகிற கங்கையாகியபெண் அஞ்சுமாறு அவளை வெல்லுதலால்; பாண்டியர்குலம் புகழத் தடாதகைப்பிராட்டியாக வந்ததால்;

**நிலவை வேண்டுதல் :** உன்னைத் தனக்குச் சமம் என்றுநினைத்து, எங்கள் தாய் விளையாடவா என்று அழைத்தாள். எனவே அம்புலியே! இவளுடன் விளையாடவா. மூவுலகங்களையும் ஈன்றவளாம்இந்த வெண்ணாவல்வனத்து இத்தாயுடன் அம்புலியே! விளையாடவா.

( 2 ) தும்பிஉரி போர்த்தவர் உடல்பாதி கொள்ளலால் துள்ளுமீன் ஆதரித்துத்
தோன்றலால் அத்திரி தவத்தில் பிறத்தலால் துகள்தீர் குணம்பொலிதலால்
வெம்பிவரு செங்கதிர் கரந்திடப் பூண்ஒளி விரித்தலால் குமுறுசங்க
மேகத்து டன்தோன்றி வருதலால் குமுதவாய் விரியவெண் ணகைகாட்டலால்
பம்பிய சுரர்க்(கு)அமு(து) அளித்தலால் வெள்ளிப் பரூஉமுத்(து) உயிர்த்தலால்நூல்
பகர்அறிஞன் என்சேய் அளித்தலால் தண்ணளி பயத்தலால் கலைநிலாஎம்
அம்பிகை நினக்குநிகர் ஆகா(து) இராள்குலவி அம்புலீ ஆடவாவே
அம்புவனம் மும்மைதரு சம்புவன அம்மையுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை : நிலவுக்கு ;** தும்பிஉரி= யானைத்தோல். பாதி= பங்கு. துள்ளுமீன்= ஒளிரும்விண்மீன். அத்திரி= அத்திரி முனிவர். துகள்தீர்= குற்றமற்ற. வெம்பி= சினந்து. செங்கதிர்= செஞ்ஞாயிறு. கரந்திட= மறைய. பூண்= பூண்ட. குமுறு சங்கம்= முழங்கும் அழகிய. வாய்விரிய= மலர. வெண்ணகை= வெண்மையான ஒளி. பம்பிய= ஒளிந்த. சுரர்= தேவர். வெள்ளிப் பரூஉ முத்து= வெண்மையான் பருத்த முத்து. உயிர்த்தல்= ஈனல். என்சேய்= என்கிற மகன் - புதன். தண் அளி= இன்பம்தரும் குளிர்ச்சி. குலவி= பேசிமகிழ்ந்து.

**பொழிப்புரை : நிலவுக்கு :** யானைத்தோல் போர்த்த சிவபிரானின் திருமேனியில் பங்குகொள்வதால்; ஒளிரும் விண்மீன்களிடம் அன்புகாட்டி அவற்றுடன் விளங்குவதால்; அத்திரி முனிவரின் தவத்தால் அநுசூயைக்குப் பிறந்ததால்; குற்றமற்ற குணங்களுடன் விளங்குவதால்; சினத்துடன் வரும் செஞ்ஞாயிறு மறைய, தான்பூண்ட ஒளியைப் பரப்புவதால்; முழங்கும் அழகிய மேகத்துடனெழுந்து வருவதால்; குமுதமலர் மலரத் தனது வெண்மையான ஒளியைக்காட்டுவதால்; ஒளிந்த தேவர்களுக்கு உணவு வழங்குவதால்; வெண்மையான பருத்த முத்துகளை ஈனுவதால்; நூல்கள் வல்ல அறிஞனாகிய மகனாம் புதனை அளித்ததால்; இன்பம்தரும் குளிர்ச்சியை வழங்குவதால்.

**விளக்கம் :** முத்துப்பிறக்கும் இடங்களாக மதுரைத் தமிழ்ச்சங்கப்பேரகராதி குறிப்பிடும் இருபதுள் நிலவும் ஒன்று.

**குறிப்புரை : அம்மைக்கு :** பாதி= இடதுபாதி. துள்ளுமீன்= துள்ளும் கெண்டைமீன். ஆதரித்து= அன்புகொண்டு. அத்திரி தவத்தில் பிறத்தலால்= அத்திரிமுனிவரின் தவத்தால் திருத்தவத்துறையில் பெருந்திருப்பிராட்டியாக வந்து தோன்றியதால். கரந்திட= ஒளிகுன்றுமாறு. பூண் ஒளி விரித்தலால்= அணிந்த அணிகலன்களால் ஒளிபரப்புவதால். குமுறு சங்கமேகத்துடன் தோன்றிவருதலால்= பேரொலி எழுப்பும் சங்கேந்திய மேகவண்ணத்திருமாலின் தங்கையாகத் தோன்றிவருவதால்; குமுதவாய் விரிய வெண்ணகை காட்டலால்= செங்குமுதமலர் போன்ற வாய்மலரத் தன்வெண்பற்கள் காட்டிப்புன்முறுவல் பூத்தலால்; பம்பிய= தன்னைநெருங்கிய. சுரர்க்கு= மேலானவர்க்கு. அமுது= வீடுபேறு. வெள்ளிப் பரூஉ முத்து= களங்கமில்லாத - தூய - பற்கள். மிக்க புன்முறுவல் பூத்தலால். நூல்பகர் அறிஞன்= நூலின் தரம்கூறும் அறிஞன். என்சேய்= என்கிற மகன் - உருத்திரசன்மனாகிய முருகன். தண்அளி= இன்பம்தரும் கருணை.

**பொழிப்புரை : அம்மைக்கு :** யானைத்தோல் போர்த்த சிவபிரானின் இடதுபாதியைத் தனக்கு உரியதாகக் கொண்டதால்; துள்ளும் கெண்டை மீன்மேல் அன்புகொண்டு கண்ணாகக் கொண்டதால்; திருத்தவத்துறையில் அத்திரி முனிவரின் தவத்தால் மகள்முறையில் பெருந்திருப்பிராட்டியாகத் திருக்கோயில் குளத்தில் - சிவகங்கையில் தோன்றியதால்; குற்றமில்லாத குணங்களுடன் விளங்குவதால்; சினத்துடன்வரும் ஞாயிற்றின் ஒளியும் குன்றுமாறு தான்பூண்ட அணிகலன்கள் மூலம் ஒளிவிரியச் செய்வதால்; பேரொலி எழுப்பும் சங்கேந்திய மேகவண்ணத் திருமாலுடன் தங்கையாகத் தோன்றி வருதலால்; குமுதமலர் மலர நிலவின்வெள்ளொளி வீசும் புன்னகைகாட்டலால்; தன்னை நெருங்கிய மேலானவர்களுக்கு வீடுபேறு அளித்தலால்; வெள்ளிய மிகப்பருத்த முத்தினை ஈனுவதல்; இறையனார் களவியல் நூலுக்கு மிகச்சரியான உரைதேர்ந்தெடுத்த உருத்திரசன்மனாகிய முருகனை அளித்ததால்; இன்பம்தரும் கருணை அளித்தலால்.

**நிலவை வேண்டுதல் :** கலைபொருந்திய நிலவே ! எமதுஅம்பிகை நினக்கு ஒப்பாவாள். இவளுடன் பேசிமகிழ்ந்து விளையாடவா. அழகிய மூன்று உலகங்களையும் ஈன்றவளாகிய வெண்ணாவல்வனத்து அம்மையுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம் :** அத்திரி முனிவரின் தவத்திற்கு உவந்து அம்மை, திருத்தவத்துறைத் திருக்கோயிலில் உள்ள சிவகங்கைத் திருக்குளத்தில் முனிவர்க்குக் குழந்தையாகத் தோன்றினாள் என்று திருத்தவத்துறைத் தலபுராணம் கூறுகிறது. இறையனார் அருளிய களவியல் நூலுக்குப் புலவர்கள் எழுதிய உரைகளில் சிறந்ததைத் தேர்ந்தெடுத்தது உருத்திரசன்மனாக வந்த முருகப்பிரான் என்பது அந்நூலுட்கண்டசெய்தி.

**( 3 ) பேதம் - எதிர்வரும் இருசெய்யுள்களில் அம்மையை நிலவின் வேறாக உயர்த்திக் கூறி நிலவை அம்மையுடன் விளையாட அழைத்தல்.**

இலைவந்த கமலம் திரட்டல்அல் லாதுதிரை எற்று கமலம்திரட்டாய்

எழில்ஆம்பல் பூத்துவரு வாய்அன்றி ஒருமருப்(பு) ஏர்ஆம்பல் பூத்துவாராய்
கொலைவந்த நாகத்தி னுக்(கு)அமுதம் அல்லாது குளிர்நாகம் அமுதம்ஆகாய்
கொம்(பு)அனைய ருக்(கு)ஆசை தரலன்றி எண்மரும் குடிகொள்ளும் ஆசைதாராய்
கலைவந்த நிறைமதி எனப்பொலிவை அடியரைக் காக்கும்நிறை மதியும்உளதோ
கயிரவ நகைக்கவரு கருள்ஒளி நினக்குமிக் காள்இவள்அஃ(து) அறியாய்கொலோ
அலைவந்த நங்கைதொழும் மலைவந்த மங்கையுடன் அம்புலீ ஆடவாவே
அம்புவனம் மும்மைதொழு சம்புவன அம்மையுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை :** இலைவந்த கமலம்= இலையுடன் தோன்றிய தாமரைமலர். திரை எற்று= அலையெறியும். கமலம்= நீர். திரட்டாய்= குவிக்கமாட்டாய். எழில் ஆம்பல்= அழகிய ஆம்பல்மலர். ஏர்ஒற்றை மருப்பு ஆம்பல் பூத்து= அழகிய ஒற்றைத் தந்தமுடைய யானை விநாயகர் தோன்ற. கொலைவந்த நாகம்= கொல்லும் தன்மையுடைய இராகுகேது. அமுதம்= உணவு. குளிர்நாகம்= குளிர்ச்சி பொருந்திய தேவருலகம். எண்மர்= எட்டுச் சத்திகள். ( ஈசானி, பூரணி ஆர்த்தி, வாமை, மூர்த்தி, ஆரணி, ரோதயித்திரி, செனனி என்பர் ) கலைவந்த நிறைமதி= கலைகள் நிரம்பிய முழுநிலவு. நிறைமதி= சிறந்த புத்தி - அருள் உள்ளம். கயிரவம் நகைக்க= ஆம்பல்மலர் மலர. கருள் ஒளி= ஒளியில்குற்றமுடையவளே. அலைவந்த நங்கை= பாற்கடலில் தோன்றிய திருமகள். மலைவந்த= இமயமலையில் தோன்றிய.

**பொழிப்புரை :** இலையுடன் தோன்றிய தாமரைகளை ஒருசேரக் குவிப்பாயேதவிர, அலைவீசும் நீரினை ஓரிடத்தில் குவிக்கமாட்டாய். அழகிய ஆம்பல்மலர் பூக்கவருவாயே தவிர, அழகிய ஒற்றைத்தந்த விநாயகர் மகிழ வரமாட்டாய். கொலைபுரியும் இராகு கேது பாம்புகட்கு உணவாவாயே தவிர, குளிர்ச்சி பொருந்திய தேவருலகிற்கு அமுதம் தரமாட்டாய் மனிதர் உள்ளத்தில் பூங்கொம்பு போன்ற மகளிர்மேல் ஆசைதருவதன்றி, எட்டுச்சத்திகள் தமது உள்ளத்தில் குடிகொள்ளவேண்டும் என்ற ஆசைதரமாட்டாய். கலைகளுடன் கூடிய நிறைமதி என்று விளங்குவாயேதவிர, அடியவரைக்காக்கவேண்டும் என்ற அருள்உள்ளம் உனக்கு இல்லை. ஆம்பல்மலர் மலரவரும் ஒளியில்குற்றமுடைய உனக்கு, மேலான பேரொளிஉடையவள் இவ்வன்னை என்பது தெரியாதா!.திருப்பாற்கடலில்தோன்றிய திருமகளும் வணங்குகிறவளாய், விளங்கும் இமயமலையில் தோன்றிய இவளுடன் அம்புலியே! விளையாடவா. அழகிய மூன்றுஉலகங்களையும் ஈன்ற வெண்ணாவல்வனத்து இவ்வம்மையுடன் அம்புலியே! விளையாடவா.

( 4 ) மத்தமத ஆனைமுலை மணமாதர் வாய்பேசு வசைகள்ஏற் றுத்திரிந்தாய்
மாலெச்சி லைச்சுற்று முனிஎச்சில் தோன்றிஒரு மாசுணத்(து) எச்சில்ஆனாய்
தத்தம(து) உளப்படி சகம்பேச ஆசான் தனக்கும் பிழைத்துநின்றாய்
தண்கலை நிலாஎனப் பலர்வெறுக் கக்கதிர்செல் சமயம் தெரிந்துவருவாய்
இத்தனைக் களங்கம்நின் பால்பொலிதல் கண்டும்ஓர் ஏசிலா ரைக்கூவியாங்(கு)
எங்கள்பெரு மாட்டிநினை வாஎனக் கூவிட இயற்றுமா தவம்என்முன்எம்
அத்தர்கயி லாசர்அமு தீசர்மண வாட்டியுடன் அம்புலீ ஆடவாவே
அம்புவனம் மும்மைதரு சம்புவன அம்மையுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை :** மணமாதர்= நன்னிலையுடைய மகளிர் - கற்பரசியர். மால் எச்சிலைச் சுற்றும் முனி எச்சில் தோன்றி= மயக்கம்தரும் காமஎச்சிலை - காமக்கூட்டத்தினை வெறுத்த அத்திரி முனிவர்க்கு ( அநுசூயையிடம் ) பிறந்து. மாசுணத்து எச்சில் ஆனாய்= பாம்பினால் விழுங்கப்பட்டாய். சகம்= உலகம். ஆசான்= குருவாகிய பிரகஸ்பதி. பிழைத்து= தவறுசெய்து. ( தன்குருவின் மனைவி தாரையைப் புணர்ந்த பிழை ) தண்கலை = தண்ணிய ஒளி. நிலா= நிலைக்காது. கதிர்= சூரியன். செல்சமயம்= மறையும் நேரம். ஏசிலாரைக் கூவியாங்கு= குற்றமற்றவரை அழைத்தாற்போல். முன் இயற்று மாதவம் என். என்= என்னே. மணவாட்டி= மனைவி.

**பொழிப்புரை :** மதம்மிக்க யானைபோல் பருத்த முலைகளுடைய கற்பரசியர் வாய்க்குவந்தவாறு பேச, அப்பழிகளை ஏற்றுத் திரிந்தாய்; மயக்கம்தரும் காமஎச்சிலை - காமக்கூட்டத்தை - வெறுத்த அத்திரி முனிவர்க்கு அநுசூயையிடம் பிறந்தநீ, பாம்பினால் விழுங்கப்பட்டாய்; உலகவர் தத்தம் உள்ளப்படி பேச உன்குருவாகிய பிரகஸ்பதியின் மனைவி தாரையைப் புணர்ந்து குருவுக்கும் துரோகம் இழைத்தாய். தட்சனின் சாபத்தால் உனது குளிர்ந்த ஒளி நிலைக்காது என்றுபலரும் வெறுக்க, சூரியன் மறையும் நேரம்பார்த்துத் தோன்றுவாய்; இவ்வளவு களங்கங்களும் உன்னை மூடிஇருப்பதை அறிந்தும் ஒருகுற்றமும்

இல்லாதவரை விளையாட அழைப்பதுபோல் எங்கள் தலைவி உன்னை விளையாடக் கூவி அழைத்தாள். இதற்குநீ முன்புதவம் செய்திருக்கவேண்டும் எங்கள் சிவபெருமானும், கயிலையில் வாழ்கிறவரும் ஆகிய அமுதீசரின் மனைவியுடன் அம்புலியே! விளையாட வா. அழகிய மூன்று உலகங்களையும் ஈன்றவளாம் வெண்ணாவல்வனத்து இவ்வம்மையுடன் அம்புலியே! விளையாட வா.

( 5 ) **தானம்= ஈகை - கருணை ஈதல். இச்செய்யுள்முதல் கருணை காட்டல்**

நீர்ஏற்ற தென்கடல் உயிர்த்தபரி வால்சொரிக ணீர்என்ன வாரம்இறையா
நெட்டுடல் விடப்பட அராக்கதுவு மேஎன நினைந்துவாய் விட்(டு)அலறவும்
சீர்ஏற்ற வெண்சம்பு வின்கொம்பர் வைத்ததீந் தேன்இறால் என்றுஉடன்நகர்ச்
சிறுபிடிக்(கு) உதவப் பெருங்களிறு பற்றவும் தேவர்கள் பிழிந்(து)எறியவும்
கார்ஏற்ற ககனத்(து) உதித்(து)இராக் கதிர்எனக் கலைவலோர் புகல்வ(து)உண்மை
காட்டுவான் நாட்குநாள் தேய்ந்துஒழியும் நின்னையும் கருணையின் வரக்கூவினாள்
ஆர்ஏற்ற குடிலப்பி ரான்மகிழ் பிராட்டியுடன் அம்புலீ ஆடவாவே
அம்புவனம் மும்மைதரு சம்புவன அம்மையுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : தென்கடல்= திருப்பாற்கடல். உயிர்த்த= பெற்ற. நீர் ஏற்ற வாரம்என்ன சொரிகண்ணீர் இறையா= முறைப்படி ஏற்ற அன்பு என்னுமாறு சொரியும் கண்ணீரினைச் சொரிந்து. விடப் படஅரா= விடமுடைய நாகம். கதுவுமே= கவ்வுமே. வெண்சம்பு= வெண்ணாவல் மரம். தேன்இறால்= தேன்அடை. உடன்நகர்= கூடவரும். சிறுபிடி= இளைய பெண்யானை. ககனம்= ஆகாயம். இராக்கதிர்= இரவில் ஒளிதருவது. உண்மைகாட்டுவான்= உண்மையை வெளிப்படுத்த. ஆர் ஏற்ற குடிலம்= ஆத்திசூடிய சடை.

**பொழிப்புரை** : நிலவே! நீண்ட உடலுடைய பாம்பு உன்னைக்கவ்வும் என்று நினைத்து நீ வாய்விட்டு அலறவும்; சிறப்புப்பொருந்திய வெண்ணாவல்மரத்தின் கிளையில் தேனீக்கள் கட்டிய இனிய தேனடை என்று உன்னைக்கருதி, தன்னுடன் வரும்இளைய பெண்யானைக்குத் தரப்பெரிய ஆண்யானை உன்னைப் பற்றவும்; தேவர்கள் உன்னைத்தேனடையாகக் கருதித் தேனைப்பிழிந்து கோதாக எறியவும்; இருண்டவானில் இரவில் தோன்றி நாளுக்குநாள் தேய்ந்து ஒழிகிறவன் என்று அறிஞர்கள் கூறுவது உண்மை என்பதை உலகுக்குக் காட்டுவதுபோல் ஒவ்வொருநாளும் நீ தேய்ந்து ஒழிவதை எண்ணிக் கண்ணீர் சொரிவதை நினைந்து; நீ திருப்பாற்கடலில் தோன்றினாய் என்பதாலும், முறைப்படி ஏற்ற அன்பு காரணமாகவும், தன்னுடன் விளையாடவருமாறு கருணையுடன் உன்னைஅழைத்தாள். ஆத்திசூடிய சடையுடைய சிவபிரான் மகிழும் தலைவியாகிய இவளுடன் அம்புலியே! விளையாடவா. அழகிய மூன்று உலகங்களையும் ஈன்றவளாம் வெண்ணாவல்வனத்து இத்தாயுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம்** : முறைப்படி ஏற்ற அன்பாவது, உலகைஈன்ற தாய் என்பதால் இயல்பாக அமையும் அன்பு.

( 6 ) சுமையாக மாசுண முடித்தூங்கு குவலயம் சூழ்தெண் கடல்புகுதியேல்
தோகைஇவள் ஈன்றஒரு குழவிகதிர் வேற்படை சுவற்றும்என்(று) உளம்வெருவுவாய்
கமைஆர் தவப்பொதியின் முனிவருவன் எனவும் கலங்குவாய் விண்புகுதியேல்
காருணா லயற்குநிழல் ஈயும்வெண் ணாவலின் கவடுஉரிஞ் சத்தேய்குவாய்
இமையாத முக்கண்அப் பரன்நோக்கி னும்சடையி னும்பொலிதி யேல்இமைக்கும்
இவள்கரம் கால்பட வருந்துவை இவண்சேர்வை என்னின்நிற்(கு) ஒப்புயார்நிற்(கு)
அமையாத நலன்ஒன்றும் இன்றுதுன்று ஓதியுடன் அம்புலீ ஆடவாவே
அம்புவனம் மும்மைதரு சம்புவன அம்மையுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : மாசுணம்= ஆதிசேடன் என்னும்பாம்பு. குவலயம்= உலகம். புகுதியேல்= புகுந்து ஒளிந்து கொள்வாயானால். குழவி= மகன் - முருகன். சுவற்றும்= வற்றச்செய்யும். வெருவுவாய்=அஞ்சுவாய். கமை= பொறுமை. பொதியின் முனி= அகத்தியமுனிவர். கருணாலயன்= கருணைக்கு இருப்பிடமானவன் - வெண்ணாவலீசர். கவடு= கிளை. உரிஞ்ச= உராய. அப்பரன்= அந்தச் சிவபிரான். நோக்கு= கண். இமைக்கும்= ஒளிரும். இவண் சேர்வை என்னின்= இங்கு வந்து சேர்ந்தால். நிற்கு= உனக்கு. இன்று= இல்லை. துன்று ஓதி= செறிந்த கூந்தலுடைய இவ்வம்மை.

**பொழிப்புரை** : ஆதிசேடனின்தலையில் அதற்குச் சுமையாக விளங்கும் உலகைச்சூழ்ந்த கடலில் புகுந்து ஒளிந்துகொள்வாய் என்றால், மயில்போன்ற இவளின் மகனாகிய முருகனின் ஒளிரும் வேலாயுதத்தால் கடல் வற்றிவிடுமே என்று மனம் அஞ்சுவாய்; பொறுமை மிக்க அகத்திய முனிவர்

அக்கடல் நீரைப் பருகவருவாரே என்றும்மனம் கலங்குவாய்; வானத்தில் புகுந்துகொண்டால், கருணையின் இருப்பிடமான சிவபிரானுக்கு நிழல்தரும் வெண்ணாவல் மரத்தின் கிளைகள் உராயுமாதலின் நீ தேய்ந்துபோவாய்; இமைத்தல் இல்லாத மூன்று கண்களுடைய சிவபிரானின் கண்ணிலும் சடையிலும் விளங்கலாம் என்றால், ஒளிவடிவான இவ்வம்மையின் கையும் காலும் உன்மேல் படுமாதலின் வருந்துவாய். நீ இங்கு வருவாயானால் உன்னை ஒப்பார் யாருமில்லை, உன்பால் வந்துசேராத நன்மைகள் ஏதுமில்லை; எல்லாநலன்களும் உன்பால் தாமேவந்துசேரும். எனவே செறிந்த கூந்தலுடைய இவ்வம்மையுடன் அம்புலியே! விளையாடவா. அழகிய மூன்று உலகங்களையும் ஈன்றவளாகிய வெண்ணாவல்வனத்து இத்தாயுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம்** : முருகன் வேலால் கடல்வற்றிய செய்தியைத் திருவிளையாடற்புராணம் " கடல் சுவற வேல் விட்டபடலம் " கூறும். ஒருபோது அகத்தியமுனிவர் கடலினை உளுந்தளவாக்கி உண்ட செய்தியால் அகத்தியர்வருவார் என்று அஞ்சுவாய் என்றார், வெண்ணாவல்மரத்தின் வானளவு உயரம் காரணமாக வானில் சென்றால் அம்மரத்தின் கிளைகள் உன்மேல் உராய நீ தேய்வாய் என்றார். சிவபிரானின் இடதுகண்ணாக ஆவாயானால் இவ்வம்மையின் கையால் பொத்தப்பட்டு வருந்துவாய் என்றார், சடையில் அமைந்தால் ஊடற்காலத்தில் இவ்வம்மையின்கால் அப்பனின்சடைமேல்பட நேரும்போது உன்மேலும்பட வருந்துவாய் என்றார். எனவே எல்லாநன்மைகளும் ஒருசேரப்பெற இவ்வம்மையுடன் விளையாட வந்துவிடு என்பது முடித்தார்.

( 7 ) பூஏறு நான்முகப் புத்தேள் திலோத்தமை புணர்ந்தமா பாதகமும்வெண்
போதகம் நடாத்திச் சிலம்புகள் புலம்பஇறை போக்கும்கண் ஆக்கையர்க்கும்
காஏறு மழைமுகில் கடுக்கும்எழில் வண்ணன்என் கண்ணனுக் கும்கொள்பிரம
கத்தியும் அகற்றியஓர் இத்தலத் தின்பெருமை கருதிலாய் போலும்ஓர்ஏழ்
மாஏறு தேர்க்கதிர் திறக்கநின் ஒருதங்கை வாழ்மனை அடைக்கும்நீஇம்
மாஞான பூமியிடை வருதியேல் நின்தேய்வு மாறல்ஓர் பெரிதன்றுகாண்
ஆஏறு கொடியுளார்க்(கு) ஆசைஏற் றும்கொடியொ(டு) அம்புலீ ஆடவாவே
அம்புவனம் மும்மைதரு சம்புவன அம்மையுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : பூ ஏறு= செந்தாமரையில் வாழும். புத்தேள்= தேவன். வெண்போதகம்= வெள்ளையானை - ஐராவதம். சிலம்புகள் புலம்ப= மலைகள் பெரிதும்வருந்த. இறைபோக்கும்= சிறகினை வெட்டிய. கண் ஆக்கையர்= உடம்பெல்லாம் கண்ணுடைய இந்திரன். காஏறு= சோலைமேல் ஏறிச்செல்லும்.கடுக்கும்= ஒக்கும். கண்ணன்= கண்ணபிரான். ஓர் ஏழ்மா= ஒப்பற்ற ஏழு குதிரைகள். கதிர்= ஒளி. நின்தங்கைவாழ் மனை= உன்தங்கையாகிய திருமகள் வாழும் வீடு - தாமரை மலர். தேய்வுமாசு= உடல்தேயும் குற்றம். ஆஏறு= விடை பொறித்த. ஆசை ஏற்றும்= ஆசையை மிகுவிக்கும்.

**பொழிப்புரை** : தாமரை மலரில் வாழும் நான்முகனாகிய தேவன், திலோத்தமையைப் புணர்ந்த மாபாதகம்; வெள்ளையானையாகிய ஐராவதத்தில்ஏறி அதனைச்செலுத்திப்போய் உலகமலைகள் மிகவருந்த அவற்றின் சிறகினை வெட்டிய ஆயிரங்கண்ணன் ஆகிய இந்திரன், சோலைகளின்மேல் ஏறிச்செல்லும் கார்மேகம் ஒத்த நிறமுடைய கண்ணபிரான் ஆகியோரின் பிரமகத்தி ஆகியவற்றை அகற்றியஒப்பற்ற இத்தலத்தின் பெருமையை நீ அறியாய்போலும். தனதுதேரில் ஒப்பற்ற ஏழுகுதிரைகள் பூட்டிய சூரியன் மலரச்செய்த நின் தங்கையாகிய திருமகள் வாழும் வீட்டினை - தாமரை மலரைக் குவியுமாறு செய்தநீ, இந்தச் சிறந்த ஞான பூமிக்கு வருவாயானால் உன்உடல்தேயும் குற்றம் மாறுவது ஒரு பெரிய செயலன்று. எனவே விடைச்சின்னக் கொடியுடைய சிவபிரானுக்கு ஆசைமிகச்செய்யும் கொடியாகிய இவளுடன் அம்புலியே! விளையாடவா. அழகிய மூன்று உலகங்களையும் ஈன்றவளாகிய வெண்ணாவல்வனத்துத் தாயுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம்** : முன்னொருகாலத்தில் மலைகள் பெற்றிருந்த சிறகின் துணைகொண்டு பறந்துபோய், உயிர்களுக்குத் துன்பம்விளைத்ததால் இந்திரன் அவற்றின் சிறகுகளை வெட்டி உயிரினங்களைக் காத்தான் என்ற புராணச்செய்தியை உட்கொண்டது முதலடியின் பின்பகுதி.

( 8 ) மனைஆர் நெடுங்கொடிக ளால்அகன் விசும்புபடு மாசுஒருவும் இத்தலன்நின்மெய்
மாசுஒருவல் அரிதன்(று)ஓர் குழவியால் கடல்விட்ட மால்இனி(து) உறங்கச்செயும்
சினைஆர் நறும்புன்னை நீழல்விரி நின்பெயர்த் தீம்புனல் இராமுழுதும்விண்

தெருஆறு அலைந்துகண் துயிலாத நின்குறைவு தீர்ப்பரி தன்றுதரணி
தனைஆ யிரம்கதிர்கொள் எனஅளித்(து) அருள்மூர்த்தி தப்புநின் கதிர்கள்நிறையத்
தருவ(து)அரி தன்(று)இவை உணர்ந்(து)இமய மகளாய்ஓர் சங்கமுகில் தங்கையாய்என்
அனையாய் நுனைசூலி மனையாய்ப் பொலிந்தவளொ(டு) அம்புலீ ஆடவாவே
அம்புவனம் மும்மைதரு சம்புவன அம்மையுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை :** மனை ஆர்= வீடுகளில் கட்டிய. மாசு ஒருவும்= புழுதிகள் நீங்கும். மெய்மாசு= உடல்களங்கம். கடல் விட்ட மால்= பாற்கடலின் நீங்கிய திருமால். இனிது உறங்கச்செயும் ஓர் குழவியால்= நன்கு உறங்கச்செய்யும் பெருமையினால். புன்னை நீழல்= புன்னைமரநிழல். விரி= அகன்ற. நின்பெயர்த் தீம்புனல்= இனிய நீருடைய சந்திரதீர்த்தம். நின்பெயர்த் தீம்புனல் மால் இனிது உறங்கச்செயும். என்க. இரா= இரவு. விண்தெரு ஆறு= வானத்துத் தெரு வழியே. குறைவு= குறை. தரணி= உலகம். கதிர் கொள் என= சூரியன் கொள்க என்று. தப்பு= விலகிய. இவை உணர்ந்து= இவற்றை நீ தெளிந்து. சங்கமுகில்= சங்கேந்திய மேகம் - திருமால். நுனை சூலி= கூர்மையான சூலம் ஏந்திய சிவபிரான்.

**பொழிப்புரை :** வீடுகள்தோறும் கட்டிய உயரமான - மிகநீண்ட கொடிகள் பறத்தல்மூலம் வானத்தில் உண்டான புழுதியை நீக்கும் இத்தலத்திற்கு, உனது உடல்களங்கத்தை நீக்குவது அரியசெயலன்று. பாற்கடலின் நீங்கிய திருமாலை நன்கு உறங்கச்செய்யும் மணக்கும்மலர்களுடன் கூடியமிக்ககிளைகளால் அமைந்த நிழல்படிந்ததும், உன்பெயருடன் விளங்குவதும் ஆகிய சந்திரதீர்த்தம் இங்கு உண்டு. இரவு முழுவதும் வானத்துத் தெருவழியே அலைந்து உறங்காத உனதுகுறை தீர்க்கமுடியாததன்று. உலகத்திற்கு ஆயிரம்கதிர்களுடைய சூரியனைத்தந்தருளிய அருள்வடிவான இம்மூர்த்தி, உன்னிடமிருந்து விலகிய கதிர்களை மிகுதியாக உனக்குத் தருவது மிகஎளியதாகும். நீஅடையவிருக்கும் இந்நன்மைகளை உணர்ந்து, இமவான் மகளாக, சங்கேந்திய மேகவண்ணனாகிய திருமாலுக்குத் தங்கையாக, எனக்குத்தாயாக, கூர்மையான சூலம்ஏந்திய சிவபிரானுக்கு மனைவியாக விளங்குகின்றவளுடன் அம்புலியே! விளையாடவா. அழகிய மூவுலகங்களையும் ஈன்ற தாயுடன் அம்புலியே! விளையாடவா.

( 9 ) சேலைஅலை எற்றுநெடு வேலைஉல(கு) அத்தர்வெஞ் சிகைஅனல் கொப்பளிக்கும்
செங்கண் கடைத்திறல் சிங்கப்பெ யர்ச்செழும் திங்கள் சிறக்கும்ஒருநாள்
காலைமுத லாகமறு காலைஅள வும்கறைக் கால்ஒரு மருப்புமுக்கண்
கடவார ணம்பூசை அயறாது கண்ணுறக் கடவதன்(று) என்றுஇகழ்வதும்
வேலைஅடும் விழிமாதர் முறையிடும் போதுசிறு விதிதந்த கயரோகமும்
விட்(டு)ஒருவு ஞான்(று)இன்(று) அடுத்தது கயக்காவும் வெறுமையேன் உள்ளமும்தன்
ஆலயம் எனக்குடி புகுந்தபெரு மாட்டியுடன் அம்புலீ ஆடவாவே
அம்புவனம் மும்மைதரு சம்புவன அம்மையுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை :** சேலை= கெண்டைமீனை. வேலை= கடல். அத்தர்= தலைவர் - சிவபிரான். சிகை= கிரணம். சிங்கப்பெயர்த் திங்கள்= ஆவணி மாதம். சிறக்கும் ஒருநாள்= சதுர்த்தியன்று. கறைக்கால்= உரல்போல் பருத்தகால். கடவாரணம்= மதயானை - விநாயகர். கண்ணுற= பார்க்க. மாதர்= மனைவியரில் உரோகிணி தவிர்த்தபிற இருபத்தறுவர். சிறுவிதி= தட்சன். தந்த= சாபமிட்ட. விட்டு ஒருவு ஞான்று= விட்டு நீங்கும்நாள். அடுத்தது= வாய்த்தது. கயக்கா= ஆனைக்கா.

**பொழிப்புரை :** கெண்டை மீன்களை எற்றும் அலைகளுடைய கடல்சூழ்ந்த உலகுக்குத் தலைவராகிய சிவபிரானின், கொடிய கிரணங்களுடன் நெருப்புக்கொப்பளிக்கும் நெற்றிக்கண்ணின் ஆற்றல் போன்று வெப்பம் மிக்க ஆவணிமாதத்துச் சிறப்புவாய்ந்த சதுர்த்தியன்று காலைமுதல் மறுநாள் காலைவரை உரல்போன்ற கால்களையும், ஒற்றைத் தந்தமும், முக்கண்களும் உடைய மதயானையாகிய விநாயகரின் பூசையைக் காணக்கூடாது என்றுநீ இகழ்வதும், வேலினை வென்ற விழிகளுடைய மகளிராகிய, சந்திரனின் மனைவிமார் ( எம் கணவனாகிய சந்திரன் உரோகிணியிடமே பேரன்பு கொண்டு எங்களைப் பார்ப்பதும் இல்லை என்று ) கூறியதால், கயரோகியாவாயாக என்று அவர்களின் தந்தையாகிய தட்சன் இட்ட சாபமும் உன்னைவிட்டு நீங்கும்நாள் இன்றுவந்துவிட்டது என்பதால்; ஆனைக்காவையும், என் உள்ளத்தையும் தன் கோயிலாகக்கொண்டு குடிபுகுந்த பெருமாட்டியுடன் அம்புலியே! விளையாடவா. அழகிய மூவுலகங்களையும் ஈன்றவளாகிய வெண்ணால்வனத்தில் எழுந்தருளியுள்ள இவ்வம்மையுடன் அம்புலியே! விளையாடவா.

( 10 ) வாவென்று கூவுமுனம் வந்திலை எனச்சினம் வரும்கொல்என்(று) அஞ்சிஅஞ்சி
வாள்மணிநின் அகைநாணி யோசடை தனக்(கு)ஒவா மாசுணம் எனக்கருதியோ
தாவென்(று) உலாயதென அணிமணிப் பணிஒளி தழைப்பது தெரிந்(து)அஞ்சியோ
சற்(று)இருந் தனன்என விலக்கின முனிந்திடின் தடைசெய்வார் எவர்அதன்றிச்
சோவென்ற புன்னகையர் பின்னக அராஒன்று தூண்டினும் போதும்ஓதும்
துணைஅடி மறந்தனைகொல் இனிஎங்கள் மேற்பழி சொலக்கரு திடேல்அயிலமண்
காவென்ற கொண்டல்முன் வரப்பின்வரு பூங்கொம்பொ(டு) அம்புலீ ஆடவாவே
அம்புவனம் மும்மைதரு சம்புவன அம்மையொ(டு) அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : வாள்மணி= ஒளியுடன் அழகிய. அகை= மனத்தளர்ச்சி. மாசுணம்= பாம்பு. அணிமணிப் பணிஒளி தாவென்று உலாயது. அணிமணிப்பணி= அழகிய மணிகள்பதித்த அணிகலன்கள். தா வென்று= பகையை வென்று. தழைப்பது= சிறந்து விளங்குவது. சற்றுஇருந்தனன்= காலம்தாழ்த்தான். முனிந்திடின்= இவள் சினந்தால். தடைசெய்வார் எவர்= இவள்சினத்தை எவராலும் தடுக்கவியலாது. சோ வென்ற புன்னகையர்= வாணாசுரனின் சோ என்ற நகரைப் புன்னகையால் அழித்த சிவபிரான். பின்னகம்= சடை. ஓதும்= சிறந்த. துணை அடி= துணையானவரின் திருவடி. மண் அயில= மண்ணை உண்ட காஎன்ற=காத்தல் என்ற தொழிற்குரிய. கொண்டல் முன்வரப் பின்வருபூங்கொம்பு= மேகவண்ணத்திருமாலுக்குப்பின் தங்கையாக வந்த பூங்கொம்பு போன்ற அம்மை.

**பொழிப்புரை** : இவள் உன்னை வாஎன்று கூவி அழைக்குமுன் நீ வரவில்லை என்பதால் உன்மேல் இவள் சினம் கொள்வாளோ என்று அஞ்சிஅஞ்சி நீ வராதது, ஒளியுடன் அழகும்பொருந்திய உனது மனத்தளர்ச்சிக்கு வெட்கப்பட்டா? இவள் சடையைப் பாம்பு என்று கருதியா? இவளது அழகிய மணிகள்பதித்த அணிகலன்கள் ஒளியால் தமது பகைப்பொருள்களை வென்று சிறந்து விளங்குவது கருதிஅஞ்சிய காரணத்தாலா ? நீ வரக்காலம் தாழ்த்தது என்று எண்ணாதவற்றை இவள்எண்ணி உன்னைச் சினந்தால் இவளது சினத்தைத் தடுக்க யாராலும் ஆகாது. அதுதவிர; வாணாசுரனின் சோ என்ற நகரைப் புன்னகையால் அழித்த சிவபிரானது சடையில் வாழும் நாகமொன்றை ஏவினாலும் உன் அழிவுக்குப் போதுமானதாகும். இவளது சிறந்தஇரு திருவடிகளை மறந்துவிட்டாய் போலும். உன் அழிவுக்கு எங்கள்மேல் பழிசொல்ல எண்ணாதே! மண்ணுண்டவனும், காத்தல் தொழிற்கு உரியவனும், கார்மேகவண்ணனும் ஆகிய திருமாலுக்குப்பின் தங்கையாகவந்த பூங்கொம்பு போன்ற இவ்வம்மையுடன் அம்புலியே! விளையாடவா. அழகிய மூவுலகங்களையும் ஈன்றவளாகிய வெண்ணாவல்வனத்து அம்மையுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம்** : சிவபிரான், வாணாசுரனின் சோ நகரைப் புன்னகையால்அழித்தது

“மூவெ யில்செற்ற ஞான்(று)உய்ந்த மூவரில் இருவர் நின்திருக் கோயிலின் வாய்தல்
காவ லாளர்என்(று) ஏவிய பின்னை ஒருவன் நீகரி கா(டு)அரங் காக
: மானை நோக்கிஓர் மாநடம் மகிழ மணிமு ழாமுழக் கஅருள் செய்த
தேவ தேவநின் திருவடி அடைந்தேன் செழும்பொ ழில்திருப் புன்கூர் உளானே.”

( திருமுறை 7. திருப்புன்கூர். 8 )

எயில்= கோட்டை - கோட்டை சூழ்ந்த நகர். மூவர்= தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணாசுரன். இருவர்= முதலிருவர். வாய்தல்= வாசல். ஒருவன்= வாணாசுரன். கரிகாடு=சுடுகாடு.

**அம்புலிப்பருவம் முற்றிற்று.**

************************************************

## அம்மானைப் பருவம்

**********************************

விரைநறை இதழ்ப்பொலி மரைக்கண் பெருக்(கு)எழு விரைக்கள் குடித்(து)எழுந்த
மென்சிறைப் பமரங்கள் மேல்கடி(து) அழுக்காறு மேவிமற் றோர்கமலம்வாழ்
வரிஇறைத் தும்பிகள் தொடர்ந்தென முகத்(து)அவிர்நின் வாள்விழி தொடர்ந்திடப்பொன்
வளர்சடை முடிக்கூன் நிலாப்புனையும் எம்பிரான் வளர்இர சதப்பொருப்பும்
பரியஉரல் அடியுடைப் பொன்உலகு வாழ்வீர பட்டப் பொருப்பும்நீலப்
பைம்பொருப்(பு) ஆகஒளி பம்மஎகி னம்சிகிப் பண்புறக் கருள்திரண்(டு)ஓர்

அரிஒளிதன் மேற்பாய்வ போலநீ லங்குயிற்(று) அம்மானை ஆடியருளே
அத்திவனத்(து) உத்தமர் இடத்(து)அமர் பசுத்தகொடி அம்மானை ஆடியருளே.

**குறிப்புரை :** விரைநறை= மணக்கும்தேன். மரை= தாமரைமலர். விரைக்கள்= மணக்கும் தேன். பமரம்= வண்டு. வரி இறை= கோடுகளுடைய சிறகு. தும்பி= வண்டு. கடிது தொடர்ந்தென= விரைந்துஅந்தவண்டைப் பின்தொடர்ந்தாற்போல. வாள்விழி= ஒளிபொருந்திய கருவிழிகள். பொன் வளர்= அழகு தங்கிய. இரசப்பொருப்பு= வெள்ளிமலை - வெள்விடை. பொன் உலகு= தேவருலகம். வீரபட்டப் பொருப்பு= வீரபட்டம் அணிந்த மலை - ஐராவதயானை. பைம்பொருப்பு= சிறந்தமலை. பம்ம= ஒளிர. எகினம்= அன்னம் போல் வெள்ளிய அம்மானைக்காய். சிகி= நெருப்பு. கருள் = கருமை. அரி= வண்டு. நீலம் குயிற்று அம்மானை= நீலநிறம் பொருந்திய அம்மானைக்காய். அத்திவனம்= ஆனைக்கா. இடத்து= இடப்பால்.

**பொழிப்புரை :** மணக்கும் தேன் தனதுஇதழ்களில் பொலியும் தாமரைமலரில் பெருகும் மணத் தேன்பருகி, மேலெழுந்த மென்மையான சிறகுடைய வண்டின்மேல் அழுக்காறு கொண்டு, மற்றொரு தாமரையில் வாழும் கோடுகள்பொருந்திய சிறகுடைய வண்டு விரைந்துஎழுந்து முன்னதைப் பின்தொடர்ந்தாற் போல, உன்முகத்தில் ஒளிரும் கருவிழிகளில் ஒன்ற ஒன்று பின்தொடர; அழகுதங்கிய சடைமுடியில் நிலவைச்சூடிய எம்தலைவனாகிய சிவபிரானின் அழகு தங்கிய வெண்மையான மலைபோன்ற விடையும், தேவருலகில் வாழ்வதும், உரல்போல் பருத்த கால்களுடையதும் ஆகிய வீரபட்டமணிந்த வெண்மையான ஐராவதயானையும் அம்மைத் திருமேனிநிறம் எதிரொளித்துச் சிறந்த நீலநிறமலைகள் போல் ஒளிர; அன்னப்பறவைபோன்ற வெண்ணிற அம்மானக்காயை உள்ளங்கையில் ஏந்தும்போது அதில் உள்ளங்கை நெருப்பின்நிறம் ஒளிர; கருமைஎல்லாம் திரண்டதுபோன்ற நிறத்து வண்டுஒன்று மேல்பாய்வதுபோல் நீலநிறம்ஒளிரும் காயால் அம்மானை ஆடியருள்க.

**விளக்கம் :** அம்மை ஆடஎடுத்த அம்மானைக்காய்கள் வைரநிறத்தன. எனவே மேலேறும் காய்களைக் கூர்ந்து நோக்கும் கருவிழிகளால் அவைகருமைநிறமும், அவை மேலேறும்போது திருமேனி நிறம் எதிரொளித்து நீலநிறமும், ஏந்திய உள்ளங்கை நிறத்தால் நெருப்பின்நிறமும், மேலெறிந்தகாய் கீழ்வரும்போது அம்மையின் நீலநிறமும்பெற்றன என்றார்.

( 2 ) பங்கய மலர்ப்பொலியும் வெள்ளிமணி துள்ளிமீப் பாய்ந்தது கடுப்பஅமரர்
பைந்தருவில் அரிதுகொளும் என்றுநா வற்கனி பறித்(து)எறிதல் ஏய்ப்பஅலைவெண்
சங்(கு)அலர் பெருஞ்சலதி மங்கையிடை தங்கிஒரு தண்சுடர் எழுந்த(து)ஒப்பச்
சவிலம் திரட்டிஅது விரியாது தெரியத் தடக்கைமாற் றுதல்நிகர்ப்ப
கொங்(கு)அலர் செழுங்கல் பரும்பால் அசைத்தஒளி குலவுபந் தாடல்உறழக்
கூட்டஇருள் ஓட்டுதல் தெரிந்(து)இரவி வெப்பம்கொளப் பயனில் எனைஅஞ்சலென்
அங்கையின் எடுத்துநித் திலமன்றி மற்றிலா அம்மானை ஆடியருளே
அத்திவனத்(து) உத்தமர் இடத்துஅமர் பசுத்தகொடி அம்மானை ஆடியருளே.

**குறிப்புரை :** வெள்ளிமணி= வெண்முத்து. கடுப்ப= ஒப்ப. அரிது= அரியகனி. ஏய்ப்ப= ஒப்ப. அலர்= தோன்றும். பெருஞ்சலதி மங்கை= பெரிய கடலாகியமகள். தண்சுடர்= நிலா. சவிலம்= வெண்டாமரைமலர். விரியாது தெரிய= மலராததைப் பார்த்து. நிகர்ப்ப= ஒப்ப. கொங்கு அலர்= தேன்பிலிற்றும் தாமரைமலர். பரும் செழும் கல்= பருத்த வளமான முத்து. பால் அசைத்த ஒளி= வெளியிட்ட ஒளி. உறழ= ஒப்ப. வெப்பம்கொள= சினங்கொள்ள. அங்கை= உள்ளங்கை. நித்திலமன்றி மற்று இலா= முத்தினைத் தவிரப் பிறவகைக்காய்கள் ஏதுமில்லாத. பயனில்எனை அஞ்சல்என் அத்திவனத்து உத்தமர் என்று கூட்டுக.

**பொழிப்புரை :** வெண்மையான முத்து. துள்ளி மேலேபாய்ந்தாற்போலவும், தேவர்கள் பசிய கற்பகமரத்தில் அரியதாகிய வெண்ணாவல் கனிபறிப்போம் என்று அதனைப்பறித்து எறிதல்போலவும், வெண்மையான சங்குகள் தோன்றும் பெரியகடலாகிய மங்கையிடம் கருக்கொண்டு ஒரு முழுநிலவு எழுந்ததுபோலவும், வெண்டாமரைமலர் பறித்து, அது மலராதிருத்தற்பொருட்டுத் தனது பெருமை பொருந்திய கையில் மாற்றிக்கொள்வது போலவும், தேன்பிலிற்றும்தாமரைமலர்ஈன்ற வளமான முத்து வெளியிட்ட ஒளியானது விளங்கும்பந்தாடுதல் ஒத்து விளங்கவும், பலபொருள்களின் வெள்ளொளி, செறிந்த இருளினை ஓட்டுவதை அறிந்து ஞாயிறு சினங்கொள்ள, நித்தில அம்மானைக்காய்களையே எடுத்து எடுத்து அம்மானை ஆடியருளே. ஒன்றுக்கும் உதவாத என்னை அஞ்சாதே என்று ஆட்கொண்ட ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள உத்தமராகிய வெண்ணாவல் ஈசரின் இடப்பால் அமர்ந்த பசியகொடியே அம்மானை ஆடியருளே.

( 3 ) பன்னக நெடும்பாய்க் கருஞ்சூல் முகில்கதிர்ப் படலைமார் பத்துமணியும்
பரியஉரல் அடிமுக்க டாத்தவள யானையான் பதிவதியும் மணியும்வாங்கி
மன்அருள் பொலியும்முப் பத்துமுக் கோடிநப வாணர்மா னவர்யார்எனும்
மனநசை யுடைத்தெனின் கொண்மின்கொண் மின்என வழங்குதல் கடுப்பஅன்னை
நின்நயன இணையொடு மேல்சென்று கீழ்படிய நெடியகோ டீரப்பிரான்
நெஞ்சக் கலன்தரு மணிக்குவை திரட்டிஎறி நீர்மைபோல் மென்நடையைவெள்
அன்னம்அறி யத்தனி நடக்கும்மயில் செக்கர்மணி அம்மானை ஆடியருளே
அத்திவன உத்தமர் இடத்(து)அமர் பசுத்தகொடி அம்மானை ஆடியருளே.

**குறிப்புரை** : பன்னக நெடும்பாய்= ஆதிசேடனாகிய நீண்டபாய். கருஞ்சூல் முகில்= கரிய சூல்கொண்ட மேகம் போன்ற திருமால். கதிர்ப் படலை= ஒளிபொருந்திய மலர்மாலை. மார்பத்து மணி= மார்பில் அணிந்த கவுத்துவமணி, கடாம்= மதநீர். தவள யானையான்= வெண்மையான யானை - ஐராவதம் - ஏறும் இந்திரன். பதி வதியும் மணி= தேவருலகில் உள்ள மணி வாங்கி= எடுத்து. மன்= பெருமை. நபவாணர்= தேவருலகில் வாழ்வோர். மானவர்= பெருமையுடையோர். மனநசையுடைத்தெனின்= மனம் விரும்பினால். கடுப்ப= போல. நயனஇணை= இருகண். கோடீரம்= சடைமுடி. நெஞ்சகக் கலன்= மார்பில் அணியும் உருத்திராக்கம். மென்நடையை= மென்மையான நடையுடையளாய். அறிய= கற்க. செக்கர்= செம்மைநிறம்

**பொழிப்புரை** : மென்மையாக நடக்கும் வெண்மையான அன்னப்பறவை நடைகற்குமாறு நடக்கும் மயிலே ! நீ, ஆதிசேடனைப்பாயாகக் கொண்டவனும், கருமையான சூல்கொண்ட மழைமேகம் போன்றவனும் ஆகிய மலர்மாலையணிந்த திருமால் மார்பில் அணியும் கவுத்துவமணியையும், பருத்த உரல்போன்ற கால்களும், மூவகை மதநீரும்கொண்ட வெண்மையான யானையுடைய இந்திரனின் தேவருலக மாணிக்கமணியையும், நீண்டசடையுடைய சிவபிரான் மார்பில்அணியும்உருத்திராக்கங்களையும் திரட்டிஎடுத்து; வானுலகில்வாழும் பெருமைபொருந்திய அருள்பொலியும் முப்பத்து மூவகைத் தேவர், மற்றும் பெருமைபொருந்தியவர் யாரேயாயினும் விரும்பினால் பெற்றுக் கொள்ளுங்கள் என்று சொல்வதுபோல், தாயே! உனது இரு கண்பார்வையும் நீ எறியும் அம்மனைக்காயுடன் மேல்சென்று கீழ்வர, செம்மணி அம்மானைக்காய்களை எறிந்து ஆடியருள்க. ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள உத்தமராகிய அருள்தரு வெண்ணாவலீசரின் இடப்பாகத்தில் அமர்ந்த பசிய கொடியே! அம்மானை ஆடியருள்க.

( 4 ) கம்பம்இட றும்கடக் கரிஉரியை அங்கக் கபாய்எனக் கண்டஎண்தோள்
கண்ணுதற் சடாடவிச் செம்மைநிக ராயினும் கால்சிவப்(பு) ஆனநீநம்
வம்(பு)அலரும் ஆம்பல் சிவப்(பு)இணை எனப்பொறா வாய்க்கும்இரு கைவிரற்கும்
மானமாட் டாய்என்(று) எடுத்(து)எறிவ போலவும்வெள் வளைமருவு குணகடலெழும்
கொம்(பு)அனநின் அம்மனை நினக்(கு)அருள்அம் மனைஎனக் குலவிப் படர்ந்தபவளக்
கொடியினை விலக்கிஎழு செங்கதிர் கடுப்பவும்குழையினை அடர்ந்துமோதும்
அம்(பு)அன கருங்கண் பசுந்தோகை செம்பவள அம்மானை ஆடியருளே
அத்திவன உத்தமர் இடத்(து)அமர் பசுத்தகொடி அம்மானை ஆடியருளே.

**குறிப்புரை** : கம்பம் இடறும்= கற்றூணைக் காலால் எற்றும். கரி உரி= யானையின் தோல். அங்கக் கபாய்= உடலைமூடும் சட்டை. எண்தோள் கண்நுதல்= எட்டுத்தோள்களுடைய நெற்றிக்கண்ணர் - சிவபிரான். சடை அடவி= சடைக்காடு. சிவப்புக்கால் ஆன நீ= செந்நிறம் ஒளிரும் நீ. வம்பு அலரும்= புதிதாக மலர்ந்த. ஆம்பல்= அரக்காம்பல் மலர். இணைஎனப் பொறா= ஒப்பாகாத. மானமாட்டய்= ஒப்பாகமாட்டாய். வெள்வளை மருவு= வெண்சங்குடைய. குணகடல் எழும்கொம்பு= கீழ்க்கடலில்தோன்றும் பவளம். அன= ஒத்த. அம்மனை= அம்மனைக்காய். நினக்கு அருள்அம்மனை என= உனக்கு உதவும் அம்மனைக்காய் என்னுமாறும். குலவிப்படர்ந்த= ஒளியுடன் படர்ந்த. கடுப்ப= ஒப்ப. அடர்ந்து மோதும்= நெருங்கி மோதும். தோகை= மயிலே.

**பொழிப்புரை** : கற்றூணைக் காலால் இடறும் மதயானையின் தோலை, உடலை மூடும் சட்டை என்று கொண்டவரும், எட்டுத் தோள்களுடையவரும், நெற்றிக்கண்ணரும் ஆகிய சிவபிரானின் சடைக்காட்டின் செம்மை நிறத்திற்கு ஒப்பான செந்நிறம் ஒளிரும் நீ; புதிதாக மலர்ந்த செவ்வாம்பல்மலரின் செந்நிறம், நமது வாயிதழ்கள், விரல்கள் ஆகியவற்றின் செம்மைக்கு ஒப்பாகாது என்று அதைஎடுத்து எறிவதைப்போல; காதணியை நெருங்கி மோதும் அம்புபோன்ற கண்களையுடைய மயிலே! கீழ்க்கடலில்

தோன்றும் பவளம் ஒத்த அம்மனைக்காய், ஒளியுடன் விளங்கிப்படர்ந்த பவளக்கொடியை விலக்கி மேலெழும் இளஞாயிறுபோல் சிவந்த உனக்கு உதவும் அம்மனைக்காய் ஆகியவற்றை எறிந்து; சிவந்தபவள அம்மானை ஆடியருள்க. ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள உத்தமராகிய அருள்தரு வெண்ணாவலீசரின் இடப்பால் அமர்ந்த பசிய கொடியே! அம்மானை அடியருள்க.

( 5 ) எங்கள்பெரு மான்அடி முடிகாண்பல் எனஉம்பர் எட்டிமுட் டிப்பறந்தும்
இருநிலம் இடந்துநனி எய்த்தவரை ஏய்த்தனர் எனப்பலர் உரைப்பமுளரி
மங்கைநின(து) அம்மனைகை பற்றமுடியா மையால் வாளாஇ ருப்பமறைமின்
வாக்(கு)உடையள் ஆதலின் கைப்படா முன்னம்இது வவ்வினேன் எனஉரைத்துச்
செங்கையில் உறப்பற் றிடாதுவெங் காமமும் சினமும்ஒரு வாஒருதவன்
தெளிவந்த மாதவர்முன் நாணல்போல் நாணிய திருப்பெணுடன் நாண்கொளநின்
அங்கையின் உறத்தோ(டு) அசைந்(து)ஆட வளைஆட அம்மானை ஆடியருளே
அத்திவனத்(து) உத்தமர் இடத்(து)அமர் பசுத்தகொடி அம்மானை ஆடியருளே.

**குறிப்புரை :** காண்பல்= காண்போம். எட்டி முட்டிப் பறந்து= அடைந்து முட்டியும் பறந்தும். ( நான்முகன் ) இருநிலம் இடந்து= பெரியபூமியைத் தோண்டி. ( திருமால் ). எய்த்தவர்= களைத்தவர்கள். ஏய்த்தனர்= ஒத்தனர். முளரிமங்கை= திருமகள். வாளாஇருப்ப= சும்மா இருக்க. மறைமின்= பிரமதேவனின் மனைவி - கலைமகள். வாக்கு உடையள்= சொல்வன்மையுடையவள் ஆதலால். கைப்படா முன்னம்= தொடுமுன்னரே. வவ்வினேன்= பிடித்துவிட்டேன். பற்றிடாது= பிடிக்காமல். ஒருவா= நீங்காத. தவன்= ஏமாற்றுக்காரன் - எத்தன். நாணிய= வெட்கப்பட்ட. திருப்பெணுடன்= தெய்வமகளிர் இருவரும் உடனடியாக. அங்கையின் உற= உள்ளங்கையில் பற்றி. தோடு= குண்டலம். வளை= வளையல்.

**பொழிப்புரை :** எங்கள் சிவபிரானின் திருமுடியையும் திருவடியையும் காண்போம் என்று, நான்முகன் அன்னமாய்ப் பறந்து தேவருலகை அடைந்து முட்டி மேலும்பறந்தும், திருமால் பெரிய பூமியை மிகவும் தோண்டியும் காணவியலாது களைத்தனர் என்று பலரும் கூறவும் செவிகொள்ளாமல், நீஎறிந்த அம்மனைக் காயினைப் பிடிக்கவியலாமல் திருமகள் சும்மாஇருக்கவும்; நான்முகன்மனைவி சொல்வன்மையளாதலின் அவ்வம்மனைக்காயினைத் தன்செங்கையால் பிடிக்காமலேயே பிடித்துவிட்டேன் என்றுசொன்னதால்; கொடிய காமமும் சினமும் நீங்காத ஏமாற்றுக்காரன், மனம்தெளிந்த மாதவத்தோர்முன் வெட்கித்தலை குனிவதுபோல் இருவரும் உன்முன் நாணமுற, நீ அவ்வம்மனையை உனது காதணியாகிய குண்டலம் ஆட, கைவளையல் குலுங்கப் பிடித்து அம்மானை ஆடியருள்க. ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள உத்தமரின் இடப்பாகம் கொண்ட பசிய கொடியே! அம்மானை ஆடியருள்க.

( 6 ) **வேறு**

குரும்பை அனைய பொம்மல்முலைக் கொடிநுண் இடையார் கொழுநரொடும்
கூடிக்கலவி அயர்ந்துவிரைக் கொழுநாண் மலர்மென் மாலையொடு
இரும்பை அரவம் உயிர்த்தசுடர் எறியும் மணிமா லையும்வெறுப்புற்(று)
எறியச் சிதறி மறுகினிடை இமைக்கும் மணியைக் குரீஇனங்கள்
சுரும்பை அகலா மலர்த்தருவில் தொடுத்த சிறுகூட்(டு) உய்க்களழும்
சுடர்போய் தூய்மா னதவாவி துன்னும் செழும்பா சடைக்கமல
அரும்பை அலர்த்தும் பெரும்சோணாட்(டு) அர(சு)ஆ டுகபொன் அம்மனையே
அமுதப் பெருமா னொடுவரும்பெண் அமு(து)ஆ டுகபொன் அம்மனையே.

**குறிப்புரை :** குரும்பை= தென்னங்குரும்பை. பொம்மல்= திரட்சி. விரைக் கொழு நாண்மலர்= மணக்கும் பருத்த புதுப்பூ. இரும் பை= பெரிய படம். உயிர்த்த= ஈன்ற. இமைக்கும்= ஒளிரும். குரீஇனங்கள்= குருவி இனங்கள். சுரும்பை அகலா= வண்டுகள் இடையறாது மொய்க்கும். உய்க்க= வைக்க. மானதவாவி= மானதவாவி என்ற பெயருடைய தேவருலகக் குளம். பாசடைச் செழுங்கமலம். பாசடை= பசியஇலை. அலர்த்தும்= மலர்த்தும்.

**பொழிப்புரை :** தென்னங்குரும்பை போல் திரட்சியுடைய முலைகளும், கொடிபோன்று நுண்மையான இடுப்பும் பெற்றமகளிர், தம்கணவருடன் கூடிக்கலந்து அனுபவித்தபின், மணக்கும் பருத்த மலர்களால் ஆனமாலையுடன், பெரிய படமுடைய நாகம் ஈன்ற ஒளிபொருந்திய மணிகளால் ஆன மாலையையும் வெறுத்துத் தெருவில் எறிய, தெருவில் சிதறிக்கிடந்து ஒளிரும் மணிகளைக் குருவிஇனங்கள்

கொண்டுபோய், வண்டுகள் இடையறாது மொய்க்கும் மலர்களுடைய மரங்களில் பின்னிய தமது சிறிய கூட்டில் வைக்க, அந்த மணிகளில் வெளிப்பட்ட ஒளிபரவித், தேவருலக மானதக் குளத்தில் செறிந்திருக்கும் பசிய இலைகளுடன் கூடிய செழித்த தாமரைமொட்டுகளை மலரச்செய்யும் வளமான சோழநாட்டு அரசியே! அழகிய அம்மானை ஆடுக. அமுதப்பெருமானான அருள்தரு வெண்ணாவலீசருடன் எழுந்தருளும் பெண்ணமுதே! அழகிய அம்மானை ஆடுக.

( 7 ) கள்ள முளரிப் போதின்முகம் கருகிப் படுத்த செம்மல்கழீஇக்
கவின்நாள் நறவ மலர்மேய்ந்து கடைவாய் குதட்டும் புனிற்(று)எருமை
வள்ளம் அனைய வாய்க்குமுத மடுவை உழக்கி நெடுங்கோட்டு
வளர்தென் அரு(கு)உற்(று) உடல்தினவு மாற்ற உரிஞ்ச உதிர்பழமாத்
துள்ள உருள்ஒன்(று) உடைகவரி துளங்க வருணன் தலைமோதித்
துடித்து விழக்கூன் குலைசாய்த்துத் தோட்டுக் கதலி தலைசாய்க்கும்
அள்ளல் வயல்சேர் பெருஞ்சோநாட்(டு) அர(சு)ஆ டுகபொன் அம்மனையே
அமுதப் பெருமா னொடுவரும்பெண் அமு(து)ஆ டுகபொன் அம்மனையே.

**குறிப்புரை** : கள் அ= தேனுடைய. முளரிப்போது= தாமரைமொட்டு. முகம்= வடிவம். கருகி= கூம்பி. படுத்த= மூடிய - குவிந்த. செம்மல் கழீஇ= பழம்பூவை விலக்கி. கவின்= அழகிய. நறவ நாள்மலர்= தேனுடைய அன்றலர்ந்தபூ. புனிற்று= ஈன்றணிமை வாய்ந்த. வள்ளம்= சிறுதோணி. குமுதமடு= குவளைப்பூ மலர்ந்துள்ள நீர்நிலை. உழக்கி= கலக்கி. கோடு= வளைவு. தென்= தென்னை. உரிஞ்ச= உராய. உதிர் மாபழம்= உதிர்ந்த பெரிய நெற்று. துள்ள உருள் ஒன்று= உதிர்ந்து உருண்டுவரும் ஒருநெற்று. கவரி= எருமை. துளங்க= வருந்த. வருணன் தலைமோதி= அதன் தலையில் மோதி. தோட்டுக் கதலி= இலைகளுடன் கூடிய வாழை. கூன்குலை சாய்த்துத் தலைசாய்க்கும்= வளைந்த தாரினைச் சாய்த்துக் கீழேவிழும். அள்ளல்= சேறு.

**பொழிப்புரை** : தேனுடைய தாமரைமலரின் வடிவம்கூம்பி இதழ்மூடிய பழம்பூவைவிலக்கி,தேனுடைய அழகிய அன்றலர்ந்த மலரினைமேய்ந்து, கடைவாயில் குதட்டும் ஈன்றணிமைவாய்ந்த எருமை; சிறுதோணி போன்ற இடமுடைய குமுதமடுவைக் கலக்கி, உயரமான வளைந்த தென்னையில் தனது உடல்திணவு தீர்க்க உராய, அதனால் உதிர்ந்து உருண்டுவிழும் பெரியநெற்று ஒன்று எருமைவருந்த அதன் தலையில் மோதித்துள்ளி விழுந்ததால், வளைந்த தாரினையும் இலையையும் உடைய வாழை கீழேவிழும். இத்தகு வளமான சேறுடைய வயல்கள்கொண்ட பெரியசோழநாட்டு அரசியே! அழகிய அம்மனைஆடுக. அமுதப்பெருமானாகிய அருள்தரு வெண்ணாவலீசருடன்வரும் பெண்ணமுதே! அழகியஅம்மனை ஆடுக.

( 8 ) பாரப் புறமுள் கனியிழிந்த பசுந்தேன் சாறு திரைஎறிந்து
பரவை புரையப் பெருகிநெடும் படப்பை தொறும்புக்(கு) உலவமடல்
ஈரக் கதலிக் குலமும்மிடற்(று) ஏந்தும் குலைச்செங் காய்ப்பசிய
இளமென் கமுகும் முதிர்சுவைநெட் டிலக்கன் னலும்வான் எட்டிஅப்பால்
வீரக் குலிசப் படைக்கடவுள் வெய்ய தழல்கண் கடைக்காட்டும்
விறல்மா மடங்கல் ஆதனத்து வியன்மண் டபத்துக்(கு) அலங்காரம்
ஆரப் பொலியும் பெருஞ்சோணாட்(டு) அரசுஆ டுகபொன் அம்மனையே
அமுதப் பெருமா னொடுவரும்பெண் அமு(து)ஆ டுகபொன் அம்மனையே.

**குறிப்புரை** : பாரப் புறமுள் கனி= கனமானதும் வெளிப்பக்கம் முள்ளுடையதுமாகிய பலாக்கனி. திரைஎறிந்து= அலை வீசி. பரவை புரைய= கடல்போல். படப்பை= தோட்டம். மடல் ஈரக்கதலி=பசிய இலையுடைய வாழை. மிடற்று ஏந்து= கழுத்தில் பெற்ற. பசிய= வளமான. கமுகு= பாக்கு. கன்னல்= கரும்பு. வான் எட்டி= வானத்தை அடைந்து. வீரக் குலிசப்படை= ஆற்றல் மிக்க குலிசம் என்ற ஆயுதம். கடவுள்= இந்திரன். வெய்ய தழல்கண் கடைகாட்டும்= கொடிய நெருப்புப்போன்ற கடைக்கண்ணுடைய. மடங்கல் ஆதனம்= அரியணை - சிம்மாதனம். ஆரப்பொலியும்= மிகச்சிறந்து விளங்கும்.

**பொழிப்புரை** : கனமானதும் வெளிப்புறம் முட்களுடையதுமாகிய பலாக்கனியிலிருந்து வடிந்த வளமன இனியசாறு, அலைவீசிக் கடல்போல் பெருகிப் பெரிய தோட்டங்கள்தோறும் புகுந்துபரவியதால்; பசிய இலையுடைய வாழைக்கூட்டமும், குலையினைக்கழுத்தில் பெற்றதும் வளமான செங்காய்க்குலைகள் உடையதும் ஆகிய மென்மையான இளம்பாக்குமரமும், மிக்க இனிமையுடையதும்

நீண்ட தோகை பெற்றதும் ஆகிய கரும்பும் வானுலகை அடைந்து, ஆற்றல்மிக்க குலிசம் என்ற ஆயுதம் ஏந்திய இந்திரனது அரண்மனையில் கொடிய நெருப்புப்போன்ற கடைக்கண்ணுடைய அரியணை பெற்ற அகன்றமண்டபத்திற்கு மிக்க அலங்காரம் தருவதாக விளங்கும் வளமான சோழநாட்டு அரசியே! அழகிய அம்மனை ஆடுக. அமுதப்பெருமானாகிய அருள்தரு வெண்ணாவலீசருடன்வரும் பெண்ணமுதே! அழகிய அம்மனை ஆடுக.

( 9 ) வாக்கும் பிரசச் செழும்கொழுநாள் மலர்பெய் நறவ மலர்கொய்யும்
வண்மைத் தருமென் மலர்த்தேன்வாய் வைத்துக் குடித்துக் குமட்(டு)அளிகள்
காக்கும் தகரக் கரியகுழல் கடவுட் சாதி மகளிர்முலை
கழுவி இழிந்து நெற்சூட்டுக் கழனி புகுந்து வண்டலிட்டுப்
போக்கும் வரவும் நீக்கும்அலைப் புனல்செங் கமலம் உகுத்(து)அதுகண்
பொதியும் கரைத்துக் கால்வழிபோய்ப் புணரி நான்கு மூன்றையும்மே(டு)
ஆக்கும் பொழில்ஆர் பெரும்சோணாட்(டு) அர(சு)ஆ டுகபொன் அம்மனையே
அமுதப் பெருமா னொடுவரும்பெண் அமு(து)ஆ டுகபொன் அம்மனையே.

**குறிப்புரை** : வாக்கும்= சொரியும். நறவமலர்= தேன்பொருந்திய மலர். வண்மைத் தரு= செழித்த மரம். குமட்டு அளி= கக்கும் வண்டு. காக்கும்= மொய்த்திருக்கும். தகரம்= மயிர்ச்சாந்து. இழிந்து= கீழிறங்கி. நெல் சூட்டு= நெல்லை உச்சியில் பெற்ற. வண்டலிட்டு= மேடாக்கி. அலைப்புனல்= அலையுடைய நீர். உகுத்து= உதிர்த்து. கண்பொதி= பெரிய - அகலமான கரை. கால்= வாய்க்கால். புணரி நான்கு மூன்று= ஏழுகடல்.

**பொழிப்புரை** : தேன்பொருந்திய மலர்களைப் பறிக்கத்தரும் மரங்களில் மலர்ந்த செழித்தகொழுத்த புதுப்பூ சொரியும் மென்மையான மலர்களின் தேனை உறிஞ்சி, அதனை வண்டுகள் மயிர்ச்சாந்து தடவிய கரிய கூந்தலுடைய சிறந்த மகளிரின்கூந்தலில் மொய்த்துக் கக்க, அத்தேன் அவர்தம்முலைகளைக் கழுவி இறங்கி, நெல்லினை உச்சியில் பெற்ற நன்செய்யில் புகுந்து, தேங்கிக்கிடக்கும் அலைநீரில் உள்ள தாமரை மலர்களின் இதழ்களை உதிர்த்து அவ்விடத்தை மேடாக்கி, அங்கிருந்த அகலமான கரையை உடைத்துக்கொண்டு வாய்க்கால் வழிஓடி ஏழ்கடல்களையும் மேடாக்கும் சோலைகள் சூழ்ந்த வளமான சோழநாட்டு அரசியே! அழகிய அம்மனை ஆடுக. அமுதப்பெருமானாகிய அருள்தரு வெண்ணாவலீசருடன் வரும் பெண்அமுதே அழகிய அம்மனை ஆடுக.

( 10 ) புடைக்கும் களபக் குரும்பைமுலைப் பொலம்பூங் கொம்பர் அன்னமின்னார்
பொலியும் கனக எயில்பரப்பிப் புரவும் அணிநின்(று) ஒளிர்மனைமீக்
கிடைக்கும் கடவுள் மயன்மதவெண் கிரிநா(டு) அமைத்துத் தெளிந்(து)அமைத்த
கிளர்கொள் பளிக்கு வேதிகைமேல் கெழும இருந்(து)அஞ் சனம்விழிவாள்
படைக்கும் நறுஞ்சிந் துரநுதற்கும் பம்ம எழுதி எழும்கமம்சூல்
பசுஞ்செல் அளகம் உதறமணப் பலகுப் பையும்வீழ்ந்(து) ஒருவான்யா(று)
அடைக்கும் வளமைப் பெரும்சோணாட்(டு) அர(சு)ஆ டுகபொன் அம்மனையே.
அமுதப் பெருமா னொடுவரும்பெண் அமு(து)ஆ டுகபொன் அம்மனையே.

**குறிப்புரை** : புடைக்கும் குரும்பை= திரண்ட தென்னங் குரும்பை. பொலம்= பொலிவு. மின்னார்= ஒளிரும் மகளிர். கனக எயில்= பொன்னாலான மதில். புரவும் அணிநின்று= காக்கும் அழகில் நிலைத்து. மீகிடைக்கும்= மேலே உள்ள இடம் - தேவருலகம். . மயன் மதவெண் கிரிகடவுள் நாடு அமைத்து= தேவதச்சன் அமைத்த மலையாக விளங்கும் வெள்ளையானையுடைய - அமராவதிநகரை அமைத்து, தெளிந்து அமைத்த= ஆராய்ந்து அமைத்த. வேதிகை= மேடை. கெழும இருந்து= நட்புடன் இருந்து. வாள் விழிபடை= வாள்போன்ற விழியாகிய படை. நறும்சிந்துர நுதல்= மணக்கும் சிந்துரப்பொடிபூசிய நெற்றியில் அமைந்தபுருவம். பம்ம= பொலிவுற. சூல் கமம் எழும் பசும்செல் அளகம்= சூல் முழுமையாகக் கொண்டு மேலெழும் வளமான மேகம் போன்ற கூந்தல். பலமணக்குப்பை= பலவகை மணப்பொருள்களின் குவியல். ஒரு வான் யாறுஅடைக்கும் = ஒப்பற்ற சிறந்த ஆற்றுப்போக்கைத் தடுக்கும்.

**பொழிப்புரை** : திரண்ட தென்னங்குரும்பை போன்ற முலைகளுடைய பொலிவார்ந்த மென்மையான மலர்க்கொம்புபோன்ற மின்னல் ஒத்த மகளிர் வாழ்வதும், பொன்னாலான மதில்சூழ்ந்து காப்பதும், அழகில் நிலைத்து ஒளிர்வதும் ஆகிய வீடுகளுக்குமேல் வானில் தேவருலகை அமைத்து அதில், தேவதச்சன் மூலம், மலையாக விளங்கும் வெள்ளையானை உள்ள பகுதியை - அமராவதிநகரை - அமைத்து , அதில்

ஆராய்ந்து அமைத்த ஒளிரும் பளிங்கு மேடைமேல் நட்புடன், வாள்போன்ற விழியாகிய படை, மற்றும்மணக்கும் சிந்துரப்பொடி பூசிய நெற்றியில் உள்ள புருவம் ஆகியவற்றுக்குப் பொலிவுற மைஎழுதி வீற்றிருந்து, முழுமையாகச்சூல் கொண்ட வளமான மேகம்போன்ற உன்கூந்தலை நீ உதற, அதில் இருந்து பலவகை மணப்பொருள்களும் சிதறிவீழ்ந்து ஒப்பற்ற சிறந்த ஆற்றுப்போக்கினைத் தடுத்து அடைக்கும் மிக்க வளம்வாய்ந்த சோழநாட்டு அரசியே! அழகிய அம்மனை ஆடுக. அமுதப்பெருமானாகிய அருள்தரு வெண்ணாவலீசருடன் வரும் பெண்ணமுதே! அழகிய அம்மனை ஆடுக.

அம்மானைப்பருவம் முற்றிற்று

*******************************************************

## நீராடற் பருவம்

**************************

( 1 ) வேதமொரு நான்கும்நெடு நாள்துருவி யும்தெரிவில் மெய்ப்பரம் பொருள்வடிவமா
விரிபுனல் மலிந்துள எனச்செங் கரங்கொடு வியப்பில் திரட்டிடாமே
மாதவன்என் முன்னவற்(கு) ஆம்என்ன மூரிவளை வாரிக் குவித்திடாமே
மழைமதம் ஒழுக்குகர டக்கறை அடிக்(கு)என்(று)ஓர் வண்கோடு நாடிடாமே
தா(து)அவிழ் அலங்கல்அர மாதர்மான் மதம்நாறு தண்தரள மாலைசூட்டித்
தத்தம் குயத்தைநனி எள்ளக் குரும்பைகொடு தாழைவான் நோக்கிநிற்கும்
போதக வனம்குடி புகுந்தமென் காமர்பிடி பொன்னிநீ ராடியருளே
பொருமானை வைத்தகைப் பெருமானை மருவுமான் பொன்னிநீர் ஆடிஅருளே.

**குறிப்புரை** : துருவியும்= நுட்பமாய் ஆராய்ந்தும். தெரிவு இல்= அறியவியலாத. மெய்= ஞானம். மலிந்து= நிறைந்து. திரட்டிடாமே= திரட்டி எடுத்துக்கொள்ளாமலும். மாதவன்= திருமால். முன்னவன்= அண்ணன். மூரிவளை= வளைந்த சங்கு. மழைமதம் ஒழுக்கு= மழைபோல் மதம்சொரியும். கரடக் கறைஅடி= மதச்சுவடும் உரல்போல் கால்களும் கொண்ட விநாயகர். வண்கோடு= வளமான மரக்கிளை. தாது அவிழ்= தேன் சொரியும். அலங்கல்= மாலை. நாறு மான்மதம்= மணக்கும் கத்தூரி. தரளமாலை= முத்துமாலை. குயம்= கொங்கை. எள்ள= இகழச்செய்து. தாழை= தென்னைமரம். போதக வனம்= ஆனைக்கா. காமர்பிடி= அழகிய பெண்யானை. பொருமான்= போரிடவந்த மான். கைவைத்த= கையில் ஏந்திய. மருவுமான்= தழுவும் மான்போன்றவளே.

**பொழிப்புரை** : நான்கு வேதங்களையும் நெடுநாள் நுட்பமாக ஆராய்ந்தும் அறியவியலாத ஞானவடிவான மேலானபொருள், காவிரியில் எங்கும் பரவியுள்ள தண்ணீராக நிறைந்துள்ளது என்று திரட்டி எடுத்துக் கொள்ளாமலும்; தன் அண்ணனான திருமாலுக்கு உதவும் என்று காவிரியில் உள்ள வளைந்த கோடுகளையுடைய சங்குகளை வாரிக்குவித்துக் கொள்ளாமலும்; மழைபோல் மதம்சொரிவதால் மதச்சுவடும், உரல்போன்ற கால்களும்கொண்ட விநாயகர் சாப்பிட என்று வளமான மரக்கிளையை நாடாமலும்; தேன்சொரியும் மலர்மாலை சூடிய தெய்வமகளிர் கத்தூரி பூசி, குளிர்ந்த முத்துமாலை சூட்டியும் தத்தமது கொங்கைகள் தென்னங் குரும்பைபோல் இல்லை என்று இகழுமாறு குரும்பைகளுடன் வானளாவ வளர்ந்துள்ள தென்னை மரங்களுடைய ஆனைக்காவில் நிலையாக எழுந்தருளியுள்ள அழகிய பெண்யானையே காவிரியில் நீராடியருள்க. போரிடவந்த மானைத் தன்ஒருகையில்பிடித்த பெருமானாம் சிவபிரானைத் தழுவும் மான்போன்றவளே! காவிரியில் நீராடியருள்க.

**விளக்கம்** : காவிரியாறு, பொன்துகள் மலிந்த மைசூர் பகுதியில் பாய்ந்து வருவதால் அதில் பொன்துகள் காணப்டுவதுபற்றிப் பொன்னி எனப்பெற்றது. - காரணப்பெயர். பதிமொழியாகிய திருமுறை போல், வேதங்கள் பதிமொழியன்றிப் பசுமொழியாதலின் பதியை அறியாளன்றார். தாருகவனத்து முனிவர்கள் பகைத்து ஏவிய மானைச் சிவபிரான் தம்கையில் பிடித்துள்ளார் என்பது புராணவழக்கு.

( 2 ) நிகர்அறு பிறங்கல் பிறந்துமந் தாகினி நெடுங்கவலை உறஎழுந்து
நிறைமலர்க் கொன்றைதாள் உந்திக் கயற்கொடி வில்நேசிக்க விபுலைநடவா
மகரம்உல வும்கடலி னும்சென்று விளையாடி வனநீ லம்குமுதம்மென்
மலர்பூத்து நின்போல் இருந்ததும் அலால்அம்மை வரவேற்று நின்றஅதனால்
பகர்அரிய செங்கதிர்ப் புத்தேள் வலம்சூழ் பசும்பொன் பிறங்கல்என்னப்

பரவிவலம் வரஎண் திகைத்தலை விழுங்கிவிண் பாய்ந்துபொலி யும்கோபுரப்
புகர்முக வனம்குடி புகுந்தமென் காமர்பிடி பொன்னிநீர் ஆடியருளே
பொருமானை வைத்தகைப் பெருமானை மருவுமான் பொன்னிநீ ராடியருளே.

**குறிப்புரை :** பிறங்கல்= மலை - இமயமலை. மந்தாகினி= கங்கை. நெடுங்கவலை= மிக்க கவனம். கொன்றைதாள்= கொன்றைமலர். தாள் உந்தி= கால்களால் நடந்து. கயற்கொடி வில்= மீன்சின்னம்பொறித்த கொடியின் ஒளி. விபுலை நடவா= பூமியில்நடந்து. மகரம்= மீன். விளையாடி= பொழுதுபோக்கி. வனம்= அழகிய. நீலம் குமுதம்= நீலமலர் செங்குமுதமலர் - இவைமுறையே உடல் நிறம், வாயிதழ்நிறம் குறித்தன. அலால்= அல்லாமல். செங்கதிர்ப் புத்தேள்= செஞ்ஞாயிறாகிய தெய்வம். வலம்சூழ்= வலம்வரும். பசும்பொன் பிறங்கல்= மாமேருமலை.திகைத் தலை= திசை இடம், புகர்முக வனம்= ஆனைக்கா.

**பொழிபுரை :** ஒப்பற்ற இமயமலையில் பிறந்து, கங்கை மிக்ககவனம்கொள்ளப் புறப்பட்டு, நிறைந்த கொன்றைமலர் போன்ற மென்மையான கால்களால் நடந்து, மீன்கொடியின் ஒளி பரவுதலை விரும்பி நடந்தும் - சென்றும், மீன்கள் உலாவும் கடலில்( செம்படவ மகளாக) பொழுதுபோக்கியும், அழகிய நீலமலரும் செங்குமுதமலரும் முறையே உனது திருமேனி, வாயிதழ் ஆகியன போன்று இருந்தமை மட்டுமன்றி வரவேற்றும் நின்ற காரணத்தால் சொல்லுதற்கரிய செஞ்ஞாயிறாகிய தெய்வம் மாமேருமலை என்று வலம்வர, எட்டுத்திசைகளயும் தன்அருளால் கவர்ந்து வானுற ஓங்கிப் பொலியும் கோபுரமுடைய ஆனைக்காவில் நிலையாக எழுந்தருளியுள்ள அழகிய பெண்யானையே! காவிரியில் நீராடியருள்க. போரிடவந்த மானைத் தன் ஒருகையில் பிடித்த பெருமானாம் சிவபிரானைத் தழுவும் மான்போன்றவளே! காவிரியில் நீராடியருள்க.

**விளக்கம் :** அம்மை, இமயமலையில் பிறந்தவளாதலின் இமயத்துக் கங்கை, அம்மைமேல் மிக்க கவனம் கொண்டாள் என்க. செம்படவப்பெண்ணாக அம்மை அவதரித்ததைத் திருவிளையாடற் புராணம் வலைவீசின படலம் கூறும்.

( 3 ) கயல்ஆர் மணிக்குவை கொழித்துச் சுழித்துவரு கங்கா நதிக்குநினது
கால்தோய வீறு)ஆய(து) உன்மேனி முழுதுஎன் கண்தோய யான்பெறுவதால்
மயல்ஆர் மலப்பகை அலப்பிய தலைப்பொதி மலைக்குறு முனிக்கும்இன்று
மகிழ்வெய்தும் எனல்போல் இரைத்துத் திரைக்கைகொடு வம்என அழைத்தஅதனால்
வயல்ஆர் மலர்த்தடன் உழக்கிப் பழுக்குலை மரத்துத் தகட்(டு)அகட்டு
வாளைதாய் வான்நதிச் சுறவொ(டு)உற வாகும்வள மழைமதக் கரடகும்பப்
புயல்ஆர் வனம்குடி புகுந்தமென் காமர்பிடி பொன்னிநீ ராடியருளே
பொருமானை வைத்தகைப் பெருமானை மருவுமான் பொன்னிநீ ராடியருளே.

**குறிப்புரை :** ஆர்= அருமை. கால்தோய= திருவடி பட. வீறு ஆயது= பெருமை பெற்றது. மேனி= ஒளி - அருளொளி. மயல்ஆர் பகைமலம்.= மயக்கம்தரும் பகையாகிய மும்மலம். அலப்பிய= கெடும். . தலை= மேலான. பொதிமலைக் குறுமுனி= பொதியமலை வாழ்அகத்தியமுனிவர். மகிழ்வுஎய்தும்= மகிழ்வார். இரைத்து= ஒலிஎழுப்பி - அழைத்து. வம்= வருக. தடன்= தடம் - குளம். உழக்கி= கலக்கி. பழுக்குலை மரத்து= பழங்கள் குலையாகப்பழுத்த மரத்தின்மேல். வாளைதாய்= வாளைமீன்கள் தாவி. வான்நதிச் சுறவு= வானத்துக் கங்கையில் உள்ள சுறாமீன். வளமழைமதக் கரடக்கும்பப் புயல்= பெருமழைபோல் மதம் சொரிவதால் மதம்பாய் சுவடுபெற்ற மத்தகமுடைய மேகமொத்த யானை.

**பொழிப்புரை :** கெண்டை மீன்களையும் மிக்க நவமணிக்குவியலையும் செழிப்புறுத்திச் சுழித்துவரும் கங்கைநதி, உனது திருவடிபடுதலால் பெருமைபெற்றது. உன்அருளொளி என்பால் தோய்வதால் என் மயக்கம் தரும் பகையாகிய மும்மலங்களும் கெடும். நீ காவிரியாகிய என்கண் நீராடினால் மேலான பொதியமலை அகத்தியமுனிவர் மகிழ்வார் என்பதுபோல் ஒலிஎழுப்பி - அழைத்து, வருகஎன்று அலையாகிய கைகாட்டிக்காவிரி உன்னை அழைப்பதனால்; வயலுடன்கூடிய மலர்கள் மலர்ந்த குளத்தைக் கலக்கி, பழுத்த குலைகளுடன் கூடிய மரத்திற்கும்மேல் தகடுபோன்ற வயிற்றினையுடைய வாளைமீன் தாவிப்போய் கங்கைச்சுறாமீனுடன் உறவுகொள்வதும்; வளமான பெருமழைபோல் மதம்சொரிவதால் மதச்சுவடுடைய மத்தகம்பெற்ற, கார்மேகம்ஒத்த யானைகள் வாழும் ஆனைக்காவில் நிலையாக எழுந்தருளியுள்ள மென்மையான அழகிய பெண்யானையே! காவிரியில் நீராடியருள்க. போரிடவந்த மானைத் தன் ஒருகையில் பிடித்த சிவபிரானைத் தழுவும் மான்போன்றவளே! காவிரியில் நீராடியருள்க.

**விளக்கம்** : அகத்தியரின் கமண்டலநீரே காவிரிஎன்ற புராணவழக்குக் காரணமாக, அம்மை காவிரியில் நீராடினால் அகத்தியர் மகிழ்வார் என்றார்.

( 4 ) முறைபுகும் வழக்கா(று) இழுக்காது கோலோச்சு முரு(கு)ஆத்தி அபயன்மகிழ
முடியில்வெள் என்பையே கோத்(து)ஆரம் இட்டவரை முத்(து)ஆரம் இட்டஅதனால்
மறைபுகும் மணித்தாலர் முக்குறும்(பு) அற்றவர் மருந்(து)உண(வு) அறாதவாயர்
வாழ்த்துவதும் அன்றிநின் ஒருகளி(று) உளத்துள்ளும் வழியொழுகி நிற்பதாற்செந்
நறைபுகும் அலங்கல்அசை திண்தோளர் மந்தர நகும்பரூஉ மார்பம்உருவும்
நகிற்கொடியர் மாடத் துகிற்கொடிகள் போய்வான் நதிப்புனலை நக்கும்ஒருகைப்
பொறைபுகும் வனம்குடி புகுந்தமென் காமர்பிடி பொன்னிநீ ராடியருளே
பொருமானை வைத்தகைப் பெருமானை மருவுமான் பொன்னிநீ ராடியருளே.

**குறிப்புரை** : முறைபுகும்......... அபயன்மகிழ, ஒருகைப்பொறை...........காமர்பிடி பொன்னிநீராடியருளே என்று கூட்டுக. முறை= நீதி. முருகு ஆத்தி= தேன்பொருந்திய ஆத்திமாலை. அபயன்= சோழமன்னன் முடி= தலை. வெள் என்பையே கோத்து= திருமாலின் வெண்மையான எலும்பைக்கோத்து. ஆரம் இட்டவர்= மாலையாக அணிந்த சிவபிரான். முத்தாரம் இட்ட அதனால்= முத்துமாலை சூட்டி மணந்துகொண்டதால். மறைபுகும்= வேதம் ஓதும். மணித்தாலர்= சிறந்த நாவினர் ஆகிய நான்முகன். முக்குறும்பு அற்றவர்= மும்மலச்சேட்டை இல்லாத முனிவர்கள். மருந்து உணவு அறாத வாயர்=- அமிதத்தை இடையறாதுஉண்ணும் தேவர்கள். ஒருகைப் பொறை= தும்பிக்கையாகிய ஒற்றைக்கையுடைய. ஒருகளிறு= ஒப்பற்ற நாயகர். வழிஒழுகி நிற்பதால்= கருத்துப்படி நடப்பதால்.

**பொழிப்புரை** : தனது தலையில் திருமாலின் வெண்மையான எலும்புகளைக்கோத்து மாலையாக அணிந்த சிவபிரானுக்கு முத்துமாலை சூட்டி மணந்துகொண்டதால், வேதம்ஓதும் சிறந்த நாவினன்ஆகியநான்முகன், மும்மலச்சேட்டை இல்லாதவர் ஆகிய முனிவர்கள், அமுதமுண்பவராகிய தேவர்கள் முதலியோர் உன்னை வாழ்த்துவது மட்டுமன்றி, உனது ஒப்பற்ற மகன் - விநாயகர் - உள்ளத்திலும் நீ இருந்து கருத்துப்படி நடப்பதால்; புதுத்தேன் பொருந்திய மலர்மாலை அசைய, மந்தர மலையையும் இகழும் வலிமையான தோள்களுடையவராய் விளங்குகிற கணவனின் தோளாகிய மந்தர மலையையும் இகழும் உருவத்துடன் மார்பில் இடம்பெற்ற முலைகளுடைய கொடிபோன்ற மகளிரின் மாளிகையில் கட்டப்பெற்ற துணிக்கொடிகள், உயர்ந்துபோய் கங்கைநீரினைத் தடவும் ஊராகிய ஒற்றைக்கையுடைய ஆனைகள் வாழும் ஆனக்காவில் நிலையாக எழுந்தருளியுள்ள அழகிய பெண்யானையே! நீதிநெறியில் வழுவாது ஆட்சிபுரிந்தவர்களும், தேன்பொருந்திய ஆத்திமாலை அணிந்தவர்களுமாகிய சோழர்மகிழக் காவிரியில் நீராடியருள்க. பகைத்துவந்த மானினை ஒருகையில் பிடித்த சிவபிரானைத் தழுவும் மானே! காவிரியில் நீராடியருள்க.

( 5 ) மழைமா நறுங்குழல் கடவுள்மட வார்புடை வளைந்துசூ ழப்பெருந்தா
மரைமலர் இருந்தநறு விரைமலர் அலங்கல்இரு மாதர்நின் பாதம்ஏத்தக்
குழைமா நறுங்கலவை கா(சு)அறைச் சாந்தினொடு குங்குமம் அளாயதோயம்
குணகடல் கலந்(து)அதின் எழும்பருதி சேப்பமென் கொம்பர்போல் இடைநுடங்கத்
தழைமா உறுங்கனி நறுங்கனி உகுத்ததேஞ் சாறுபாய் நாறுநெடுவான்
தடவிப் பசும்புரவி கடவிச்செலும்கதிர்ச் சாமரை எனப்படும்கைப்
புழைமா வனம்குடி புகுந்தமென் காமர்பிடி பொன்னிநீ ராடியருளே
பொருமானை வைத்தகைப் பெருமானை மருவுமான் பொன்னிநீ ராடியருளே.

**குறிப்புரை** : மழை மா நறுஞ்குழல்= கார்மேகம் போன்றதும், நீண்டதும், மலர் மயிர்ச்சாந்து முதலியவற்றால் மணப்பதும் ஆகிய கூந்தல். கடவுள் மடவார்= தேவமகளிர். புடை வளைந்து சூழ=அருகில் சுற்றிலும் சூழ. விரைமலர் அலங்கல் இருமாதர்= மணக்கும் மலர்மாலை சூடிய திருமகள் கலைமகள். காசு= காசுக்கட்டி. அளாய= கலந்த. தோயம்= நீர். குணகடல் = கீழ்க்கடல் - வங்காள விரிகுடா. சேப்ப= செந்நிறம்பெற. மென்கொம்பர்போல் கடவுள்மடவார் இடை நுடங்க புடைவளைந்து சூழ என்று கூட்டுக. தழை= செழித்த. மா உறும்கனி= மிகப்பெரிதான பலாக்கனி. தேஞ்சாறு= இனியசாறு. பாய்= பாய்ந்து. பசும்புரவி= சிறந்த குதிரைகள். கடவிச்செலும்= செலுத்திச் செல்லும். கதிர்ச் சாமரை என= சூரியன் வெண்சாமரையாக விளங்க.

**பொழிப்புரை** : கார்மேகம் போன்றதும் நீளமானதும்; மலர், மயிர்ச்சந்து முதலியவற்றால் மணப்பதும் ஆகிய கூந்தலுடன் மென்மையான பூங்கொம்புபோல் நுடங்கும் இடையுடைய தேவருலக மகளிர் அருகில் சுற்றிலும் சூழ, பெரியதாமரைமலர்களில் இருந்த திருமகள் கலைமகள் இருவரும் உனது திருவடிகளைப் போற்ற; உன்பொருட்டுக் காசுக்கட்டி கூட்டி குழைவாக அறைக்கப்பெற்ற மணக்கும் சந்தனத்தினொடு குங்குமம் கலந்தநீர் கீழ்க்கடலில் கலந்ததால் அதில்எழும் சூரியன் செந்நிறம்பெற; செழித்த பெரியபலாக்கனி, மணக்கும்பிற கனி ஆகியன சொரிந்த இனிய சாறுபாய்ந்து மணக்கும் அகன்றவானைத் தொட்டுச் செல்லும் சூரியன் வெண்சாமரயாக விளங்கும் சிறப்புடைய ஆனைக்காவில் நிலையாக எழுந்தருளியுள்ள மென்மையான இயல்புடைய அழகிய பெண்யானை ஒத்தவளே! காவிரியில் நீராடியருள்க. பகைத்துவந்த மானினை ஒருகையில் பிடித்த சிவபிரானைத் தழுவும் மானே! காவிரியில் நீராடியருள்க.

**விளக்கம்** : காலைச்சூரியன் குங்குமம் கலந்த கடல்நீரில் எழுந்ததால் செந்நிறம்பெற்றது என்றும், மேலெழுந்த சூரியன் செம்மைமாறிக் காட்சிதருவதால் வெண்சாமரை என்றும் கற்பனைசெய்தார்.

( 6 ) **வேறு**

படைவிழி கண்டு மருண்டு வெருண்டு பதுங்கிக் கயல்ஒழியப்
பணிஅணி கண்டம் கண்ட கமம்சூல் பணிலம் முரன்றுஒழியக்
குடைதொறும் ஒருபிடி இடையும் இலங்கு குழைக்கா தும்பாராக்
கொள்ளைக் கொடிகள்மென் வள்ளைக் கொடியொடு கூடி வணங்கல்கொளக்
கடைவிழி விடையவர் சடைஇவர் மாதைக் காதும் போ(து)உறுதல்
காட்டத் துப்பன ஓட்டம் விளர்ப்பக் கருணைக் கொடிநின்றார்த்
தொடைஅலர் சென்னிச் சென்னிப் பொன்னித் துறைநீ ராடுகவே
தும்பிவ னத்(து)உறை அம்பிகை பொன்னித் துறைநீ ராடுகவே.

**குறிப்புரை** : படை= வேற்படை. பணிஅணி கண்டம்= வேலைபாடுடைய அணிகள் அணிந்த கழுத்து. கமம் சூல்= நிறைமாதக்கருப்பம். பணிலம்= சங்கு. குடைதொறும்= நீராடும்போதெல்லாம். பாரா= பார்த்து. கொள்ளைக்கொடிகள்= அளவற்ற கொடிகள். வணங்கல் கொள= வளைய. கடைவிழி= கருணை நோக்கு. சடை இவர் மாது= சடையில் பாயும் கங்கை. காதும்போது= அன்புகொள்ளும்போது. துப்பு அன பவளம்போன்ற. ஓட்டம்= உதடு. விளர்ப்ப= வெளுக்க. கருணைகொடி நின்றார்= விடைக்கொடியுடையவர்= சிவபிரான். சென்னி அலர் தொடை= தலையில் ஆத்திமாலை சூடிய. சென்னி= சோழன். தும்பிவனம்= ஆனைக்கா

**பொழிப்புரை** : வேல்போனற விழியினைக்கண்டு கெண்டைமீன் மருண்டு அஞ்சிப் பதுங்கிஓட; வேலைபாடுடைய அணிகலன் அணிந்த கழுத்தினைக்கண்டு நிறை மாதக்கருக்கொண்ட சங்குகள் முரல, நீராடும்போதெல்லாம் கைப்பிடி அளவான இடுப்பு, ஒளிவிளங்கும் காதணியணிந்த காது ஆகியவற்றைப்பார்த்து மிகுந்த கொடிகளும் மென்மையான வள்ளைகொடிகளும் வணங்க, கருணை நோக்கு உடைய சிவபிரானின் சடையில் உள்ள கங்கையிடம் அவன் அன்புகொள்ளும்போது நிலைமையைக் காட்ட, உன்பவளம்போன்ற உதடு வெளுக்குமளவு, விடைக்கொடி யுடைய சிவபிரானின் ஆத்திமாலை சூடிய சோழனின் காவிரித்துறையில் நீராடுக. ஆனைகாவில் எழுந்தருளியுள்ள அம்பிகையே! காவிரித்துறையில் நீராடுக.

( 7 ) தூவி அனம்பல சூழ்தர நின்றஓர் தோகை மயில்போன்றும்
சுடரும் உடுக்கண் நடுக்கண் அடுத்தஓர் தூமதி யம்போன்றும்
காவி நெடுங்கண் நடுங்கு மருங்குல் கடவுட் சாதியின்வாழ்
கவின்மட வார்புடை சூழ மலர்ந்(து)ஒளிர் கருணைக் கொடிநின்(று)ஏர்
மேவிய துங்கக் கொங்கைகள் கண்டு மிகும்புற் புதம்உடையா
விரியச் சுரிகுழல் சரியப் பிரிய மிகும்கலை வல்லோர்செந்
நாவிரி பாவிரி பூவிரி காவிரி நன்னீர் ஆடுகவே
நாகா டவிஅமர் தோகாய் காவிரி நன்னீர் ஆடுகவே.

**குறிப்புரை** : தூவி= சிறகு. உடு= விண்மீன். நடுக்கண்= நடுவில். காவி= குவளைமலர். நடுங்கு மருங்குல்= அசையும் இடுப்பு. ஏர்= அழகு. துங்கம்= மலை. புற்புதம்= நீர்க்குமிழ். சுரிகுழல் விரிய சரிய

பிரிய= சுருண்ட கூந்தல் கட்டவிழ்ந்து தொங்கிப் பிரிய. செந்நா விரி பா= பொய்யாநாவில் வெளிப்பட்ட பாடல். பூவிரி= நிலத்தை வளமுறச்செய்யும். நாகாடவி= ஆனைக்கா.

**பொழிப்புரை :** குவளைமலர் போல் நீண்டகண்களும், அசையும் இடுப்பும் கொண்ட உயரினத்து அழகிய மகளிர் புடைசூழ, சிறகுடைய அன்னப்பறவைகள் சூழநிற்கும் மயில்போலவும், ஒளிரும் விண்மீன்களின் நடுவில் உள்ள ஒப்பற்ற தூயமுழுநிலவு போலவும் இருந்து; கருணை மலர்ந்து ஒளிரும் கொடியிலிருந்து எழுந்த அழகுபொருந்திய மலைபோன்ற கொங்கைகளைக்கண்டு மிக்க நீர்க்குமிழிகள் உடைய, கட்டுண்ட கூந்தல் கட்டவிழ்ந்து தொங்கிப்பிரிய, கலைவல்லவர்களின் பொய்யாநாவில் வெளிப்பட்ட மிக்க பாடல்களுடையதும், நிலத்தை வளமுறச்செய்கிறதும் ஆகிய காவிரியின் நன்னீரில் நீராடுக. ஆனக்காவில் எழுந்தருளியுள்ள மயிலே! காவிரியின் நன்னீரில் நீராடுக.

( 8 )

மாமயின் மணிஉமிழ் சுரிவளை நின்கர வரிவளை போல்குளிர
மண்குழை யும்படி வருநீர்ப் பூங்குழை வண்குழை போலாடக்
காமர் திருக்கை எனப்பல் திருக்கை கவந்த முழக்கல்செயக்
காஞ்சி ஒதுங்குதல் போலத் தழைகெழு காஞ்சி ஒதுங்கல்கொளத்
தேமலர் இதழ்என வெண்ணகை ஒளியால் செம்மலர் இதழ்வெளிறச்
செறிகார் ஓதி எனப்புனல் உண்டு செழுங்கார் ஓதியுறப்
பூமகள் நாமகள் கோமகள் பொன்னிப் புதுநீர் ஆடுகவே
பூஅலர் சம்புவ னத்தவள் பொன்னிப் புதுநீர் ஆடுகவே.

**குறிப்புரை :** மாமயின்= அழகுடன். மணி= முத்து.. சுரிவளை= வளைந்த சங்கு. கர வரிவளை= கையில் அணிந்த கோடுடைய வளையல். குளிர= ஒலிக்க. மண் குழையும்படி= நிலம் இளகுமாறு. பூங்குழை= மென்மையான தளிர். வண்குழை= பெரிய காதணி. காமர் திருக்கை= அழகிய மேன்மைபொருந்திய கை. கவந்தம் முழக்கல்= நீரினை அடித்து ஒலியெழுப்பல். காஞ்சி= தலைமுடி. தழை கெழு காஞ்சி= தழைகளால்ஆன ஆடை. தே= தேன். செம்மலர்= செந்தாமரை. செறிகார் புனல் உண்டு ஓதி என= மேகக்கூட்டம் நீரில்தோய்ந்து பெண்களின்கரிய கூந்தல்போல் ஆகி. செழுங்கார் ஓதியுற= வளமான மேகத்தின் நீர் சொட்டும்தன்மை பெற. பூமகள்= திருமகள். நாமகள்= கலைமகள். கோமகள்= அருள்தரு அகிலாண்ட நாயகியே. பூ அலர்= பொலிவு மிகுந்த. சம்புவனம்= வெண்ணாவல் காடு.

**பொழிப்புரை :** அழகுடன் விளங்கும் முத்துகளை ஈனும் வளைந்த சங்குகள், நீ கையில் அணிந்த கோடுகளுடைய வளையல்கள் போல் ஒலிஎழுப்ப; நிலம் இளகுமாறுவரும் நீரினால் மென்மையான தளிர்கள் பெரிய காதணிபோல் ஆட; அழகிய மேன்மைபொருந்திய உனதுகையினைப்போல் உன்னுடன் நீராடும் மகளிரின் பல கைகள் நீரினை அடித்து ஒலிஎழுப்ப; நீரில் மூழ்கும்போது கூந்தல் ஒருங்குவது போல் மிக்கதழைகளால் ஆன ஆடை சற்றே ஒதுங்க; தேன்பொருந்திய வெண்டாமரை இதழ்போல் விளங்கும் வெண்மையான பற்களின் ஒளியுடன் செந்தாமரைமலர் போன்ற உன்வாய்இதழ்களின் நிறம் வெளிற; மேகம் நீரில் தோய்ந்து மகளிரின் கரிய கூந்தல்போல் ஆகி, தனது வளமான நீர் சொட்டுதல் பெற; தலைமை சான்றவளே! திருமகள் கலைமகள் ஆகியவர்களுடன் காவிரியின் புதுநீரில் ஆடுக. பொலிவுமிக்க வெண்ணாவல்வனத்தில் எழுந்தருளியுள்ளவளே! காவிரியின் புதுநீரில் ஆடுக

( 9 )

**வேறு**

சேற்று முளைத்த மரைமலர்த்தும் செங்கேழ் இரவி வர(வு)உகவாச்
செறியும் சுடர்க்காஞ் சனநாட்டுத் தெய்வச்சாதி மகளிர்நறா
ஊற்று மலர்க்கற் பகமாலை உயர்தோள் கொழுந ருடன்பவனி
உலவும் பொழு(து)அம் மடமாதர் உடுத்த நுண்தூ(சு) ஒருங்கநனை
வேற்று நிதம்பம் முதலஉறுப்(பு) எல்லாம் எளிது வெளிப்படலால்
இருகண் புதைக்க வெடிவாளை எறிநீர்த் திவலை எழுப்புநல்லோர்
போற்றும் வளவர் நாட்டரசே பொன்னிப் புதுநீர் ஆடுகவே
புழைக்கை அடவி தழைக்கவந்தாய் பொன்னிப் புதுநீர் ஆடுகவே.

**குறிப்புரை :** மரை= தாமரைமலர். கேழ்= நிறம். உகவா= உவந்து. காஞ்சன நாட்டு= பொன்னுலகின். நறா= தேன். ஒருங்க= முழுதும். வேற்று நிதம்பம்= காணகூடாத பெண்குறி. புதைக்க= பொத்திக்கொள்ளும் பொருட்டு. வெடிவாளை= தாவும் வாளைமீன். வளவர்= சோழர். புழைக்கை அடவி= ஆனைக்கா.

**பொழிப்புரை** : சேற்றில் முளைத்த தாமரைமலரை மலரச்செய்யும் செவ்வொளியுடைய ஞாயிற்றின் வரவால் மகிழ்ந்து, ஒளிசெறியும் பொன்னுலகத் தேவமகளிர் தேன்சொரியும்கற்பக மலரால் தொடுக்கப்பெற்ற மாலையணிந்த உயர்ந்த தோள்களுடைய தம் கணவருடன் பவனிவரும்போது, கணவர் அணிந்த கற்பகமாலையின் தேன்; மிகமென்மையான ஆடைகாரணமாகஅவ்விளமகளிரின் பிறர்யாரும் காணக்கூடாத பெண்குறி முதலிய எல்லா உறுப்புகளையும் முழுமையாக நனைக்க, அதனால் உறுப்புகள் புலப்படுதலால் அனைவரும் தத்தம் கண்களைப் பொத்திக்கொள்ளுமாறு காவிரியின் நீர்த்திவலை தெறிக்க வாளைமீன் தாவும். இவ்வாறு நல்லவர் போற்றும் சோழநாட்டு அரசியே! காவிரிப் புதுநீரில் ஆடுக. ஆனைக்கா தழைக்க எழுந்தருளியுள்ளவளே! காவிரிப் புதுநீரில் ஆடுக.

( 10 ) கார்ஆர் கங்குற் பொங்கர்நெடும் கமுகின் தரளத் தாம்(பு)அசைத்து
காசு குயிற்றும் உடல்ஊசல் கதுவப் பூட்டிக் கழல்வீரர்
வார்ஆர் களபத் தனத்தியரை மருவி இருந்தத் தாம்(பு)அசைக்க
வானம் அளவக் கமு(கு)அசைந்(து)அவ் வானத் தருக்கொம்(பு) அசைப்பதனால்
தார்ஆர் குழல்நின் புகழ்பாடித் தழைத்(து)ஆ டுவர்கள் எனநினைந்(து)அத்
தருநாள் மலர்கள் நனிபொழியத் தண்தேன் பெருகும் கடிவடிவாள்
போர்ஆர் வளவர் நாட்(டு)அரசே பொன்னிப் புதுநீர் ஆடுகவே
புழைக்கை அடவி தழைக்க வந்தாய் பொன்னிப் புதுநீர் ஆடுகவே.

**குறிப்புரை** : கங்குல் கார்ஆர்= இரவுபோல் ஆக்கும் மேகம் செறிந்த. பொங்கர்= சோலை. தரளத்தாம்பு= திரண்ட கயிறு. அசைத்து= கட்டி. காசு குயிற்றும்= காசுக்கட்டி பூசிய. கதுவ= இறுக. வார்= கச்சு. மருவி இருந்த= கூடிஇருந்த. அளவ= பொருந்த. வானத்தரு= கற்பகமரம். தார் ஆர் = மாலை சூடிய. தழைத்து= மனம் மகிழ்ந்து. அத்தரு= அக்கற்பகமரம். நாள்மலர்= புதுப்பூ. கடி வடி வாள்= கூர்மையாக வடிக்கப்பெற வாள்.

**பொழிப்புரை** : மணப்பொருள் பூசிக் கச்சினைக்கட்டிய கொங்கையுடைய மகளிரைக்கூடி இருந்த வீரக்கழல் அணிந்த வீரர்கள், இரவுபோல் ஆக்கும் சோலையில் உள்ள மிகஉயரமான பாக்கு மரத்தில் திரண்டகயிற்றைக்கட்டி, காசுக்கட்டி பூசியமகளிரின் உடல் ஆகியஊசலை இறுகக்கட்டி, அவ்வூசல் கயிற்றை அசைத்துஆட்ட, அதனால் வானளாவிய அக்கமுகு அசைய, அதுகண்ட கற்பகமரம், மாலைசூடிய கூந்தலுடைய உனது புகழைப்பாடி மனம்மகிழ்ந்து ஆடுவர் என்று நினைத்துப் புதுப்பூக்களைச் சொரிய, அப்பூக்களின் தேன்பெருகும் வளம்வாய்ந்தநாடாகிய கூர்மையாக வடிக்கப்பெற்ற வாட்போர் வல்ல சோழர்களின் நாட்டுஅரசியே! காவிரிப்புது நீரில் ஆடுக. ஆனைக்கா செழிக்க எழுந்தருளியுள்ளவளே! காவிரிப் புதுநீரில் ஆடுக.

## நீராடற்பருவம் முற்றிற்று

*******************************************

## பொன்னூசல் பருவம்

************************************

( 1 ) வெள்ளிக் கொழுங்கதிர் விரிக்கும்வயி ரக்கால் வெயில்தொட நிறுத்திஅதன்மீ
வித்துரும விட்டம்இட்(டு) ஒட்டிஎட்டித் தரள வெண்தாம்(பு) இசைத்துத்
துள்ளித் தழைக்கஉமிழ் செங்கேழ் மணிப்பலகை தூக்கிமலர் மாலைவீக்கிச்
சொற்குயின் மலர்க்குயின் முதற்குயின் மொழிச்சியர்கள் சூழ்ந்துநின் றனர்அன்பர்நாத்
தெள்ளிக் கொழிக்கும்நய மதுரமொழி யொடுகொடுஞ் சிறியேன்சொல் வறியபுன்சொல்
செவியிட்டு நின்கரு ணைப்பூங் கொழுங்கொம்பு செம்புநா யகர்இடைக்கண்
புள்ளித் தடந்தோல் உடுத்(து)ஆட ஆட்டினவள் பொன்னூசல் ஆடியருளே
பொன்னகர் பொரும்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூசல் ஆடியருளே.

**குறிப்புரை** : வெள்ளி= வெண்மையான. கதிர்= ஒளி. கால்= தூண். வித்துருமம்= பவளம். ஒட்டி எட்டி= நெருக்கமாவும் சற்றே எட்டியும். தாம்பு= மாலை. இசைத்து= கட்டி. துள்ளித்தழைக்க= தரையில் உதைத்து ஊஞ்சலை ஆட்டி மகிழ. செங்கேழ்= செவ்வொளி. தூக்கி= தொங்கவிட்டு, வீக்கி= கட்டி, சொற்குயின்= கலைமகள். மலர்க்குயின்= திருமகள். முதல்= முதலான. குயின்மொழிச்சியர்= குயில்போல் பேசும்மகளிர். தெள்ளிக்கொழிக்கும்= தெளிவாகப் பாராட்டும். சிறியேன் சொல்= கீழான என்சொல். செவியிட்டு= கேட்டு.

செம்புநாயகர்= வெண்ணாவலீசர். இடைக்கண்= இடையில். தட புள்ளித்தோல்= பெருமைபொருந்திய மான்தோல். ஆட ஆட்டினவள்= திருக்கூத்தியற்றச் செய்தவள். பொரும்= ஒத்த. காவைநகர்= ஆனைக்கா.

**பொழிப்புரை** : செழித்த வெண்மையான சுடர்விடும் வயிரைத்தூணை வெயில்படுமாறு நட்டு, அதன்மேல் பவளத்தாலான விட்டமிட்டு, நெருக்கமாகவும் சற்றே எட்டியும் வெள்ளிய முத்துமாலைகள் கட்டித் தொங்கவிட்டு, தரையில் உதைத்து ஊஞ்சலை ஆட்டிமகிழ செவ்வொளிஉமிழும் மணிகள் பதித்த பலகையை இருக்கையாகக் கட்டித்தொங்கவிட்டு, மலர்மாலைகளைக்கட்டி, குயில்போல்பேசும் கலைமகள் திருமகள் முதலியவர்கள் சூழ்ந்து நிற்க, அன்பர்கள் தம் நாவால் தெளிவாகப்பாராட்டும் நயமான இனியசொல்லுடன், கொடிய கீழான எனது பொருளற்ற அற்பச்சொல்லையும் கேட்டு, உனது கருணையே வடிவானவரும், மென்மையான வளமான கிளைகளுடைய வெண்ணால் மரத்தடியில் எழுந்தருளியுள்ளவருமாகிய அருள்தருவெண்ணாவலீசர், தமது இடுப்பில் பெருமைபொருந்திய மான்தோல் உடுத்திகொண்டு திருக்கூத்து இயற்றச்செய்தவளே! பொன்னூசல் ஆடியருள்க. தேவருலக அமராவதிநகர் ஒத்த நல்லநகராகிய ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள பாவையே! பொன்னூசல் ஆடியருள்க. .

( 2 ) கொடிபூத்த துடியிடை துவண்(டு)ஆட நறவுவிரி கோதைவண்(டு)ஓல்
கொண்(டு)ஆட வயிரச் செழுங்கால் பசப்புறு கொழுங்கால தாநின்மேனிக்
கடிபூத்த பச்சொளி மலர்ந்(து)ஆட வெண்ணகை கலந்துஆட இருகுழைஉலாம்
கா(து)ஆட ஊசலா டுந்தொறும்எம் ஐயன் கருத்துநின்(று) ஊசலாடப்
படிபூத்த வெள்ளப் பரப்(பு)என விரைத்துப் பரந்து)எழும் கருணைவெள்ளப்
பரவையுள் பாடிக் கரம்குவித்(து) ஆடிஅழல் பட்டமெழு(கு) ஒத்(து)உருகும்வெண்
பொடிபூத்த மேனிஅடி யாரைநன்(கு) ஆட்டுமயில் பொன்னூசல் ஆடியருளே
பொன்னகர் பொரும்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூசல் ஆடியருளே.

**குறிப்புரை** : பூத்த= பொலிவுபெற்ற. கோதைவண்டு= கூந்தலில் மொய்த்த வண்டு. ஓல்கொண்டு= ஒலிஎழுப்பி. கால்= தூண். கடி= அழகு. பச்சொளி= பச்சைநிற ஒளி. நகை= பல். ஊசலாட= மகிழ. படி= உலகு. விரைத்து= விரைவில். பரவை= கடல். வெண்பொடி= திருநீறு. ஆட்டும்= இயக்கும்.

**பொழிப்புரை** : கொடிபோன்றதும், பொலிவுபெற்ற உடுக்கைபோன்றதும் ஆகிய இடுப்புத் துவண்டு ஆடவும், தேனொழுகும் கூந்தலில் வண்டுகள் ஒலிஎழுப்பி மொய்க்கவும், செழித்த வயிரத்தூண்கள் உன் உடம்பின் அழகுமலர்ந்த பசிய ஒளியால் பசப்புறவும், வெண்பற்களில் புன்னகை கலந்து ஒளிரவும். இருகாதுகளில் ஆடும்குழைகள் காரணமாகக் காதுகள் ஆடவும் , நீ ஊஞ்சலாடும்பொழுதெல்லாம் சிவபிரானின் மனம் மகிழவும், உலகில் பரவிய வெள்ளபெருக்குப்போல் பரவிய உன்கருணைவெள்ளக் கடலில் படிந்து பாடியும் கைகூப்பிஆடியும் அழலில்பட்ட மெழுகுபோல் மனம் உருகுகின்றவராகிய வெண்ணீறு பூசிய உடம்புடைய அடியவரை இயக்கும் மயிலே! பொன்னூசல் ஆடியருள்க. தேவருலக அமராவதிநகர் ஒத்த ஆனைக்காவாகிய நல்ல நகரில் எழுந்தருளியுள்ள பாவையே! பொன்னூசல் ஆடியருள்க.

( 3 ) மாவந்த மணிமுடி அனந்தன்நா மத்(து)அரவின் வார்உடல் துவள்வ(து)என்ன
வாங்குநுண் இடைபுவனம் யாவும்அசை யத்துவள மதுரம் பழுத்(து)ஒழுகுசெந்
நாவந்த சொற்கொடு பழிச்சுவர் பவக்கடலை நக்குகரு ணைக்கடலுள்விண்
நா(டு)அளவ வெண்திரை எழுந்தென அரம்பையர்கை நறுமலர்க் கவரிதுள்ளக்
காவந்த தொல்புவி இயற்றவும் நிறுத்தவும் கட்(கு)அரிய தாயதுகளாக்
காணவும் அயக்கவும் அளிக்கவும் சற்றே கடைக்கணித்(து) ஏவலர்களாப்
பூவந்த ஒருவன்முதல் ஐவரையும் ஆட்டுபவள் பொன்னூசல் ஆடியருளே
பொன்னகர் பொரும்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூசல் ஆடியருளே.

**குறிப்புரை** : மாவந்த= பெருமைபொருந்திய. அனந்தன்= ஆதிசேடன். நாமத்து= பெயருடைய. வார் உடல்= நீண்ட உடம்பு. துவளவாங்கு என்று கூட்டுக. வாங்கு= உள்வளைந்த. அசைய= தங்க. பழிச்சுவர்= போற்றுகிறவர். பவக்கடல்= பிறவிக்கடல். நக்கு= தீர்க்கும். என= போல. துள்ள= இரட்ட. காவந்த= சோலைகளுடைய. இயற்ற= படைக்க. நிறுத்த= காக்க. கட்கு அரிய துகளாக் காணவும்= காணுதற்கரிய துகளாக்கவும். அயக்க= மறைக்க. அளிக்க= கருணைகாட்ட. கடைக்கணித்து= அருள்புரிந்து. ஏவலர்=

பணியாளர். பூவந்த ஒருவன்முதல் ஐவர்= நான்முகன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகிய ஐவர். ஆட்டுபவள்= இயக்குகிறவள்.

**பொழிப்புரை** : பெருமைபொருந்திய மணிமுடியுடைய அனந்தன் என்ற பெயருடைய பாம்பின் நீண்ட உடல் துவள்வதுபோல், உள்வளைந்து துவண்ட நுண்ணிய இடுப்பில் அண்டம் அனைத்தும் தங்க, நாவில் இனிமைபழுத்து ஒழுகும் சொற்களால் போற்றுகிறவர்களின் பிறவிக்கடலைத் தீர்க்கும் உனதுகருணைக் கடலுள் உள்ளவர்களாகிய அரம்பையர்தம் கைகளில் ஏந்திய நறுமலர்களால்ஆன கவரி, தேவருலகை அளாவிய வெண்மையான பாற்கடல்அலை போல் துள்ள, சோலைகளுடன் கூடிய தொன்மையான நிலவுலகத்தைப் படைக்கவும், காக்கவும், அழிக்கவும், மறைக்கவும், அருளவும் ஆகிய ஐந்தொழில் புரியும் நான்முகன், திருமால், உருத்திரன், மகேசன், சதாசிவன் ஆகியோரை இயக்குகிறவளே! பொன்னூசல் ஆடியருள்க. தேவருலக அமராவதிநகர் ஒத்த ஆனைக்காவாகிய நல்ல நகரில் எழுந்தருளியுள்ள பாவையே! பொன்னூசல் ஆடியருள்க.

**விளக்கம்** : ஐந்தொழில் புரியும் ஐவரையும் இயக்குகிறவள் அம்மையே. சிவனல்லன்.

" முன்அருட் சத்தி தன்பால் முளைக்கும்தா முளையா னன்றே " ( சித்தி 88 )

" அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கை எல்லாம் " ( சித்தி 89 )

" சீராட்டு நினக்கு இலைஅச் சீராட்டும் சிறுமருங்குல்
பேராட்டி விளையாட்டு நின்பெயர்த்தாகி நடந்ததே "( சிதம்பரச் செய்யுள்கோ.........68: தாழி.2 )

( 4 ) கூரொடும் ஒள்ஒளி அயிற்படை பரித்துவெண் குறுநகை நிலாவிரித்துக்
குதைவரிச் சிலைவாள் எடுத்துக் கடுத்(து)அமர் குறித்(து)இதழ் கறித்துவருசூல்
காரொடு செடிஉடல் கடைக்கனல் தூங்குகண் கடையுடைப் படைஅவுணர்ஆ
கவபூமி யுள்சிர கரம்தறி படப்பல கவந்தம்நின்(று) ஆடஅன்னார்
தார்ஆடு மார்பம் திறந்துஒழுகு செங்குருதி சலராசி ஏழும்ஒன்றாத்
தடவிப் புறப்புணரி யும்கோப்ப அண்டத்த லப்பித்தி தத்திவிழவெம்
போராடும் ஒருகுழவி தொட்டில்தொட்(டு) ஆட்டினவள் பொன்னூசல் ஆடியருளே
பொன்னகர் பொரும்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூசல் ஆடியருளே.

**குறிப்புரை** : கூர்= கூர்மை. பரித்து= தாங்கி. குதை= வில்லின் நுனி. கடுத்து= கடுமையாக. கறித்து= கடித்து. சூல் கார்= கருக்கொண்ட மேகம் - கார்மேகம். செடி= துர்நாற்றம். கனல் தூங்கு கடைக்கண்= சினம்பொருந்திய கடைக்கண். ஆகவபூமி= போர்க்களம். தறிபட= துண்டுபட. கவந்தம்= தலையற்ற முண்டம். சலராசி= நீர்வாழுயிர்கள். ஒன்றாத்தடவி= தடுமாறச் செய்து. புறப்புணரி= பக்கத்துக்கடல். கோப்ப= கலப்ப. பித்தி தத்தி= சுவர் இடிந்து. ஒருகுழவி= ஒப்பற்ற முருகன்.

**பொழிப்புரை** : கார்மேகம் ஒத்ததும் துர்நாற்றம் வீசுவதுமாகிய உடம்புடன், சினம்பொருந்திய கடைக்கண்களுமுடைய அசுரர்படையுடன்செய்த போரில், போர்க்களத்தில் அவர்களின் கையும் தலையும் துண்டுபட, தலையற்ற முண்டங்கள் பலநின்று ஆட, அவர்களின் மாலையசையும் மார்பைப்பிளந்ததால் பெருகும் செங்குருதியானது நீர்வாழ் உயிரினங்களை ஒருசேரத் தடுமாறச்செய்து, பக்கத்தில் உள்ள கடலில்கலக்கவும், அண்டத்தின் எல்லையான சுவர்இடிந்து விழவும்; கூர்மையுடன் பளபளக்கும் வேல் தாங்கி,வெண்சிறுபல் ஒளிவீச, நுனிகளை இழுத்துக்கட்டப்பெற்ற வில்லுடன் வாளேந்தி, பெரும்போர் குறித்து உதட்டினைக்கடித்துக் கொண்டு; அவுணர் படையுடன் போரிட்ட ஒப்பற்ற குழந்தையாகிய முருகனது தொட்டிலை ஆட்டியவளே! பொன்னூசல் ஆடியருள்க. தேவருலக அமராவதி நகரொத்த ஆனைக்காவாகிய நல்ல நகரில் எழுந்தருளியுள்ள பாவையே! பொன்னூசல் ஆடியருள்க.

**விளக்கம்** : போர்வெறியுடன் போராடும் வீரனின் தலையற்றுவீழ்ந்தபோதும், போர்வெறிகாரணமாக அவனது முண்டம் போர்க்களத்தில் நின்று ஆடுவதைக் கவந்தம் ஆடல் என்பது புறப்பொருள்மரபு.

( 5 ) தெள்ளார் பெருந்திரைத் தோன்(று)அமுது கைப்பச் செழுங்குயில் திகைப்பநவிலும்
தெய்வதச் சைவச் செழும்பூங் கொழுங்கொம்பு செங்கேழ் எறிக்கும்மணியால்
கள்ளார் மலர்த்தொடையல் நாற்றிச் சமைத்தபல கைக்கண்உற்(று) ஆடுதோற்றம்
கதிர்மண்ட லம்புக்க அமுதமய மானதண் கதிர்மண் டலத்தைஏய்ப்ப
நள்ளார் எனும்சமணர் தழையாது குழையாது நட்டதரு ஏறமடல்ஓர்
நதிஏற உயிர்கள்சிவ கதிஏற மதிஏற நகில்ஏறு பான்மர்ஆளப்

புள்ஆர் புனல்புகலி வள்ளற்(கு) அருத்தினவள் பொன்னூசல் ஆடியருளே
பொன்னகர் பொரும்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூசல் ஆடியருளே.

**குறிப்புரை :** தெள்= தெளிவு. திரை= அலைகளுடைய பாற்கடல். நவிலும்= பேசும். செங்கேழ்= செவ்வொளி. மணி= மாணிக்கம். கள்= தேன் . தொடையல் நாற்றி= மாலைகளைத் தொங்கவிட்டு. சமைத்த= உண்டாக்கிய. பலகை= ஊஞ்சல் பலகை. கதிர்மண்டலம்= சூரிய மண்டலம். தண்கதிர் மண்டலம்= குளிர்ந்த ஒளிதரும் சந்திரமண்டலம். ஏய்ப்ப= ஒத்துவிளங்க. நள்ளார்= பகைவர். தரு= கழுமரம். மடல்= வாழ்க அந்தணர் என்றுதொடங்கும் பதிகம். மதி= ஞானம். நகில்ஏறு பான்மர்= மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் முதலிய மகளிர். ஆள= நாட்டினை ஆட்சிசெயும்பொருட்டு.

**பொழிப்புரை :** தெளிந்த பெரிய அலைகளுடைய பாற்கடலில் தோன்றிய அமுதம் கசக்கவும். இனியகுயில் திகைக்கவும் பேசும் தெய்வத்தன்மை வாய்ந்தவளும், சைவநெறிப்பட்ட செழித்த மென்மையான கொழுத்த கொம்புமாகிய நீ; செந்நிறம் ஒளிரும் மணிகளால் ஆனதும், தேன்பொருந்திய மலர்மலைகள் தொங்கவிடப்பெற்றதுமாக அமைந்த ஊஞ்சற்பலகையிலேறி ஆடும்காட்சி, சூரியமண்டலம் புகுந்த அமுதமயமான தண்ணிய சந்திரமண்டலம் ஒத்து விளங்க; "வாழ்க அந்தணர்" என்று தொடங்கும் பதிகஏடு வைகையை எதிர்த்து நீந்தித் திருஏடகத்தில் கரைஏற, அதனால் தழைக்காதும் வளையாதும் நட்ட கழுமரத்தில் பகைவராகிய சமணர்கள் ஏறவும், உயிர்கள் சிவகதியைப்பின்பற்றவும், நாட்டில் ஞானம் மிகவும், கொங்கைகள் பெற்ற மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் பாண்டியநாட்டை ஆளவும்; பறவைகள் மொய்க்கும் நீர்வளமுடைய சீர்காழிவள்ளலாகிய திருஞாசம்பந்தர்க்கு ஞானப்பால் அருத்தினவளே! பொன்னூசல் ஆடியருள்க. தேவருலக அமராவதி நகரொத்த ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள பாவையே! பொன்னூசல் ஆடியருள்க.

**விளக்கம் :** சூரியமண்டலம் புகுந்த சந்திரமண்டலம் : மாணிக்கமணியால் செவ்வொளி வீசும் ஊஞ்சற்பலகை சூரியமண்டலம்; ஏறிஅமர்ந்த அம்மை சந்திரமண்டலம் என்க.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் உவமையணி. ( கூடாவுவமையணி எனலாம் )

( 6 ) தங்கும் பெருங்குரல் கொண்டலைத் தாங்கும்இன் தண்டலைப் பசியபூகத்
தருஇணை நடுப்படும் கவிழ்இணர்ச் சூதம்மென் சந்தனக் கால்அரும்ப
எங்கும் கொழுந்தழல் செந்நிறம் அரும்பிய(து) எனத்தளிர் அரும்பநோக்கி
இனிதுவந்து ஒருகுழை இருந்(து)அசைந்(து) ஆடும்ஓர் இளம்கரும் குயில்கடுப்பச்
செங்குங் குமச்சே(று)அளாவிய குயப்பொறைச் சிற்றிடை நுடங்கநெற்றிச்
செங்கண் கரும்களச் செக்கர்வான் உட்களி சிறந்திடக் கருணைவெள்ளம்
பொங்கும் படிக்(கு)இனி(து) உலாவும் கலாபமயில் பொன்னூசல் ஆடியருளே
பொன்னகர் பொரும்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூசல் ஆடியருளே.

**கூட்டுமுறை :** மென்சந்தனக் கால்அரும்ப, கவிழ் இணர்ச் சூதம் எங்கும் கொழுந்தழல் செந்நிறம் அரும்பியதெனத் தளிர் அரும்ப நோக்கி, இனிதுவந்து ஒருகுழை இருந்து ஆடும் ஓர்இளங்கருங்குயில் கடுப்பச்; செங்குங்குமச் சேறு அளாவிய குயப்பொறைச் சிற்றிடை நுடங்க, நெற்றிச்செங்கண் கருங்களம் செக்கர்வான் உள் களி சிறந்திடக் கருணை வெள்ளம் பொங்கும்படிக்கு இனிது உலாவும்கலாபமயில்; தங்கும்பெருங்குரல் கொண்டலைத்தாங்கும் இன்தண்டலைப் பசிய பூகத்தரு இணைநடுப்படும் பொன்னூசல் ஆடியருளே. பொன்னகர் பொரும்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூசல் ஆடியருளே.

**குறிப்புரை :** மென்சந்தனக்கால்= பொதிகைமலையின் மென்மையான தென்றல். கவிழ் இணர்ச்சூதம்= தளிர்களின் செறிவால் கொம்புகள் கவிழ்ந்து தொங்கும் மாமரம். கொழுந்தழல் செந்நிறம்= மிக்க தழலின் செந்நிறம். குழை= தளிர்க்கொத்து. கடுப்ப= ஒப்ப. குயப்பொறை சிற்றிடை= முலைகளைத் தாங்கிய மெல்லிடை. நுடங்க= அசைய. நெற்றிச் செங்கண்= நுதலின் நெருப்புக்கண். கருங்களம்= நஞ்சினால் கருமைபெற்ற கழுத்து. செக்கர்வான்= செவ்வான் போன்ற திருமேனியுடையவர் - சிவபிரான். உள்களி சிறந்திட= மனம் மிக்ககளிப்புக்கொள்ள. கலாபமயில்= தோகை மயில். பெருங்குரல்= இடி. கொண்டல்= கார்மேகம். தண்டலை= சோலை. பூகத்தரு= பாக்குமரம். இண= இரண்டு.. நடுப்படும்= நடுவிலுள்ள

**பொழிப்புரை :** பொதிகையின் மென்மையான தென்றல்காற்று வீச, தளிர்களின்செறிவால் கொம்புகள் கவிழ்ந்து தொங்கும்மாமரம் மிக்க தழலின் செந்நிறம் அரும்பியது என்னுமாறு தளிர்களை அரும்ப, அதுகண்ட ஒரு இளங்கருங்குயில் இனிதுவந்து ஒருகுழையில் அமர்ந்து ஆடுவதுபோல; செந்நிறக் குங்குமச்சேறு பூசிய முலைகளின் கனத்தைத் தாங்கும் மெல்லிய இடைஅசைய; நுதலில் நெருப்புக்

கண்ணும்,நஞ்சினால் கருநிறம்பெற்ற கழுத்தும், செவ்வான் அன்ன மேனியும்உடைய சிவபிரான் தமது மனத்தில் மிக்ககளிப்புக்கொள்ளுமாறு, கருணைவெள்ளம் அண்டமெங்கும்பொங்க உலாவும் தோகைமயிலே! பெரிய இடி தங்கிய கார்மேகத்தைச் சுமக்கும் குளிர்ச்சியான சோலையில், வளமான இரண்டு பாக்குமரங்களுக்கு நடுவில் அமைந்த பொன்னூசலில் ஆடியருள்க. தேவருலக அமராவதி நகரொத்த ஆனைக்காவாகிய நன்னகரில் எழுந்தருளியுள்ள பாவையே! பொன்னூசல் ஆடியருள்க.

( 7 ) தா(து)ஆர் கடுக்கைஅணி எம்பிரான் நபவாணர் தம்பிரான் முடியன்றுபூந்
தாமரை இடத்தன்முழு விண்ஆளி தரித்தமணி முடிகள்அன்னார்
ஆதாரம் நீஎன வணங்கினார் கொம்மைமுலை அம்மைபொன் ஊசலைஉகைத்து
ஆடும்அம யத்துநின் அனிச்சமலர் நச்(சு)அடிகள் அம்முடிக ளிற்படாமே
கா(து)ஆர் குழைத்தோ(டு) இளம்பருதி பொலியஒண் கமலமுகம் மலரநாசிக்
கவின்முத்தம் நில(வு)உமிழ வாய்ஆம்பல் மலரக் கரந்(து)இரு சுடர்க்கும்அஞ்சிப்
போ(து)ஆர் குழல்கருள் கற்றைசுவல் சுற்றிடப் பொன்னூசல் ஆடியருளே
பொன்னகர் பொரும்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூசல் ஆடியருளே.

**குறிப்புரை :** தாது= தேன். கடுக்கை= கொன்றைமலர் நபவாணர்= வானுலகில் வாழ்வோர். பூந்தாமரை இடத்தன்= அழகிய தாமரைமலரில் வாழும் நான்முகன். முழுவிண் ஆளி= தேவருலகம் முழுவதையும் ஆளும் இந்திரன். ஆதாரம்= அடிப்படை. கொம்மை= திரட்சி. உகைத்து= செலுத்தி. நச்சு= விரும்பும். படாமே= படாமல். நாசிக்கவின்முத்தம்= மூக்கின் நடுநரம்பிலிருந்து அழகுடன் தொங்கும் முத்து - புல்லாக்கு. இருசுடர்க்கும் அஞ்சிக்கரந்து= இளம்பருதி, நிலவு ஆகிய இரண்டுக்கும் அஞ்சி ஒளிந்துகொண்டு. கருள்= இருள். சுவல்= பிடர்.

**பொழிப்புரை :** அழகிய தாமரை மலரில் வாழும் நான்முகன், வானுலகம் முழுவதையும் ஆளும் அழகிய முடிசூடிய இந்திரன் முதலியோர், தாயே! முடிசூடிய எம்வாழ்வுக்கெல்லாம் ஆதாரம் நீதான் என்று வணங்க. திரண்ட முலைகளுடைய தாயே! நீ பொன் ஊசலைச் செலுத்தி ஆடும்சமயம்; அனிச்சமலரும் விரும்பும் உனது திருவடிகள்; தேன்பொருந்திய கொன்றைமாலை அணிந்தவனும் தலைவனும் ஆகிய சிவபிரானின் முடியில் மட்டுமன்றி பிறர் முடிகளிலும் படாமல், காதில் அணிந்த குழையுடன்கூடிய தோடு இளஞ்சூரியன்போல் ஒளிவீசுவதால் ஒளிரும்தாமரைமலர் போன்றஉன் முகம் மலர, மூக்கில் தொங்கும் புல்லாக்குஆகிய முத்து நிலவின் ஒளிவீசுவதால் உன்வாய்இதழ்கள் ஆகிய செவ்வாம்பல் மலர; இவ்விரு சுடர்க்கும் அஞ்சி மலர்சூடிய இருள்ஆகிய கரியகுழல்கற்றை உன்பிடரில் சுற்றிக்கொள்ளப் பொன்னூசல் ஆடியருள்க. வானுலக அமராவதிநகர் ஒத்த ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள பாவையே! பொன்னூசல் ஆடியருள்க.

**விளக்கம் :** அனிச்சமலர் மகளிரின் அடிகளினும் மென்மையானது . "அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்குநெருஞ்சிப்பழம் " ( திருக்குறள் 1120 ). இனம் இனத்தோடு என்பதால்"அனிச்சமலர்நச்சுஅடி" என்றார்.

( 8 ) பண்ணியற் கும்பிழை அளித்(து)இனிய தெள்விளிப் பாண்முரலும் வரிமிடற்றுப்
பைஞ்சிறை அளிக்குலம் உழக்கவர மாதர்கைப் பங்கயம் பொழிமலர்நறாக்
கண்ணியில் சூழக் கிடப்ப(து)என் அம்மைநின் கழல்மென்மை கவர்தல்ஏய்ப்பக்
கயல்பசிய வள்ளையொடு முட்டிமீண் டால்எனக் கண்குழையை முட்டிமீள
எண்ணில்பொற் பூவினம் இருப்பமூ டித்திறந்(து) இகுளையர் மனைக்குநாளும்
இன்னா இழக்கின்ற(து) உன்னிஅம் செங்கர இதழ்க்கமல மலர்கொடுஎங்கள்
புண்ணியர் திருக்கண் புதைத்துத் திறந்தபெண் பொன்னூசல் ஆடியருளே
பொன்னகர் பொரும்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூசல் ஆடியருளே,

**குறிப்புரை :** பண் இயல்= இசைப்பாட்டு. அளித்து= கூறி. விளிப்பாண்= இசை. மிடற்று= கழுத்துடைய வரி= கோடு. அளிக்குலம்= வண்டினம். உழக்க= மிதிக்க. வர= மேலான. கைப்பங்கயம்= கையில் ஏந்திய தாமரைமலர். நறாமலர்க்கண்ணி= தேன்பொருந்திய மலர்மாலை. என் அம்மை நின்.........ஏய்ப்ப பண்ணியற்கும் பிழை............சூழக்கிடப்பது என் என்று கூட்டுக. கயல்= கெண்டையாகிய கண். .வள்ளை= வள்ளைக்கொடியாகிய காது. எண்ணில்= எண்ணற்ற. மூடித் திறந்து= குவித்தும் மலர்த்தியும். இகுளையர்

மனை= தோழியராகிய திருமகள் கலைமகள் வீடு - செந்தாமரை, வெண்டாமரை. இன்னா= துன்பம். புண்ணியர்= சிவபிரான். கைமலர்கொடு புதைத்துத் திறந்த= கையாகிய மலரால் பொத்திய திறந்த.

**பொழிப்புரை :** தாயே! இசைப்பாடலுக்கும் பிழைகூறி, இனிய தெளிந்த இசைமுரலும் கழுத்துடையதும் உடம்பில் கோடுகள் உடையதுமாகிய வண்டினங்கள் மிதிக்க, மேலான மகளிரின் கைத்தாமரையில்ஏந்திய தேன்பொழியும் மலர்மாலை, உன்திருவடியின் மென்மையைக் கவர்ந்துகொள்வதுபோல் திருவடியைச்சூழ்ந்து கிடக்கிறது. கெண்டை மீனாகிய கண், வளமான வள்ளைக்கொடியை முட்டிமீள்வது போல் காதினை முட்டிமீள, எண்ணற்ற அழகிய மலரினம் இருக்கவும் உன்தோழியராகிய திருமகள் கலைமகள் ஆகியவர்களின் வீடுகளாகிய செந்தாமரை வெண்டாமரை ஆகியவற்றை, எனது சிவபிரானின் கண்களாகிய ஞாயிறும் திங்களும் மலர்வித்தும் கூம்புவித்தும் துன்பம்செய்வதால் அவ்விரு திருக்கண்களையும் உன்கையால் புதைத்துப் பின்திறந்தவளே! பொன்னூசல் ஆடியருள்க. வானுலக அமராவதிநகர் ஒத்த நன்னகராகிய ஆனைக்காவில் எழுந்தருளியுள்ளவளே! பொன்னூசல் ஆடியருள்க.

**விளக்கம் :** அம்மை இறைவனது இருதிருக்கண்களையும் கையால் பொத்தித் திறந்தது -

" நாயகன் கண்நயப்பால் நாயகி புதைப்ப எங்கும்
பாயிருள் ஆகிமூட ........... ( சித்தி. சூ.1: 52 )

" கொங்கைப்
பொம்மல்பெரு மாட்டி வெரின்புறத்து எய்தி வல்லே
செம்மல்பிறை வேணிய னார்திருக் கண்பு தைத்தாள் ( காஞ்சிப்புராணம். தழுவக் குழை 26 )

. . " வெறிமலர்த் தளவ மூரல் விழியினை மறைத்து நீக்கும்
சிறுபொழுது உலகுக்கு எல்லாம் எண்ணில்பல் ஊழிசென்று.
மறைநெறி படைப்புச் செய்கை ஆகிய மறுத்த வாற்றால் " ( '' '' 34 )

( 9 ) குரவுகமழ் குழல்ஊசல் ஆடும்எழில் நோக்கிமுக் குடுமிப் படைக்கைஎம்மான்
கோலச் சடாமுடி துளக்கக் கலங்கிக் குதித்துஓடும் அதுபொழு(து)அரா
விரவுகர மும்தனி விதிர்த்திட அதில்பதியும் வெண்டலை இமைக்கஇமையா
விழியாளன் நீத்தல்கண்(டு) எனைநகைக் கின்றதென விரிபகீ ரதியுள்நாண
விரவுமதி தவழ்இமய வரைமகள் எனப்பிறந்(து) எப்பொருப் பும்கைக்கொளா
எள்ளுதல்இல் வெள்ளிமலை கனகமலை மகிழ்நர்க்கும் ஏனைமா மலைகள்யாவும்
புரவுமணி அனஇளைய மைந்தற்கும் ஈந்தபெண் பொன்னூசல் ஆடியருளே
பொன்னகர் பொரும்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூசல் ஆடியருளே.

**குறிப்புரை :** குரவு= குரவமலர். முக்கண்குடுமிப்படை= மூவிலைச் சூலம். துளக்க= அசைத்துமகிழ. விரவு= பொருந்திய. விதிர்த்திட= பாராட்டி அசைய. வெண்டலை= வெண்மையான மண்டையோடு. இமைக்க= சிரிக்க. இமையா விழியாளன்= இமைக்கா விழிகளுடைய சிவபிரான். நீத்தல்= பெருகுதல். பகீரதி= கங்கை. இமயவரை மகள்= பார்வதிதேவி. பொருப்பு= மலை. வெள்ளிமலை= கயிலை மலை. கனகமலை= மேருமலை. மகிழ்நர்= கணவன். புரவுமணியன= காத்தற்குரிய மணிபோன்ற. இளைய மைந்தன்= முருகப்பிரான்.

**பொழிப்புரை :** குரவமலர் சூடிய கூந்தலுடைய அம்மை ஊசல் ஆடும்அழகைப் பார்த்து, மூவிலைச்சூலம் ஏந்திய சிவபிரான் தனது அழகி ய சடைகளுடைய தலையசைத்துச் சுவைத்து மகிழ, அதனால் அதில் இருந்த பாம்பு மனம்கலங்கிக் குதித்துஓடும். ஊஞ்சலாடுவதைப் பாராட்டிக் கை உயர்த்தி அசைக்க, அதில் வாழும் வெண்டலை பாம்பின் செயல் கண்டு சிரிக்க, தன்னிடம் தண்ணீர் பெருகுவதுகண்டு வெண்டலை சிரிக்கிறது என்று கங்கைமனத்தில் நாணுவாள். நிலவுதவழும் இமயமலை மகளாகிய நீ இகழ்ச்சி யில்லாத கயிலைமலை, மாமேருமலை இரண்டையும் கணவனுக்குத் தந்து, பிற சிறந்தமலைகள் அனைத்தையும் இளையமகனாகிய முருகப்பிரானுக்குத் தந்தவளே! பொன்னூசல் ஆடியருள்க. வானுலக அமராவதிநகரை ஒத்த நன்னகராகிய ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள பாவையே! பொன்னூசல் ஆடியருள்க.

( 10 ) வழியும்நறவு ஆறுபட்(டு) அறுகால் உழக்கமலர் மாலைபுனை சீரடியும்மா
மணிநூ புரம்புலம் பும்சிலம் பும்கட்டு மருகிடைச் சேந்தபட்டும்

சுழியும்உவர் எழுகழிய சலதிவயின் வருமணி தொடுத்தமணி மேகலையும்வில்
தோன்(று)ஒட்டி யாணமும் தொகையில்செங் கதிரெனச் சுடர்அரதனப்பணிகளும்
கழியும்ஒளி உமிழ்வயிர வளைபரித்(து) அடியார் கலக்கம்நீக்(கு) அபயவரதக்
கையும்ஒண் தரளம்அணி நாசியும் மணிக்குழைக் காதும்இரு கண்ணும்அருளே
பொழியும்மலர் முகமும்வடி(வு) அழகுபொலி தரஅம்மை பொன்னூசல் ஆடியருளே
பொன்னகர் பொரும்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூசல் ஆடியருளே.

**குறிப்புரை :** ஆறுபட்டு= ஆறாகப்பெருகும். அறுகால்= வண்டுகள். உழக்க= மிதிக்க. நூபுரம் சிலம்பு என்பன கால் அணிகலன்கள். புலம்பும்= ஒலிக்கும். மருகிடைக் கட்டு= இடுப்பில் கட்டிய. சேந்த பட்டு= செந்நிறப்பட்டு. சுழியும்= சுழித்துவரும். உவர் கழிய எழு= உப்புத்தன்மை மிக்குத்தோன்றும். சலதி= கடல். மணி= முத்து. வில்= ஒளி. தொகையில்= எண்ணற்ற. அரதனப் பணி= இரத்தினங்கள் பதித்த அணிகலன். கழியும்= மிகுதியாக. பரித்து= அணிந்து. தரளம் அணி நாசி= முத்துப்புலாக்கு அணிந்த மூக்கு. வடிவு= நன்னிறம்.

**பொழிப்புரை :** வண்டுகள் மிதித்தலால் வழியும்தேன் ஆறகப்பெருகும் மலர்மாலை அணிந்த சீரடியும், சிறந்த அழகிய நூபுரம் ஒலிக்கும் ஒலியும், இடுப்பில் கட்டிய செம்பட்டும், சுழித்துவரும் உப்புத்தன்மை மிக்க கடலில் தோன்றும் முத்துகளால் ஆன மணிமேகலையும், ஒளிரும் ஒட்டியாணமும், எண்ணற்ற செஞ்ஞாயிறுபோல் விளங்கும் இரத்தினங்கள் பதித்த அணிகலன்களும், மிக்க ஒளிவீசும் வயிரவளையல் அணிந்து அடியவர் மனக்கலக்கம் நீக்கும் அபய வரதக்கரங்களும், ஒளிபொருந்திய முத்துப்புல்லாக்கு அணிந்த மூக்கும், அழகிய குழையணிந்த காதும், இருகண்களும், அருளே பொழியும் மலர்முகமும் முதலியவற்றுடன் நன்னிறமும் அழகும் பொலியும் அம்மையே! பொன்னூசல் ஆடியருள்க. வானுலக அமராவதி நகர்போன்ற நன்னகராகிய ஆனைக்காவில் எழுந்தருளியுள்ள பாவையே! பொன்னூசல் ஆடியருள்க.

**திருவானைக்கா அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ் முற்றும்**

****************************************************************************************************